# காப்பியங்களில் அறமாந்தர்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் ( Ph.D.,) பட்டத்திற்குப்

பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**பா. தென்றல்**

பதிவு எண். 1606

நெறியாளர்

முனைவர் **மு.சுதா**

இணை நெறியாளர்

பேரா. முனைவர் **மு.பாண்டி**




**தமிழ்த்துறை**

# அழகப்பா பல்கலைக்கழகம்

**(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் 'A' மதிப்புப் பெற்றது)**

**காரைக்குடி - 630 003**

**இந்தியா**

**ஜுலை - 2013**

முனைவர்.மு.சுதா,
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3.

நாள் :

## நெறியாளர் உறுதிமொழி

“**காப்பியங்களில் அறமாந்தர்கள்**” என்னும் தலைப்பில் திருமதி.பா.தென்றல் அவர்கள் முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அவர் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக இதற்குமுன் வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(முனைவர்.மு.பாண்டி)
இணை நெறியாளர்

(முனைவர்.மு.சுதா)
நெறியாளர்

**பா.தென்றல்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3.

நாள் :

# ஆய்வாளர் உறுதிமொழி

**"காப்பியங்களில் அறமாந்தர்கள்"** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

**(பா.தென்றல்)**
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்
முனைவர்.மு.சுதா,
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-3.

# நன்றியுரை

''காப்பியங்களில் அறமாந்தர்கள்'' என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்கு ஆய்வு செய்ய வாய்ப்பாக அமைந்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும், வள்ளல் அழகப்பருக்கும், இவ்வாய்விற்கு அனுமதி அளித்த, துறைத் தலைவர் முனைவர் மு. பாண்டி அவர்களுக்கும் எனது நன்றிகள்.

ஆய்வு செம்மையுற அமைய பல வழிகளிலும் உதவி புரிந்து, நெறிப்படுத்தியும் ஊக்கப்படுத்தியும் வழிகாட்டிய என் தாய்க்கு நிகரான அன்பிற்கிகந்த நெறியாளர் முனைவர் மு.சுதா அவர்களுக்கும் என் பலகோடி நன்றி உரியதாகும்.

எனக்கு உயர்கல்வி நல்கிய எனது பெற்றோர்களான திரு.கி.பாண்டியன் – திருமதி பா.தவமணி ஆகியோருக்கும், எனது ஆய்விற்கு பலவழிகளிலும் உடனிருந்து உதவிய கணவர் திரு.செ.முத்துக்குமார் அவர்களுக்கும், எனது தமக்கை ஓவியா, தமையன் பகீரதன் ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டுள்ளேன்.

எனது ஆய்வுக்கு உதவிய நூலகங்கள் அனைத்திற்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன். நன்முறையில் தட்டச்சு செய்து உதவிய அறந்தாங்கி பிரியா கணினித் தட்டச்சு நிறுவனத்திற்கும் நன்றி.

(பா. தென்றல்)

## பொருளடக்கம்

பொன்னுலகத்து வேண்டும் பொருள்களை வழங்குவதற்குக் காமதேனு, கற்பகத்தரு போன்றவை இருக்கின்றன என்பதைப்போல மண்ணுலகத்து மக்களுக்கு வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு பற்றிய சிந்தனைகளைத் தன்னுள் அடக்கிய காப்பியங்கள் காலத்தை வென்று போற்றுமளவிற்கு தனக்கென்று தனித்துவம் பெற்றுத் திகழ்கின்றன. இக்காப்பிய இலக்கியங்கள் நால்வகை உறுதிப்பொருளை உரைத்தும் ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுங்காப்பியம் என்ற பாகுபாட்டைப் பெற்றும் பல்வேறு சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டு திகழும் கருத்துச் செறிவுடையன. வாழ்வின் உறுதிப்பொருள்களை உணர்த்தி அமையும் இக்காப்பியங்களின் ஒவ்வொரு கூறும் தனித்து ஆய்வு செய்து பதிவுசெய்ய வேண்டிய தகுதிப்பாடுடையதாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

"காப்பியங்களில் அறமாந்தர்கள்" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

வாழ்க்கையின் பல்வேறு உறுதிப்பொருள்களை எடுத்துரைக்கும் இக்காப்பியங்களின் ஒவ்வொரு பகுதியும் தனித்து ஆய்ந்து அனுபவிக்கக்கூடியது. அவற்றிலும் குறிப்பாகக் காப்பியங்களில் குறிப்பிடத்தக்க உயிரோட்டமுடையது மாந்தர் படைப்பு. காப்பியங்களின் வழியாக நால்வகை உறுதிப்பொருட்களைக் காலம் மற்றும் மக்களுக்கு ஏற்ற வகையில் காப்பிய ஆசிரியன் எடுத்தியம்ப உதவும் மிகச்சிறந்த கருவி மாந்தர் படைப்பாகும். தன்னிகரற்று விளங்கும் தலைவன், தலைவியல்லாமல் நாற்பொருளில் சிறந்து நிற்கும் முதற்பொருளான அறக்கருத்துக்களும் அவ்வறம் உணர்த்தவரும் மாந்தர் படைப்புகளும் இன்றளவும் போற்றத்தக்க வகையில் காப்பியங்களில் அமைக்கப்பட்டுள்ளன. காப்பிய ஆசிரியன் கூற விழைந்த அறத்தை வலியுறுத்த இவ்வுயிரோட்டமுடைய மாந்தர் படைப்புகள் உதவுகின்றன. அத்தகைய இவ்வற மாந்தர்களைப் பற்றியும், அப்படைப்புகள் உணர்த்தும் அறம் பற்றியும், அதன் வழியாக நல்லறத்தை எடுத்தோதிய காப்பிய ஆசிரியரின் படைப்புத்திறன் பற்றியும் ஆய்ந்து கண்டறிந்து காப்பியங்களின் தனிச்சிறப்புகளைப் பதிவு செய்வது இந்த ஆய்வின் நோக்கமாய் அமைந்தது.

மேலும் காப்பியங்கள் கற்பனைக்கலந்து இயம்பப் பெற்றாலும் சமயம் சார்ந்த அறத்தை வலியுறுத்துவதை முதன்மைக் கொள்கையாகக் கொண்டு திகழ்வதையும் காணமுடிகின்றது. ஆதலால் தனித்தனியே இலக்கியங்களில் அறமாந்தர்கள் பற்றி ஆராயப்பட்டிருப்பினும் காப்பியங்களில் குறிப்பாக ஐம்பெரும், ஐஞ்சிறுங் காப்பியங்களில் இடம்பெறும் அறமாந்தர்களை அக்காப்பியங்கள் சார்ந்த சமயங்களின் அடிப்படையில் நுட்பமாய் ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாக அமைந்தது.

**முன்ஆய்வுகள்**

'காப்பியங்களில் அறமாந்தர்கள்' எனும் தலைப்புடன் தொடர்புடைய முன் ஆய்வுகளாவன,

- நா. இராசகோபாலன் –' நீலகேசியில் சமயக்கோட்பாடுகள்'
- சி. சற்குணம் – 'சூளாமணி ஒரு காப்பியப் பார்வை'
- வி. நாகராசன் – 'முப்பெருங்காப்பியங்களில் அறக்கோட்பாடுகள்'
- இரா. இராகோத்தமன் – 'சீவகசிந்தாமணியில் சமுதாயக் கூறுகள்'
- க.சண்முக சுந்தரம் – 'சிலப்பதிகாரம் காட்டும் வாழ்வியல் நெறிகள்'

முதலியன ஆய்வு முன்னோடிகளாகும்.

**கருதுகோள்**

காப்பியங்களுள் குறிப்பாக ஐம்பெருங்காப்பியங்களும்,ஐஞ்சிறு காப்பியங்களும் சமய அறங்களை முன்னிறுத்தி மக்களை நல்வழிப் படுத்துவனவாய் அமைந்துள்ளன. இவ்வறங்களை எடுத்துரைக்க அதற்கேற்ற மாந்தர் படைப்புகளையும் உருவாக்கி அதன்வழி காப்பிய ஆசிரியர்கள் தம் கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர். காப்பியங்கள் அறத்தை முதன்மையாகக் கொண்டு மக்களை நல்வழிப்படுத்தத் தோன்றியவை, சமயக்கருத்துக்களை மக்களிடம் கொண்டு சேர்க்கவும் தோன்றியவை என்பது இவ்வாய்வில் நிறுவப்பட்டுள்ளது.

**ஆய்வு எல்லை**

ஐம்பெருங்காப்பியங்களும், ஐஞ்சிறு காப்பியங்களும் என பத்து காப்பியங்கள் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

காப்பியங்கள் உணர்த்தும் அறம் பற்றியும் அவ்வறம் உணர்த்தும் மாந்தர் படைப்புப் பற்றியும் விளக்கி வரைய விளக்கமுறை அணுகுமுறை

மேற்கொள்ளப்பட்டுள்ளது. பிற இலக்கிய அறக்கருத்துக்களையும் மாந்தர் படைப்புகளையும் ஒப்பிட்டுக்காண ஒப்பீட்டு அணுகுமுறையும் பயன்படுத்தப் பட்டுள்ளதோடு காப்பியங்களை கால அடிப்படையில் நோக்கி காப்பிய ஆசிரியரின் நோக்கத்தை அறிய வரலாற்று அணுகுமுறையும் சமூகவியல் அணுகுமுறையும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**இயல் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களைக் கொண்டு விளங்குகிறது.

1. காப்பியங்களில் அறம்
2. ஐம்பெருங்காப்பியங்களில் அறமாந்தர்கள்
3. ஐஞ்சிறுகாப்பியங்களில் அறமாந்தர்கள்

**இயல் விளக்கங்கள்**

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு எல்லை, ஆய்வு பகுப்பு போன்றவை விளக்கப் படுகின்றன.

'காப்பியங்களில் அறம்' என்பது முதலாமியல் ஆகும். இதில் அறம் – சொல்விளக்கம், தொல்காப்பியத்தில் அறம், சங்க இலக்கியத்தில் அறம், நீதி நூல்களில் அறம், கலைக்களஞ்சியத்தில் அறம், காப்பிய வரையறை, தொல்காப்பியத்தில் காப்பிய இலக்கணங்கள், காப்பிய வகைகள் – ஐங்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுங்காப்பியங்களில் மாந்தர் படைப்பு மற்றும் சமண – பௌத்த காப்பிய அறங்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

'ஐம்பெருங்காப்பியங்களில் அறமாந்தர்கள்' என்பது இரண்டாமியலாகும். இதில் சிலப்பதிகார அறமாந்தரான கவுந்தியடிகள், சாரணர், மாடல மறையோன் போன்றோரும் அறவழியில் வாழ்ந்த கண்ணகி, கோவலன், மாதரி, சாயலன் – அவன் மனைவி போன்றோர் குறிக்கும் அறங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மணிமேகலைக் காப்பியத்தில் மாதவி, ஆபுத்திரன் போன்ற அறவழி வாழ்ந்த மாந்தர்களும் அறவணவடிகள், மணிமேகலை, சுதமதி, சாரணர் போன்ற அறத்தைக் கூறும் மாந்தர்களும் அவர்கள் கூறும் அறக்கருத்துக்களும் ஆராயப்பட்டுள்ளன. சீவகசிந்தாமணி காப்பியத்தில் அறமுரைக்கும் மாந்தர்களாக சுதன்மர், சாரணர் போன்ற மாந்தர்கள் பற்றியும் சீவகன், சச்சந்தன், விசயை போன்ற அறவழிவாழ்ந்த மாந்தர்கள் பற்றியும் ஆராயப்பட்டு அறக்கருத்துக்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. வளையாபதி,

குண்டலகேசி காப்பியங்கள் முழுமையும் கிடைக்கப்பெறாமையின் மாந்தர்களை வகைப்படுத்த இயலவில்லை. எனவே அவற்றில் உள்ள அறக்கருத்துக்கள் மட்டும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

மூன்றாமியலான 'ஐஞ்சிறுகாப்பியங்களில் அறமாந்தர்கள்' என்பதில் உதயணகுமார காவியம், யசோதர காவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி காப்பியங்களில் உள்ள அறமுரைக்கும் மாந்தர்களும் அறவழி வாழ்ந்த மாந்தர்களும் சுட்டப்பட்டுள்ளன. உதயணகுமார காவியத்தில் உதயணன், யூகி, சதானிகன், நரவாகனன், சேடகமுனிவர் போன்ற அறமாந்தர்களும் யாசோதர காவியத்தில் மாரிதத்தன், சுதத்தன், அபயருசி-அபயமதி போன்ற அறமாந்தர்களும் நாககுமார காவியத்தில் நாககுமாரன் உள்ளிட்ட அறமாந்தர்களும் சூளாமணியில் பயாபதி, விசயன், திவிட்டன், சுவலனசடி, அச்சுவக்கிரீவன், துறவி போன்ற அறமாந்தர்களும் நீலகேசியில் முனிச்சந்திரர், நீலகேசி, அருக்கசந்திரன், குண்டலகேசி, புத்தர் போன்ற அறமாந்தர்களும் அறக்கருத்துக்களை எடுத்துரைத்துள்ளனர். இவ்வியல்களில் காப்பியங்களில் கூறப்பட்டுள்ள அறங்களும், அதனைப்பின்பற்றி காப்பியந்தோறும் எடுத்துரைக்க ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ள மாந்தர் படைப்பின் சிறப்பு குறித்தும், படைப்பாசிரியரின் தனித்திறன் குறித்தும் விரித்து ஆராயப்பட்டுள்ளன.

முடிவுரையில் ஆய்வின்வழி கண்டறியப்பட்ட முடிவுகள் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் பற்றிய விவரக் குறிப்புகள், ஆய்வுதொடர்பான பின்னாய்வுக்கு உதவும் தரவுகள் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுள்ளன.

# காப்பியங்களில் அறம்

சங்ககாலம் தொட்டு முன்னோர்களால் அறம் போற்றப்பட்டுவந்தது. அறவழியில் பொருள் ஈட்டினால் இன்பம் உண்டாகும். அஃது வீடுபேறடைய வழி வகுக்கும். இதனை அறம், பொருள், இன்பம், வீடு என்ற முதன்மை வரிசை விளக்கும். பிற இலக்கியங்கள் போல காப்பிய இலக்கியங்களும் இந்நான்கு வகை உறுதிப்பொருள்களை வலியுறுத்துகின்றன. ‘‘கன்னடக் கவிகளுள் பம்பன், பொன்னன், ரன்னன், ஜன்னன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இந்நான்கு கவிகளும் காப்பிய தருமத்தை அறத்தின் வழியாகவும், அறத்தைக் காப்பியத்தின் மூலமாகவும் உலகுக்கு உழைத்த பெருந்தவத்தினர் எனப் புகழப்படுகின்றனர்.’’[1] இவ்வாறே காப்பியமும் அறமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாக அமைகின்றன.

**அறம்**

உலகில் உள்ள நல்லவை, தீயவை அனைத்தும் அறம் எனப்படும். ஒரு மனிதனின் செயல்களில் அறம் நிறைந்துள்ளது. மனிதன் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கம் அறமாகும். அதனை நல்லறம், தீயறம் எனப்பகுக்க முடியும். நல்லறம் என்பது நன்மையை, மனிதன் கடைபிடிக்க வேண்டிய நல்லொழுக்கத்தைச் சுட்டுகிறது. தீயறம் என்பது மனிதன் கடைபிடிக்கக் கூடாத ஒழுக்கத்தைச் சுட்டுகிறது.

‘‘பொதுவாக இம்மையிலும் மறுமையிலும் மற்றவர்களுக்கு எது நலனை உண்டாக்க வல்லதோ அத்தகைய காரியத்தையே மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று காரணங்களில் செய்து வரவேண்டும்.’’[2] இதனையே அறம் என்பர். அறமானது காலம், இடம், நாடு, மனிதன், மொழி அடிப்படையில் மாறுபடக்கூடியது. அறம் வரையறைக்கு உட்படாதது. மேலும் நிலையற்றது. ஒரு காலத்தில் அறமாகக் கருதப்பட்டவை மற்றொரு காலத்தில் அறமற்றதாகக் கருதப்படும். சிலநேரங்களில் ஒரே நேரத்தில் ஒரு செயல் அறமாகவும், அறமற்றதாகவும் கருதப்பட வாய்ப்புள்ளது.

ஒரு காலத்தில் விருந்தினரை வரவேற்றுத் தன்மனைவியையே விருந்தாக்குவது அறமாகும் என்ற செய்தி வால்கா முதல் கங்கை வரை என்ற நூலில் இடம்பெறுகிறது. ஆனால் இன்று பிறர்மனை நோக்காமையே அறமாகும். இவ்வாறு அறம் மாறுபடக் கூடியதாக உள்ளது. அறம் மாறுபட மனித மனமே காரணமாகின்றது. ‘வல்லான் வகுத்ததே வாய்க்கால்’ என்பது போல மனிதன் வகுத்ததே அறமாயிற்று. செயல்களின் விளைவு நன்மையெனில் அது அறமாகப் போற்றப்பட்டது. அறம் உடலளவிலும் மனதளவிலும் இன்பத்தை ஏற்படுத்தவேண்டும். மனம், செயல், வாக்கு, காயங்களால் பிறர் பாதிக்கப்படாமல் இருப்பது அறமாகும்.

**அறம் – சொல் விளக்கம்**

அறம் என்ற சொல் **அறு** என்ற வேர்ச்சொல்லிருந்து தோன்றியது. அறு+அம்=அறம். தீமையை அறுக்கும் அனைத்தும் அறமாகிறது. அற என்ற சொல்லிற்கு முழுவதும், மிகவும், தெளிவாக, செவ்வையாக ஆகிய பொருள்கள் உள்ளன. இதற்கு உதாரணங்களை லெக்சிகன்,

1. "முழுவதும் - Wholly, entirely, quite
2. மிகவும் - Intensely, excessively, 'அறவே துயர் செய்து'
3. தெளிவாக - Clearly 'அவையத்து'
4. செவ்வையாக - Thoroughly 'திண்ணையை அறக்கூட்டு'

என்று குறிப்பிடுகிறது."[3] அறம் என்பதற்கான வரையறையாக "கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, அறநூல், அறக்கடவுள், தருமதேவதை, தீப்பயனுண்டாக்குஞ் சொல் எனக் கழகத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. மேலும் ஐயம், பிச்சை, உதவி, நன்மை, நல்லறம், கருணை, தருமம், புண்ணியம், நற்கு, நன்று, நல்லது, நல்வினை, உபகாரம் (உதவி), நற்றூழ், நற்குணம், அதிருட்டம், நல்லூழ் என பல பொருள்களைச் சொற்றொடர் பொருளகராதி கூறியுள்ளது."[4] "அறம் நல்வழி, ஒழுங்கு, தர்மம் போன்ற கருத்துக்களைக் குறிக்கின்றது. தமிழர் சிந்தனைப் புலத்தில் அறம் ஒரு முக்கிய கருத்துரு ஆகும்"[5] என்று விக்கிப்பீடியா இணையதளம் சுட்டுகிறது.

அறத்தின் விளக்கத்தைச் சொற்றொடராகக் "குடும்ப வாழ்வும் பொது வாழ்வும் சீராக இயங்க ஒருவர் கடைபிடிக்கும் சமயம் சார்பான அல்லது ஒழுக்கக் கண்ணோட்டத்துடன் கூடிய நெறிமுறைகள் அல்லது கடமைகள் அறம்"[6] என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி சுட்டுகிறது. அறம் என்பதற்கு "சுகிர்தம், தருமம், நல்வினை, புண்ணியம், வீறு, ஒழுக்கம், ஆசாரம், உறுதி, கை, தவம்"[7] என்ற பொருள்கள் பயன்படுத்தப்படுவதாக இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி சுட்டுகிறது. கையறம், தருமம், நீர்மை, நூற்பயன் என்று அறத்திற்கு விளக்கத்தை நா.கதிரவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி தருகிறது. நன்றி, நற்செயல், நயன் என்பனவும் அறம் என்பதாகச் சுட்டப்படுகிறது.

**தொல்காப்பியத்தில் அறம்**

தமிழ் இலக்கியத்தில் அறம் என்ற சொல்லாட்சி காலம் தோறும் இருந்து வந்துள்ளது. பலபொருள் ஒரு சொல்லாகி, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளில் முதல் பொருளாகி நின்றது. அறமானது பொருளையும், இன்பத்தையும் தன்னுள் அடக்கி வீடுபேற்றை நல்குகிறது. தமிழ் கூறும் நல்லுலகத்து முந்து நூலாக

தொல்காப்பியம் கருதப்படுகிறது. அதில் அறம் என்ற சொல்லாட்சி பன்னிரு இடங்களில் இடம்பெறுவதன் மூலம், அச்சொல்லின் பழமையை அறியமுடிகிறது. முதலில் தொல்காப்பியம் சிறப்புப் பாயிரத்தில் அறம் என்ற சொல் இடம்பெறுகிறது.

**'நிலம் தரு திருவில் பாண்டியன் அவையத்து**

**அறம்கரை நாவின் நான்மறை முற்றிய**

**அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரித்து' (தொல். சிறப்புபாயிரம்)**

என்பது நிலம் தருதிருவில் பாண்டியன் அவையில், அறத்தை உணர்ந்த, உணர்த்தும் நாவினையுடை, நான்கு மறைகளையும் தெரிந்த அதங்கோட்டு ஆசான் தலைமையில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டதை உரைக்கிறது. இவ்வடிகளில் அறம் என்பது ஒழுகல் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது. இன்றுவரை இப்பொருளில் மாற்றமில்லை.

**முப்பொருள் உரைத்தல்**

தொல்காப்பியம் களவு ஒழுக்கத்தின் இயல்புகளைச் சுட்டுமிடத்து, 'இன்பமும், பொருளும், அறனும் என்றாங்கு' (தொல்.பொருள் : 1038) என்று அறத்தைக் குறிப்பிடுகிறது. இதில் முப்பொருளான இன்பம், பொருள், அறம் குறிக்கப்படுகிறது. மேலும் ஓரிடத்திலும்,

**'அந்நிலை மருங்கி னறமுத லாகிய**

**மும்முதற் பொருட்கும் உரிய வென்ப' (தொல். செய். 1363)**

என்று முப்பொருள் உரைக்கப்படுகிறது. பின்வந்த இலக்கண நூல்களில் நாற்பொருள் உரைக்கப்பட்டது. வீடு பேற்றினை தொல்காப்பியர் சுட்டவில்லை. அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருளும் அதன் நிலையின்மையும் உரையசிரியர்களாலும் கூறப்பட்டுள்ளவையாகும்.

**அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் என்ற நிலையிலும் தொல்காப்பியத்தில் அறம் பயின்று வருகிறது. களவியலில் தோழி கூற்று நிகழுமிடங்களைக் கூறுகையில்,

**'பிறன் வரைவு ஆயினும் அவன்வரைவு மறுப்பினும்**

**முன்னிலை அறனெனப் படுதல் என்று இருவகை' (தொல்.கள. 1060)**

சொல்லப்பட்டுள்ளது. ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கை மேற்கொண்டு கற்பு வாழ்க்கைக்கு மாறுதல் வேண்டும். இதுவே தமிழரின் அறமாகும். தலைவனும் தலைவியும் கற்பு வாழ்க்கையில் புகாமல் இடையறவுபடுதலும் உண்டு. தலைவனை தலைவி வீட்டார் மறுக்கும் போதும், தலைவிக்கு வேற்றுவரைவு

வரும் போதும் அறத்தோடு நிற்கவேண்டிய நிலை உண்டாகும். தலைவி தோழிக்கும் தோழி செவிலிக்கும் செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தமையன் தந்தைமார்க்கும் அறத்தொடு நிற்பர். தலைவன் தலைவியை கற்பு வாழ்க்கைக்கு உட்படுத்துவதே அறத்தோடு நிற்றலின் நோக்கமாகும். தலைவி தோழியிடம் அறத்தோடு நிற்குமாறு கூறினாலன்றித் தானாக அறத்தோடு நிற்கும் மரபு தோழிக்கு இல்லை என்பதை,

**'அறத்தொடு நிற்கும் காலத் தன்றி**

**அறத்தியல் மரபிலன் தோழி என்ப' (தொல். பொருள் : 1152)**

என்ற அடிகள் விளக்குகின்றன. மேலும் இற்செறித்தலின் போது தலைவி அறம், அன்பு, இன்பம், நாணம் போன்ற ஒழுக்கங்களைத் துறத்தல் இயல்பென்றும் (தொல். பொருளியல்: 1161) தொல்காப்பியம் உரைக்கிறது.

**செயலெனும் பொருண்மை**

தொல்காப்பியம் செயலெனும் பொருண்மையில் அறம் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளது. தலைவனின் எல்லைக்குள் சென்று அவனைப் பார்க்கும் செயல் தலைவிக்கு உரியதன்று. எனவே தலைவி தன் இல்லிற்கு அருகாமையில் உள்ள இடத்தை குறியிடமாகச் சுட்டுவாள் என்பதை,

**'அவன் வரம்பு இறத்தல் அறம் தனக்கு இன்மையின்**

**களம் சுட்டு கிளவி கிழவியதாகும்**

**தான் செலற்கு உரிய வழி ஆகலான்' (தொல். பொருள்: 1066)**

என்ற நூற்பாவழி அறிய முடிகிறது.

**இல்லறமெனும் பொருண்மை**

பரத்தையர் இல்லம் சென்ற தலைவன், தலைவியைத் தேடி வந்து இல்லறம் நடத்தும் நோக்கத்தோடு அவள் ஊடல் போக்குவான். இதனை,

**'அறம்புரி நெஞ்சமொடு தன்வரவு அறியாமைப்**

**புறம்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்' (தொல் . பொருள் : 1093)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இதில் அறம்புரி நெஞ்சம் என்பது தலைவன் இல்லறம் நடத்தும் எண்ணத்துடன் வருதலைக் குறித்து நின்றது.

**துறவெனும் பொருண்மை**

இல்லறவாழ்வின் இறுதிக்காலத்தில் துறவெனும் பொருண்மையை வேண்டல் அறமாகும். இஃது,

**'காமம் சான்ற கடைக்கோட் காலை**
**ஏமம் சான்ற மக்களொடு துவன்றி**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (தொல். பொருள்: 1138)**

என்ற நூற்பாவால் சுட்டப்படுகிறது.

**அறமுரைத்தல் எனும் பொருண்மை**

அறமுறைத்தல் சான்றோர்க்கேயன்றி பிறருக்கும் உரியதாகையால் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவி இடித்துரைக்கின்றாள்.

**'தலைத்தாள் கழறுஅறம் எதிர்ப்பொருழுது இன்றே**
**மலிதலும் ஊடலும் அவை அலங்கடையே' (தொல். பொருளி: 1181)**

என்ற அடிகள், ''பரத்தையர் தம் துன்பத்தை தலைவியிடம் வந்து கூறினாலும் அதைத்தான் உண்மையாக உணர்ந்தாலும் அவனுடன் மகிழ்வாக இருக்கும் போதும், ஊடும்போதும் அன்றி, எதிர்ப்பட்ட போது இடித்துரைத்தல் இல்லை''[8] என்கிறது. இவைதவிர அறத்திற்கு அழிவைத்தருதல் என்ற பொருளில் 'அறக்கழிவுடையன' என்ற சொல் (தொல். பொரு : 1164) தொல்காப்பியத்தில் இடம் பெறுகிறது. மேலும் மெய்ப்பாட்டியலில் பெருந்திணைக்குரிய மெய்ப்பாடு குறிக்குமிடத்து அறனளித்துரைத்தல் என்று சொல்லப்பட்டுள்ளது. ''அறனளித்துரைத்தலென்பது, அறக்கிழவனை அன்பு செய்தல் (தொல். மெய்ப் : 1216) ''[9] என்று பேராசிரியர் பொருளுரைக்கின்றார். இவ்வாறு முப்பொருள் நிலை, அறத்தொடு நிற்றல், செயலெனும் பொருண்மை, இல்லறமெனும் பொருண்மை, துறவெனும் பொருண்மை, அறமுரைத்தல் எனும் பொருண்மைகளில் அறம் என்ற சொல் தொல்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**சங்க இலக்கியத்தில் அறம்**

இலக்கியங்களில் பழமையும் இனிமையும் நிறைந்தது சங்க இலக்கியங்கள் ஆகும். எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் சங்க நூல்களாகும். புறஇலக்கியங்களில் அறம் ஒழுகலாறு என்னும் பொருளில் இடம்பெறுகிறது. அக இலக்கியங்களில் வாழ்வியல்

முறையே அறமாகப் போற்றப்பட்டது. சங்க இலக்கியத்தை அக இலக்கியங்கள், புற இலக்கியங்கள், அகப்புற இலக்கியங்கள் எனப் பகுக்கமுடியும்.

**புற இலக்கியங்களில் அறம்**

எட்டுத்தொகையில் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவை புறநூல்களாகக் கருதப்படுகின்றன. இவை பழம்பெரும் வரலாற்று கருவூலங்களாகும். சங்க கால மன்னர்களின் ஆட்சி முறை, வீரம், வெற்றி, கொடை முதலியனவும் பழங்கால மக்களின் பழக்க வழக்கம், பண்பாடு, கலாச்சாரம் முதலியனவும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

**புறநானூறு கூறும் அறநெறி**

அறமானது அறநெறி, செயல்பாடு, ஒழுகலாறு, தெய்வம், நூல், சான்றோர் போன்ற பொருள்களில் புறநானூற்றில் இடம் பெறுகிறது. நால்வகைப் படையும் இருப்பினும் அறநெறியால் மட்டுமே அரசுக்கு வெற்றிகிட்டும் என்பதை,

**‘கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்**
**நெடுங் கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவருமென**
**நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்’ (புறம் . 55 : 7 – 10)**

என்ற அடிகள் விளக்குகின்றன. இதுதவிர, புறநானூற்றில் பலவிடங்களில் (புறம்.12, 20, 28, 31,39, 58, 62, 71, 93, 134,145, 171, 210, 224, 230,377, 395, 397) அறநெறி கருத்துக்கள் காணக்கிடைக்கின்றன.

**புறநானூறு கூறும் அறக்கடவுள்**

அறத்தைக் கடவுளாகவும் குறிப்பர். ஒவ்வொரு திணைக்கும் ஒரு தெய்வமாக இயற்கைப் பொருள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி தெய்வங்களைச் சுட்டி வணங்குவது தமிழர் மரபு. அதனடிப்படையில் நற்செயல், நற்சிந்தனை, நல்லொழுக்கத்திற்கு அறக்கடவுளைக் கற்பித்தனர். இந்த அறக்கடவுள் பற்றிய செய்தியும் புறத்தில் உள்ளது. “பெருஞ்சித்தனார், குமண வள்ளலிடம் தம் வறுமையைக் கூறும்போது தம் மனைவி இடையிற் கொண்ட பல குழந்தைகள் உண்டமையால் பாலின்றி உலர்ந்த மார்பினளாய் சோறாகிய உணவை மறந்து, உப்பின்றி வெந்த குப்பைக் கீரையைத் தின்று, மாசுடைய கிழிந்த துணியினை உடுத்தி, அறம் பழித்து உண்ணாதிருப்பவள்”[10] என்று அவள் நிலையினைப் பாங்குறச் சித்தரித்துக் காட்டியுள்ளார் (புறம். 159: 6 – 14). அறம் பழித்து என்பதனால் அறக்கடவுளைப் பழித்து உண்ணாதிருக்கும் நிலையே இங்கு சுட்டப்படுகிறது.

புறநானூறு அறம் என்ற சொல்லுக்கு அறநூல் என்ற பொருளும் உண்டு என்கிறது. பண்டு உள்ள மனுநீதிநூல் போன்ற பல அறநூல்கள் தமிழில் இருந்துள்ளமையை அறியமுடிகிறது.ஆன்முலை அறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல், பார்ப்பனரைப்பிழைத்தல் போன்ற பாவங்கள் செய்தாருக்கும் கழுவாயுண்டு ; ஆனால் செய்த நன்றியைச் சிதைத்தோர்க்குக் கழுவாய் இல்லையென்று அறநூல் கூறுவதாகப் புறுநானூறு (புறம் . 34 : 1 – 7) விளம்புகிறது.

**புறநானூறு கூறும் அறவர்**

அறநெஞ்சை உடையோர் அறவர், அறவோர் என்று அழைக்கப்படுவர். அறமாந்தர்களாகிய சான்றோர்கள் அறத்தையே உயிராய் போற்றுபவர்கள். தாமன் தோன்றிக் கோன் அறவரின் – அறநெஞ்சினரின் சிறந்த அறவானன் என்று ஐயூர் முடவனாரைப் போற்றுவார் (புறம் 399 : 19). மேலும் கோப்பெருஞ் சோழனுடைய நடுகல்லைக் கண்ட பொத்தியார், அவன் அறவோர் புகழ்ந்த நீதிநூலுக்குத் தக்கவாறு ஆட்சிபுரிந்த செங்கோலன் (புறம். 221 : 3) என்று போற்றினார்.

**பதிற்றுப்பத்து கூறும் அறம்**

அறம் குறித்து பதிற்றுப்பத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரசர்களின் வீரம் வெற்றி பற்றிச் சொல்கையில் அறத்தை விரும்பும் அரசர்களின் புகழ் வலியுறுத்தப்படுகிறது. எட்டாம் பத்தில், செல்வக்கடுங்கோ வாழியாதனைப் புகழ்கையில்,

**'அரசவை பணிய அறம் புரிந்து வயங்கிய**
**மறம்புரி கொள்கை வயங்கு செந்நாவின்' (பதிற்று . 85: 9 – 10)**

என்று அரசவைகள் பணியுமாறு அறத்தையும் வீரத்தையும் விரும்பிச் செய்யும் கொள்கையுடையவன் என்று சுட்டப்பட்டு உள்ளது. மேலும் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலன் தேவி அறஞ்சால் கற்பினள் ( பதிற்று 31 : 24 ) என்றும், அந்தணர்கள் அறத்தை விரும்புவர்கள் ( பதி. 24 : 6, 8/64 :3 – 5 ) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**அகப்புற இலக்கியத்தில் அறம்**

திருமால் (பரி . 13 : 23 – 25 ), செவ்வேள், கொற்றவை ஆகிய தெய்வங்கள் அனைத்தும் அறத்தில் பொருந்தி நிற்பதாக பரிபாடல் குறிப்பிடுகிறது. கடுவன் இளவெயினியார் செவ்வேளிடம்,

**‘ ….. …. யாம் இரப்பவை**

**பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்**

**அருளும் அன்பும் அறனும் மூன்றும்’ (பரி . 5 : 78 – 81)**

என்று வேண்டி நிற்கின்றார். அறத்தை வரமாகப் பெற எண்ணுவது கருதத்தக்கது.

**அக இலக்கியங்களில் அறம்**

எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை ஆகியவை அகநூல்களாகும். இவற்றில் இல்வாழ்க்கை முறையே அறமாகப் போற்றப்படுகிறது. அக இலக்கியங்களில் அறம் பலவிடங்களில் சுட்டப்பட்டுள்ளது. அவற்றை விவரிக்க இயலாமையின் ஒவ்வொரு அறம் சுட்டும் பகுதி மட்டும் இங்கு விளக்கப்படுகிறது.

**அகநானூற்றில் அறம்**

இல்வாழ்க்கை அறவழிப்பட்டது என்பதை,

**‘அறம்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த**

**கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்**

**வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்’ (அகம். 173 : 1 –3)**

என்ற அடிகள் நாளும் மெய்வருத்தி உழைக்கும் ஊக்கமில்லாதவர்க்கு அறநெறியின்றும் நீங்காது இல்வாழ்க்கை நடத்துதலும் சுற்றத்தார் துன்பங்களைத் தாங்கலும் இல்லை என்கிறது.

**குறுந்தொகையில் அறம்**

வேனிலில் வழிச்செல்வோர் உண்டு, உயிர்த்தங்குதற்குதவியாக அமைந்த நெல்லிக்காய் அறந்தலைப்பட்ட நெல்லியம் பசுங்காய் (குறுந். 209 : 1 ) என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. பிறர் உயிர்க்காத்தல் அறமெனப்பட்டது.

**நற்றிணையில் அறம்**

தலைவன் தலைவியின் அழகைக் கண்டு தன்னை அறவோரோடு ஒப்பிட்டுப்பேசுகின்றான். இதனை,

**‘பொன்னும் மணியும் போலும் யாழநின்**

**நன்னார் மேனியும் நாறுஇருங் கதுப்பும்**

**போதும் பணையும் போலும் யாழநின்**

**மாதர் உண்கணும் வனப்பின் தோளும்**

**இவை காண்தோறும் அகம்மலிந்து யானும்**

**அறம் நிலை பெற்றோர் அனையேன்’ (நற். 166 : 1 – 6)**

என்ற அடிகள் விளக்குகின்றன. தலைவியின் நன்மேனியும் நறுங்கதுப்பும் மாதர் உண்கணும் வனப்புடைத் தோளும் காண்டொறும் அகம் மலர்ந்து அறத்தில் நிலை பெற்றோர் எய்தும் இன்பப் பயனை அடைந்ததாகத் தலைவன் குறிப்பிடுகின்றான்.

**ஐங்குறுநூற்றில் அறம்**

ஐங்குறுநூற்று வேட்கைப்பத்தில் வாழியாதன் வாழி அவினியை வாழ்த்தி நல்லறம் சிறக்கவும், அறமல்லாதவை கெட்டொழியவும் மனையுறை தாய்மார் வேண்டுகின்றனர். இதனை,

**‘வாழி ஆதன் வாழி அவினி**

**அறம் நனி சிறக்க அல்லது கெடுக’ (ஐங். 7 : 1 –2)**

என்ற அடிகள் விளக்கும்.

**கலித்தொகையில் அறம்**

முற்பிறப்பில் மனம் வேறுபட்டுத் தீவினை செய்து அறம் பொருள் இன்பங்களில் அறமாகிய பகுதியைச் சாராதவர், இப்பிறப்பில் செய்து உழலும் தொழில்களுல் மடலேறுதலும் ஒன்று என்று (கலி . 141 : 1 – 6) அறநூல்கள் உரைக்கும்.

**பத்துப்பாட்டில் அறம்**

பொருநராற்றுப்படையில் கரிகால் பெருவளத்தானின் செங்கோன்மை அறத்தோடு பொருந்தியது என்பதை,

**‘அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்**

**அன்னோன் வாழி வென்வேற் குருசில்’(பொரு . 230 – 231)**

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன. மதுரைக்காஞ்சியில் காவிதி மக்கள் பற்றிக் குறிப்பிடுகையில் அன்பையும் அறனையும் நீங்காமற் காத்து, பழியைத் தம்மிடத்தின்றும் நீக்கி, அதனால் மற்றையோரினும் உயர்ந்து தலைப்பாகை அணிந்தவர்கள் என்று

சுட்டப்பட்டுள்ளது. இவற்றால் அறம் அரசனுக்கும் அமைச்சனுக்கும் இன்றியமையாத நெறியாய் அமைந்ததை அறியமுடிகின்றது.

**நீதி நூல்களில் அறம்**

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் சங்கம் மருவியகால நீதி இலக்கியங்களாகப் போற்றப்படுகின்றன. திருக்குறள், நாலடியார், நான்மணிக் கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்ச மூலம், ஏலாதி, முதுமொழிக் காஞ்சி, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை, இன்னிலை, கார்நாற்பது, களவழி நாற்பது ஆகியவை இத்தொகுப்பில் அடங்கும். இதில் முதல் 11 நூல்களும் இன்னிலையும் புறவாழ்விற்கான அறம் உரைப்பவை. மற்றவை அகவாழ்வை எடுத்துரைப்பவையாகும்.

கொல்லாமை, கள்ளுண்ணாமை, பெண்மையைப் போற்றுதல், கல்வியின் சிறப்புணர்த்தல், நிலையாமை, பெரியோரைத் துணைக்கொள்ளுதல், இல்லறக் கடமையுணர்த்தல், மனைவிக்குரிய கடமை, சுற்றத்தாரிடம் சினம் கொள்ளா திருத்தல், கணவன் வருவாய்க்கேற்ப செலவு செய்தல், உறவினரிடம் அன்பு, விருந்தினரைப் பேணல், தெய்வ வழிபாடு, பழிபுரியாதல், தாழ்ந்த பண்புகள் இல்லாதிருத்தல், அரசன் ஆசிரியன் தாய் தந்தை தமையன் – ஐந்து பெரியாரின் ஆணையை மறுக்காதிருத்தல் (திரிகடுகம்), நல்ல நண்பரிடத்து பொய் பேசாமை, கற்புடைய மனைவியை போற்றிப் பாதுகாத்தல், சான்றோரைச் சேர்ந்து வாழ்தல், கீழ்மக்களை விட்டு விலகி வாழ்தல், அன்புள்ளவரை நேசித்தல், பழிவராது காத்துக் கொள்ளுதல், கல்வி கேள்வி ஒழுக்கத்தில் சிறந்திருத்தல், பெற்ற தாயைக் காத்தல், நல்ல அரசாட்சி நடத்துதல், செய்நன்றி மறவாமை, பொறுமையுடன் இருத்தல், தர்மங்கள் செய்தல், குற்றமான நோக்கமின்றி நற்செயல் செய்தல், பொறாமை ஆசை கோபம் கடுஞ்சொல் ஆகிய நான்கையும் நீக்கிவிட்டுச் செய்யும் எல்லாக் காரியங்களும் அறங்கள் ஆகும்.

இல்லறம், நடுவுநிலைமை, அடக்க முடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினைக்கு அஞ்சுதல், ஒப்புரவு அறிதல், ஈகை, புகழோடு வாழ்தல், அருளுடமை, புலால் மறுத்தல், தவமியற்றல், கூடாவொழுக்கம் அறிதல், கள்ளாமை, வாய்மையுடன் இருத்தல், வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்த்தல், அவாவறுத்தல், அரசர்க்குரிய அறம், வாழ்வியல் அறம், போரியல் அறம், நீதி வழங்குவதில் அறம் போன்றவை நீதி இலக்கியங்களில் சுட்டப்படும் அறங்கள் ஆகும். அறத்திற்குரிய உறுப்புக்களாக, ஐயப்படாமை,

விருப்பின்மை, வெருப்பின்மை, மயக்கமின்மை, பழியைநீக்கல், பேரன்புடைமை, அறநெறி – தர்மவழி, அறம் – தர்மம், நீதி, புண்ணியம் என்று வரையறுக்கப்படுகிறது.

**திருக்குறளில் அறம்**

உலகப் பொதுமறை என்று போற்றப்படும் திருக்குறள் ஒரு முழுமையான அறநூலாகும். இதில் இல்லையெனும் கருத்தே இல்லை. எல்லா விதமான அறங்களையும் தன்னுள் கொண்டது. ''முப்பால் எனப்படும் திருக்குறள் முழுவதையும் அறம் என்றே சொல்லும் வழக்கு இருப்பதனால், அறம் என்பது பொருளையும் இன்பத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது.''[11] என மொழியப்படுகிறது. திருக்குறளின் அதிகாரங்கள் அனைத்தும் அறம் உரைப்பவையாகும். நீத்தார் பெருமையில் சான்றோர்கள் அறம் பூண்டோராய் அறவோராய் (குறள் . 23, 30) காட்டப்பட்டுள்ளனர். அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தில் அனைத்துக் குறள்களும் (31 – 40) அறத்தை வலியுறுத்துகின்றன.

**'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**

**ஆகுல நீர பிற' (குறள் . 34)**

என்று மனமாசு நீக்குதலே அறமெனவும், செல்வத்தினும் அறமே சிறந்ததெனவும் பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கினையும் நீக்கிவிட்டுச் செய்யும் எல்லாச் செயலும் அறமெனவும் வலியுறுத்தப்படுகிறது. அறம் செய்தால் வீடுபேறு கிட்டும் என்பதும் புகழ் உண்டாகும் என்பதும் அறப்பயனாகும். அறத்தைச் செய்து பழி – பாவச் செயல்களை விலக்க வேண்டுமாய் அறன் வலியுறுத்தப்படுகிறது.

இல்வாழ்க்கையும் சிறந்த அறம் என்பதை **இல்லறம்** என்ற சொல்வழி அறியமுடிகியது. அன்பும், அறமும் உடையதே இல்வாழ்க்கை (குறள்.45). அறமுறைப்படி இல்வாழ்க்கை நடத்துபவர் துறவறத்தாரை விடச் சிறந்தவர் (குறள். 48) ஆவர். மேலும்,

**'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**

**பிறன் பழிப்பது இல்லாயின் நன்று' (குறள் . 49)**

என்று அறமே இவ்வாழக்கை என்பதும் வலியுறுத்தப்படுகிறது. ''வாழ்க்கைத் துணைநலத்தில் தன்னையும், தன்னைக் கொண்டானையும், தன் குடிப்பெயரையும் காப்பாற்றிக் கொள்வதோடு, எந்தக் காலத்திலும் அவற்றிற் சிறிதுகூடச் சோர்ந்து, வழுவி விடாதவனே வாழ்க்கைத் துணை''[12] என்று மிகச் சிறப்பாகத் திருவள்ளுவர் போற்றினார். மக்கட்செல்வத்துள் குழந்தைச் செல்வத்தின் இன்றியமையாமையும், இனிமையும் பேசப்படுகிறது. நன்றி எனும் சொல் அறம் என்னும் பொருளையே குறிப்பதால்,

**‘தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து**

**முந்தி இருப்பச் செயல்’ (குறள் . 67)**

என்பது அறக்கடமையை வலியுறுத்தியது. அன்புடைமையில் அறத்திற்கே அன்பு சார்பென்றும் அன்பில்லா உயிர்களை அறக்கடவுள் வருத்தும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. விருந்தோம்பல் என்பதும் அறப்பண்பேயாகும். வேள்வியால் உண்டாகும் அறப்பயனுக்கு ஒப்பாக விருந்தோம்பல் போற்றப்படுவதனை,

**‘இனைத்துணைத்து என்பது ஒன்றில்லை விருந்தின்**

**திணைத்துணை வேள்வி பயன் ’ (குறள் . 87)**

என்ற குறள்வழி அறியமுடியும். இனியவை கூறலில்,

**‘முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்**

**இன்சொல் இனிதே அறம்.’ (குறள் . 93)**

என்று வலியுறுத்தப்படுகிறது. இனியவற்றைப் பேசினால் அல்லவை தேய்ந்து அறம் பெருகும். அடக்கமுடைமையில் கோபத்தை அடக்கப்பழகிப் பேச்சில் நாவடக்க முடையவனாக இருந்தால் அப்படிப்பட்டவனுடைய நலத்தை அறக்கடவுள் காக்கும் என்று அறம் வலியுறுத்தப்படுகிறது. ‘‘ஒழுக்கம் என்பது தொடர்ந்து நடக்கும் நடத்தை என்று பொருள் தரும். மழை ஒழுக்கு, ஆற்றொழுக்கு என்னும் வழக்குகளை இங்கே நினைவு கூறலாம்.’’[13] இத்தகைய நடத்தைப் பற்றிக் கூறும் ஒழுக்கமுடைமையில் நல்ல ஒழுக்கத்தினால் உடனே நன்மைகள் கிடைக்காவிட்டாலும் பின்னால் நன்மைகள் முளைப்பதற்கு அது வித்தாகும். ஆனால் தீய ஒழுக்கத்தால் எப்போதும் துன்பமே உண்டாகும் என்று குறள் 138-இல் சுட்டப்பட்டுள்ளது.

பிறனில் விழையாமை, அடுத்தவர் மனைவியை கண்ணெடுத்தும் பாராதவனே சிறந்த ஆண்மையும் ஒழுக்கமும் உடையவன். அவனையே அறம் சாரும் என்று குறிப்பிடுகிறது. ‘‘ஆடவன் ஒருவன் மாது ஒருத்தியைத் திருமணம் புரிந்து கொள்ளும் நோக்கம் இல்லறக்கடமைகளைச் செய்வதற்கே யல்லாமல் வேறில்லை என்பதில் தெளிவு இருந்தால் பிறனில் விழைதல் நிகழாது.’’[14] பொறையுடைமையில் பொறுத்துக் கொள்ளுதலே அறம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு ஒவ்வொரு அதிகாரத்தும் அறம் வலியுறுத்தப்பட்டுள்ளது. அகம் சார்ந்த இன்பத்துப்பாலைத் தவிர்த்த மற்ற குறள்களில் அறம் என்ற சொல்லாட்சியைக் காணமுடிகின்றது. இன்பத்துப்பாலில் இல்லறவாழ்க்கையின் இனிய பக்கங்கள் குறிப்பிடப்பட்டாலும் தலைவன் - தலைவி இணைந்து செய்யும் அறக்கடமைகள் குறிக்கப்படவில்லையாகையால் அங்கு அறம் என்ற சொல்லாட்சியைக் காணமுடியவில்லை.

**நாலடியாரில் அறம்**

திருக்குறளை அடுத்து பெரும்பான்மை அறியப்படும் அறநூல் நாலடியார் ஆகும். 'நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி' என்ற பழமொழியில் நான்கு என்பது நாலடியாரைக் குறித்து நின்றது. நாலடியார் அறத்துப்பால், பொருட்பால் இன்பத்துப்பால் என்ற மூன்று பிரிவுகளின் அடிப்படையில் 400 பாடல்களைக் கொண்டது. அறத்துப்பாலில் செல்வம், இளமை, யாக்கை நிலையாமை, அறன் வலியுறுத்தல், துறவு, சினம் இன்மை, பொறையுடைமை, பிறர்மனை நயவாமை, ஈகை, மெய்ம்மை, தீவினை அச்சம் ஆகியவை இடம் பெறுகின்றன. பொருட்பாலில் கல்வி, முற்பிறப்பின் அறப்பயனால் ஏற்பட்ட குடிப்பிறப்பு பற்றியும், சான்றோராகிய மேன்மக்கள் குறித்தும், பெரியாரைப் பிழையாமை, நல்லினம் சேர்தல், பெருமை, முயற்சியாகிய தாளாண்மை, சுற்றம் தழால், நட்பு, அறிவுடைமை பற்றியும் இடம்பெறுகின்றன. இன்பத்துப்பாலில் பொதுமகளிர் பற்றியும் கற்புடை மகளிர் பற்றியும் சுட்டப்பட்டுள்ளது. செல்வமும், இளமையும், யாக்கையும் நிலையில்லாதது. இதனை,

**'புல் நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி**
**இன்னினியே செய்க அறவினை' (நாலடியார் . 29)**

என்று நாலடி நானூறு கூறுகிறது. ''பசுக்கள் பல்வேறு நிறத்தனவாயினும் அவைதரும் பால் வெவ்வேறு நிறமுடையதன்று ; ஒரே நிறம் உடையது தான். பாலைப் போல அறப்பயனும் ஒரே தன்மை உடையதாகும். அவ்வறத்தை ஆற்றும் முறைகள் பசுக்களின் நிறங்களைப் போலப் பலவாகும்'' [15] என்பதை,

**'ஆவே றுருவின வாயினும் ஆபயந்த**
**பால்வே றுருவின அல்லவாம் – பால்போல்**
**ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆபோல்**
**உருவு பலகொளல் ஈங்கு' (நாலடியார் . 118)**

என்ற பாடல்வழி அறியமுடிகின்றது. மேலும் ஒழுக்கத்தின் மேன்மையை யுணர்ந்து, ஒருவன் பிறருடைய இரகசியங்களைக் கேட்பதில் செவிடனாகவும் அயலார் மனைவியைக் காண்பதில் குருடனாகவும் பிறர் இல்லாதபோது அவரைப் பற்றிப் பழித்துப் பேசுவதில் ஊமையாகவும் இருப்பானானால் அவனுக்கு வேறெந்த அறமும் கூற வேண்டியதில்லை என்று நாலடியார் 158- ஆம் பாடல் குறிப்பிடுகிறது. கற்புடைய மகளிரைப் பற்றி,

**‘அரும்பெறற் கற்பின் அயிராணி யன்ன**
**பெரும்பெயர்ப் பெண்டிர் எனினும் – விரும்பிப்**
**பெறுந சையால் பின்னிற்பார் இன்மையே பேணும்**
**நறுநுதலாள் நன்மைத் துணை’ (நாலடியார் . 380)**

என்கிறது நாலடியார். இந்திராணி போன்ற கற்புடைய பெண்ணேயானாலும் தன்பின்னால் பிற ஆடவர் நிற்காத முறையில் தன்னைக் காத்துக் கொள்பவளே கற்புடைய மனைவியாவாள். இது போன்ற பல அறங்களை நாலடியார் தன்னுள் அடக்கியுள்ளது.

**நான்மணிக்கடிகையில் அறம்**

நான்மணிக்கடிகை கடவுள் வாழ்த்தோடு 106 பாடல்களைக் கொண்டு விளம்பிநாகனார் என்பவரால் இயற்றப்பட்டது. அறம் மறுமைக்கு உறுப்பாகும் என்பதை நான்மணிக்கடிகை எடுத்துரைக்கிறது. இதனை,

**‘நிலத்துக்கு அணியென்ப நெல்லுங் கரும்பும்**
**குளத்துக்கு அணியென்ப தாமரை பெண்மை**
**நலத்துக்கு அணியென்ப நாணம் தனக்கணியாம்**
**தான்செல் உலகத் தறம்’ (நான்மணிக்கடிகை . 11)**

என்ற பாடல் “அறிஞர், நெற்பயிரும் கரும்பும் வயலுக்கு அழகை அளிக்கும் என்று உரைப்பர். நீர் நிலைக்குத் தாமரை மலர்கள் அழகுதரும் என்று உரைப்பர். நாணம் கொள்ளும் இயல்பு பெண்மைக்குரிய கற்புத்தன்மைக்கு அழகு தரும் என்று உரைப்பர். தான் செல்லும் மறுமை உலகத்துக்குத் துணையான அறங்கள் ஒருவனுக்கு அழகுதரும் என்று உரைப்பர்” [16] என்கிறது. மேலும்,

**‘….. …… …… – தன்னொடு**
**செல்வது வேண்டின் அறஞ்செய்க வெல்வது**
**வேண்டின் வெகுளி விடல்’ (நான்மணிக்கடிகை . 17)**

என்று மறுமைக்குத் தன்னுடன் துணையாய் வர அறங்களைச் செய்யக் கட்டளையிடுகிறது.

**இன்னா நாற்பதில் அறம்**

கபிலர் இன்னாதவைகளை 40 செய்யுள்களாக்கி அதில் கூடாத அறங்களை வகைப்படுத்துகின்றார். பொருள் இல்லாத வறியவர் நல்ல அறங்களைச் செய்ய விரும்புதல் துன்பமாகும் (இ.நா.15), ஈன்றானை ஓம்பாது விடல் துன்பமாகும் (இ.நா.17), புலவனுக்குப் பரிசில் கொடுத்து அனுப்பாமை துன்பமாகும் (இ.நா.39), ஊனைத் தின்று

ஊனைப் பெருக்குதல் முன்னின்னா (இ.நா.22) என்றும் இன்னாநாற்பது கூறுகிறது. மேலும்,

**'அடக்க முடையவன் மீளிமை இன்னா**
**துடக்க மிலாதவன் தற்செருக்கு இன்னா**
**அடைக்கலம் வவ்வுத லில்லா ஆங்கின்னா**
**அடக்க அடங்காதார் சொல்' (இ.நா.40)**

என்று கூறப்படுகிறது. இதன் பொருளானது "ஐம்பொறி அடக்கம் உடைய ஒருவனின் தறுகண்மை துன்பம் அளிக்கும். முயற்சி இல்லாதவன் தன்னை மதிக்கும் மதிப்பு துன்பமாகும். மற்றவர் அடைக்கலமாக வைத்த பொருளைக் கவர்ந்து கொள்ளுதல் துன்மாகும். அவ்வாறே அடக்கமற்றவர்க்குக் கூறும் சொல் துன்பம் தருவதாகும்"[17] என்பதாகும். புலனடக்கம் உடையவனிடத்தும் முயற்சி இல்லாதவனிடத்தும் தான் என்ற அகந்தை கூடாது என்றும் அடைக்கலப் பொருளைக் கவர்தலும், அடக்க மற்றவர்க்கு அறிவுரை வழங்கலும் இன்னாத செயல்களாக இங்கு சுட்டப்பட்டுள்ளன.

**இனியவை நாற்பதில் அறம்**

பூதஞ்சேந்தனாரின் இனியவை நாற்பது நல்லறங்கள் பற்றி நவில்கிறது. பிச்சைப்புக்காயினும் கற்றல் நன்று (இனி.நா.1) என்றும், ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை (இனி.நா.4) முன் இனிது என்றும், கொல்லாமை (இனி.நா.5) இனிதென்றும், தந்தையேயாயினும் அவன் மனம் மொழி மெய்கள் தீய வழியில் போய் அடங்காதவனானால் மகன் அவனது சொல் கேளாமை (இனி.நா.7) இனிதென்றும், அன்புடையராதல் (இனி.நா.9) இனிதென்றும், எவரிடத்தும் இரவாது தான் ஈதல் (இனி.நா.16) இனிதென்றும் மெய்யைப் போற்றி அனைவருக்கும் பணிந்தொழுகல் (இனி.நா.19) இனியதென்றும், அறம் புரிந்து அல்லவை நீக்கல் (இனி.நா.21) இனிதென்றும், காவோடு அறக்குளம் தோண்டல் (இனி.நா.23) இனிதென்றும்,

**'நன்றிப் பயன்தூக்கி வாழ்தல் நனி இனிதே**
**மன்றக் கொடும்பாடு உரையாத மாண்பினிதே**
**அன்றறிவார் யாரென் றடைக்கலம் வௌவாத**
**நன்றியின் நன்கினியது இல்' (இனி. நா.30)**

என்றும் சொல்லப்பட்டுள்ளது. நன்றியுணர்வு, நீதிமன்றத்தில் பொய் கூறாமை, அடைக்கலப் பொருளை தனதாக்கிக் கொள்ளாமை அறமாகும்.

**திரிகடுகத்தில் அறம்**

நல்லாதனாரால் இயற்றப்பட்ட திரிகடுகத்தில் பல அறக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. தானம் கொடுத்தல் சான்றோரை மதித்தல், பரத்தையரைச் சேராமை, அறச்சாலையைச் சேதப்படுத்தாமை, வாய்மையுடனிருத்தல், வறுமையுடையவர்க்கு ஈதல், வறுமையுற்றாலும் இரவாமை, நட்பு, நன்றி மறவாமை, நீதிமன்றத்தில் (அறநிலையத்தில்) பொய்கூறாமை, அடைக்கலப் பொருளைக் கவராமை, உயிர்களைத் துன்புறுத்தாமை, முதிர் கன்னிக்கு வாழ்வளித்தல் (திரி.69), விருந்தினரைப் பேணல் போன்றவை அறச் செயல்களாகும். மேலும் அறவழியில் செல்வதற்கு பெரிய நூற்களின் பொருளைக்கற்க வேண்டும். மேலும் ஐந்து பெரியோர்களின் ஆணையை மறுத்தல் பாவச்செயல் என்பதை,

**'ஐங்குரவர் ஆணை மறுத்தலும் ஆர்வுற்ற**
**எஞ்சாத நட்பினுள் பொய்வழக்கும் – நெஞ்சமர்ந்த**
**கற்புடை யாளைத் துறத்தலும் இம்மூன்றும்**
**நற்புடையி லாளர் தொழில்' (திரி. 97)**

என்றும், ''குறையாது வளர்கின்ற நட்புடையவனிடத்தில் பொய் பேசுதலும், தன்னை உள்ளத்தால் விரும்பிய கற்புடைய மனைவியைத் துறத்தலும் அறமற்றவரின் செயல்கள்''[18] என்றும் வலியுறுத்தப்படுகின்றன. துறவி, வேதியர், மன்னன், மனைவி ஆகியோர் அறமாந்தர்கள் ஆவர். இவர்கள் பெய்யெனில் மழையும் பெய்யும் (திரி.96, 98) என்று திரிகடுகம் சுட்டுகிறது.

**ஆசாரக்கோவையில் அறம்**

மனிதன் துயில் எழுவது முதல் உறங்குவது வரை ஒழுக வேண்டிய ஒழுக்கங்களைப் பெருவாயின் முள்ளியார் ஆசாரக்கோவையில் பட்டியலிட்டுக் காட்டுகின்றார். நன்றி மறவாமை, பொறுமை, இனியசொல், உயிர்களைத் துன்புறுத்தாமை, கல்வி, ஒப்பரவு, அறிவுடைமை, நட்பு ஆகியவை அறிஞரால் போற்றப்படும் அறங்கள் ஆகும்.

**'வைகையறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்**
**நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதில்**
**தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே**
**முந்தையோர் கண்ட முறை' (ஆ. கோ. 4)**

இப்பாடலில் வைகறையில் துயிலெழுந்து நல்லறத்தையே நினைக்க வேண்டும். தாய் – தந்தையரைத் தொழ வேண்டும் என்ற அறம் வற்புறுத்தப்படுகிறது. அறம் செய்ய வேண்டிய நாள்கள் குறித்து,

**‘கலியாணம் தேவர் பிதிர்விழா வேள்வியென்ற**

**ஐவகை நாளும் இகழா தறஞ்செய்க**

**பெய்க விருந்திற்கும் கூழ்’ (ஆ. கோ. 48)**

என்று கூறப்படுகிறது. அறஞ்செய்வதிலும் கட்டுப்பாடு உண்டு என்கிறது ஆசாரக்கோவை. அறச்செயல்கள் செய்யும் போது அரசரைவிட அதிகம் செய்யாமை (ஆ.கோ.85) நன்மை பயக்கும் என்கிறது. ஒருவருக்கு செய்த உதவி பற்றி பிறரிடம் பேசாமையே (ஆ.கோ.88) அறமாகும்.

**சிறுபஞ்சமூலத்தில் அறம்**

காரியாசனால் இயற்றப்பட்டது சிறுபஞ்சமூலம் ஆகும். பொய் சொல்லாமை, திருடாமை, எளியவரை வையாமை, உள்ளம் தளராமை, பிற உயிரின் தசையை உண்ணாமை அறமாகும். பிறர் பொருட்டுத் தன்மனம் நெகிழ்ந்த அருள் காரணமாக அறம் உண்டாகும். இல்லறம் – துறவறத்தால் நல்ல அறத்தைப் பேணின் கொடையால் பொருள் இன்பமும் தவத்தால் துறக்க இன்பமும் ஞானத்தால் வீடுபேற்று இன்பமும் கிட்டும் என்று சிறுபஞ்சமூலம் 36 –ஆம் பாடல் சுட்டுகிறது. பொருள்- இன்பம்- துன்பத்திற்கு அஞ்சாமை, அருள், அறம் ஆகியவற்றை குணமாகக் கொண்டவன் மன்னனால் மதிக்கப்படுவான் (சி.ப.மூ.59) என்றும் சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது.

**‘நீரறம் நன்று நிழல் நன்று தன்னில்லுள்**

**பாரறம் நன்றுபார்த்து உண்பானேல் – பேரறம்**

**நன்று தனிசாலை நாட்டல் பெரும்போகம்**

**ஒன்றுமாம் சால வுடன்’ (சி.ப.மூ.63)**

என்ற பாடல் ‘‘நீர் அளித்தல், நிழல் உண்டாக்கல், வீட்டில் பிறர் உறைய இடமளித்தல், மற்ற உயிர்களுக்கு பகுத்துத் தந்து உண்டல், கோயிலுடன் சோலை அமைத்தல் ஆகியவை அறம்’’[19] என்கிறது. குளம் வெட்டி, அதைச் சுற்றி மரம் நட்டு, மக்கள் நடக்க வழி உண்டாக்கி, தரிசான நிலத்தைச் செப்பம் செய்து உழுநிலமாக்கி, பக்கத்தில் கிணறு தோண்டி அறம் செய்பவன் (சி.ப.மூ.66) துறக்கத்தை அடைவான். தவக்கோலம் பூண்டோர் பிறர் கூறும் கடுஞ்சொல்லை பொறுத்துக் கொள்ள இயலவில்லையெனில் இல்லறத்தில் (சி.ப.மூ.67) இருத்தலே அறமாகும். ஒரு உயிரைக் கொன்றவன், கொலை செய்யத் தான் உடன்பட்டவன், நாணாமல் கொன்றதை விலைக்கு வாங்கியவன், வாங்கியதைச் சமைத்தவன், சமைத்ததை உண்டவன் ஆகியோர் கொலை பாவத்துக்குரியோர் ஆவார். பெண்மையைப் பேணல் பேரறம் என்று,

**‘ஈன்றெடுத்தல் சூல்புறம் செய்தல் குழவியை**

**ஏன்றெடுத்தல் சூலேற்ற கன்னியை – ஆன்ற**

**அழிந்தாளை இல்வைத்தல் பேரறமா ஆற்ற**

**மொழிந்தார் முழுநூலார் முன்பு’ (சி.ப.மூ.72)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது. “தாய், தான் பெற்ற குழந்தையை எடுத்து வளர்த்தல், தான் அடைந்த கருவை அழிக்காது வெளிப்படுத்தல், வளர்ப்பவர் இல்லாத குழந்தையைக் கண்டு வளர்த்தல், கருக்கொண்ட கன்னியையும் கைம்பெண்களையும் வீட்டில் வைத்துப் பாதுகாத்தல் என்ற இந்த ஐந்தும் பழமையான நூலறிவோர் முன் காலத்தில் பெரிய அறமாக மொழிந்துள்ளனர்.”[20] மேலும் இல்லறம் துறவறத்தை விடச்சிறந்ததென்றும் சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது.

**ஏலாதியில் அறம்**

கணிமேதாவியாரால் இயற்றப்பட்ட ஏலாதி இல்லற ஒழுக்கத்தையும் துறவற ஒழுக்கத்தையும் கூறுகிறது. கொல்லாமை, ஊன் உண்ணாமை, பிறரை வருத்தாமை, வஞ்சம் செய்யாமை, பசித்துன்பம் நீக்குதல், தீய ஒழுக்கத்தைக் கைவிடல், பொய் சொல்லாமை, மெய் கூறுதல், பற்று வையாமை, மனவடக்கம், நல்லியல்பு, ஈகை, பொறுமை, விருந்தினர்க்கு இன்சொல், மனம் நிறைந்த அன்பு, பிறருக்கு உணவு – உடை – உறையுள் அளித்தல், பிறர் நோய் தீர்த்தல், நூல்கள் வழி ஒழுகல், வறியர் துறவியர்க்கு உணவு – மருந்து – இடம் – உடை அளித்தல் ஐம்பொறிகளையும் ஐந்து புலன்மேல் செல்லாமல் அடக்குதல் (அவாவறுத்தல்), பொய்யாமை, கள் உண்ணாமை, சிற்றினம் சேராமை ஆகியவற்றை ஏலாதி அறமென்கிறது. துறவுநெறி ஒழுக்கத்தை, இல்லறத்திலிருந்து செய்தால் அது துறவறத்தைவிடச் சிறந்தது என்பதை,

**‘துறந்தார்கள் துன்னித் துறவார்க்கு இடுதல்**

**இறந்தார்க் கினிய இசைத்தல் – இறந்தார்**

**மறுதலை சுற்றம் மதித்தோம்பு வானேல்**

**இறுதலில் வாழ்வே யினிது’ (ஏலாதி. 16)**

என்ற அடிகள் விளக்குகின்றன. “ஓர் உயிரையும் கொல்லான், மற்றவர் கொல்வதையும் விரும்பான், பொய்யைச் சொல்லான், மற்றவர் மனைவியின் மீது தனக்கு உரிமை விரும்பான், சிறியார் கூட்டத்தைச் சேரான், மற்றவர் மறைவாய்க் கூறும் மறை பொருள்களில் மனம் கொடான், தீய சொற்களைப் பேசுவதில் ஊமை”[21] என்ற இயல்புகள் அறநெஞ்சினர்க்குரியவை.

சூதாடுதலை விரும்பாமலும், அறநெறியின்று பிறழாமலும், பிறர் மனம் கலங்குமாறு பேசாமலும், எவரிடத்தும் வாது பேசுவதை விரும்பாமலும், துறவியர்க்கு எள்ளும், பருத்தியால் ஆன அரைஞாணும், எண்ணெயும், ஆடையும், பணமும் போர்வையும் உணவும் தருபவன் இன்பம் பொருந்தி வாழ்வான் (ஏ. 43, 50) என்கிறது ஏலாதி. வீட்டை இழந்தவர், கண்பார்வை இழந்தவர், செல்வத்தை இழந்தவர், விளைந்த நெல்லை இழந்தோர், பசு மந்தையை இழந்தவர், கடன் பட்டவர், தம்மைக் காப்பவர் இல்லார், கையில் பொருள் இல்லாதவர், கால் முடமானவர், முதியவர், ஆதரவற்றோர், அந்தணர், பசித்தவர், துறவியர், மற்றவரால் வெறுக்கப்படுபவர், அறநெறி மிக்கவர், குழந்தையைப் பெற்றவர், குழந்தை பேறு காலத்தில் வருத்தப்படுபவர், கருவுற்றவர், குழந்தைகள், அறிவு மயங்கியவர், வாதநோயுடையோர், கொடிய சிரங்கு நோயுடையோர், வெண்குட்ட நோய், கல்லடைப்பு, கழலைநோய், வயிற்றெரிச்சல் நோய் உள்ளோர், தாயை இழந்த குழந்தை, கணவனை இழந்த மனைவி, பேச்சிழந்த ஊமை (ஏலாதி .52, 52, 54, 55, 57, 78) ஆகியோரைக் காத்தல் அறமாகும்.

**பழமொழி நானூற்றில் அறம்**

பழமொழி அல்லது முதுமொழி என்பது பன்னெடும் காலமாக உலக வழக்கில் உள்ளது. அதில் நானூற்றினை தன் புலமையால் முன்றுறையரையனார் பழமொழி நானூற்றாக்கித் தந்துள்ளார். எளியவர்க்குத் தீமை செய்யாமை, உறவினரைத் துன்புறுத்தாமை, இன்னா செய்தாருக்கும் இனியவை செய்தல், நடுவுநிலைமையின்று பேசுதல், நற்குணமற்ற நண்பர்க்கும் நன்மை செய்தல், பகைவரிடமும் இரங்குதல், நல்ல நட்புக்குக் கைகொடுத்தல், அடைக்கலப் பொருளைக் கவராமை, மறுமைவரம் வேண்டி இம்மையில் வேள்விக்காக கொலை செய்யாமை, நன்றி மறவாமை, உணவிடுதல், சூதாடாமை ஆகியவை அறமெனச் சுட்டுகிறது. அதிகவரி வாங்குதல் பற்றி,

**‘அடைய அடைந்தாரை அல்லவை செய்து**
**கொடை வேந்தன் கோல்கொடிய னாகிக்குடிகள்மேல்**
**கூட்டிறப்பக் கொண்டு தலையளிப்பின் அஃதன்றோ**
**சூட்டறுத்து வாயி லிடல்’ (பழ.நா.246)**

என்கிறது. அதிகவரி வாங்கி மக்களுக்கு நன்மை செய்வது மயிலின் கொண்டையை அறுத்து, அதனை அதற்கே உணவிடுவதைப் போன்றதாகும். மேலும் பொருள் இருக்கும் போதே அறம் செய்ய வேண்டும் என்றும், அறம் செய்வதை இடையில் கைவிடலாகாது என்றும், சில நாட்களாவது அறம் செய்ய வேண்டும் என்றும், வாழும் போதே அறம் செய்ய வேண்டும் என்றும் அருளுடன் அறம் செய்ய வேண்டுமென்றும் வலியுறுத்தப்படுகிறது.

அறத்தையும் தவத்தையும் வஞ்சனையற்று எதிர்பார்ப்பற்று செய்யவில்லையெனில் நரகம் கிட்டும். ஈகையறம் அறத்தில் சிறந்தது. மேலும் ஈயெனக் கேட்குமுன்னரே குறிப்பறிந்து ஈதல் வேண்டும் என்று பழமொழி அறத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

**முதுமொழிக்காஞ்சியில் அறம்**

மதுரைக் கூடலூர் கிழார் முதுமொழிகளை முதுமொழிக்காஞ்சியில் குறிப்பிட்டுள்ளார். அறத்தாற்றின் ஈயாதது ஈகை அன்று என்றும் ஆசிரியனுக்கு பொருள் தந்து கற்க வேண்டும் என்றும் கூறப்பட்டள்ளது. மேலும் ''அறியாத் தேசத்து ஆசாரம் பழியார்''[22] என்பது வேற்று நாட்டவரின் ஒழுக்கம், பழக்க – வழக்கம் மாறுபடும் என்பதை சுட்டுகிறது. அறமும் நாட்டுக்கு நாடு மாறுபடக்கூடியதாய் உள்ளது.

**இன்னிலையில் அறம்**

பொய்கையாரின் இன்னிலை அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் என்ற நான்கு பிரிவுகளைக் கொண்டது. கீதையின் அறவுரையைக் கேட்டு, பேயும் அறவோராகியது (இன்னிலை.1) என்ற செய்தி இதில் இடம் பெறுகிறது. முப்பொருள் பற்றி,

**'முப்பொருள் உண்மை தெளிவான் அருஞ்சீலன்**
**முப்பொருள் உண்மை உடையான் அருமுனிவன்**
**முப்பொருள் உண்மை மடுப்பான் இறையாங்கு**
**முப்பொருள் உண்மைக்கு இறை' (இன்னிலை . 16)**

என்கிறது. ''அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பொருள்களின் உண்மையான இயல்புகளை உணர்ந்து தெளிவுடையவன் அரிய ஒழுக்கம் உடையவன் ஆவான். அம்முப்பொருளின் உண்மை அறிவை உடையவன் அரிய தவமுனிவன் ஆவான். அம்மூன்று பொருள்களின் உண்மையை மக்கட்குக் காட்டி வளர்ப்பவன் மன்னன் ஆவான். அம்மூன்று மெய்ப்பொருளுக்கு உறைவிடம் ஆகும்.'' [23] குரு, மன்னன், தாய், தந்தை, தமையன் என்ற ஐந்து குரவர்களையும் காத்தல், அவர்களின் துன்பம் நீக்கல், நல்ல உணவை அளித்தல், பிறர் துன்பம் களைதல் இவற்றோடு அறங்கள் முப்பத்திரண்டில் தனக்கு இயன்றதைச் செய்தல் (இன்னிலை . 37) வேண்டும். இவ்வாறு அறங்கள் பலவும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் சொல்லப்பட்டுள்ளன.

**அறங்கள் முப்பத்திரண்டு**

அறங்களை அபிதான சிந்தாமணி முப்பத்திரண்டு எனக்குறிப்பிடுகிறது. ''1.ஆதுலர்க்குச் சாலை, 2.ஓதுவார்க்குணவு, 3.அறுசமயத்தவர்க்கும் உணவு, 4.பசுவிற்கு

வாயுறை, 5.சிறைச் சோறு, 6.ஐயம், 7.தின்பண்டம் நல்கல், 8.அறவைச் சோறு, 9.மகப்பெறுவித்தல், 10.மகவு வளர்த்தல், 11.மகப்பால் வார்த்தல், 12.அறனும் பிணஞ்சுட்டல், 13.அறவைத்தூலியம், 14.சுண்ணம் அடித்தல், 15.நோய் மருந்து தருதல், 16.வண்ணார்க்கு உதவல், 17.நாவிதர்க்கு நவிலல், 18.கண்ணாடி வழங்குதல், 19.காதோலை அளித்தல், 20.கண்மருந்து அளித்தல், 21.தலைக்கெண்ணெய் தருதல், 22.பெண் போகம் தவிர்த்தல், 23.பிறர்துயர்காத்தல், 24.தண்ணீர்ப்பந்தல் அமைத்தல், 25.மடம் ஏற்படுத்துதல், 26.தடம் உண்டாக்கல், 27.காத்தல், 28.ஆவுரிஞ்சு தறி கொடுத்தல், 29.விலங்கிற்குணவு, 30.எறுவிடுத்தல், 31.விலை கொடுத்து உயிர்காத்தல், 32.கன்னிகா தானம் என்னும் முப்பத்திரண்டும் அறச்செயல்களாக அமைந்திருக் கின்றன.''[29] மேலும் தொகையகராதியும் இம்முப்பத்திரண்டையும் அறமென்கிறது.

**பிருகத்தர்ம புராணம் கூறும் அறத்தின் வகைகள்**

சாத்திரங்களில் அறம், 'தர்மம்' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. ''இந்த உலகைக் காக்கின்ற தர்மம் என்ற காளைக்கு நான்கு கால்கள் உண்டு. ஸத்ய (க்ருத) யுகத்தில் நான்கு கால்களும் முழுமையாக இருக்கும். த்ரேதாயுகத்தில் மூன்றும், த்வாபரயுகத்தில் இரண்டும், கலியில் ஒரே காலும் இருக்கும். தர்மத்தின் நான்கு கால்காளவான – ஸ்த்யம், தயை, அமைதி, அஹிம்ஸை''[30]ஆகும். சக்தியம் பன்னிரண்டு பிரிவுகளையும், தயை ஆறு பிரிவுகளையும், அமைதி முப்பது பிரிவுகளையும் அகிம்சை ஏழு பிரிவுகளையும் கொண்டது.

**அ. சத்தியத்தின் பன்னிரு பிரிவுகள்**

''அமித்$_2$ யாவசநம் ஸத்யம் ஸவ்காரப்ரதிபாலநம்
ப்ரியவாக்யம் கு$_3$ரோ : ஸேவா த்$_3$ரு$_4$ம் சைவ வ்ரதம் க்ருதம்
ஆஸ்திக்யம் ஸாது ஸங்கஸ்ச பிதுர்மாது : ப்ரியங்கர :
ஸீஷீசித்வம் த்$_3$விவித$_4$ம் சைவ ஹ்ரீரஸஞ்சய ஏவச''[31]

1. பொய் கூறாமை – அமித்யாவசநம்
2. வாய்மை – ஸத்யம்
3. ஏற்றுக் கொண்டதைச் செய்து முடித்தல் – ஸ்வீகாரப்ரதிபாலநம்
4. இன்சொல் – ப்ரியவாக்யம்
5. பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல் – குரோ:ஸேவா
6. விரதத்தை உறுதியுடன் கடைபிடித்தல் – த்ருடம் சஏவ வ்ரதம் க்ருதம்
7. தெய்வ நம்பிக்கை – ஆஸ்திக்யம்

8. இறைவனடியாரிடம் இணக்கம் – ஸாது ஸங்கஷ்ச

9. தாய், தந்தையரின் விருப்பத்தை நிறைவேற்றுதல் – பிதுர் மாது : ப்ரியங்கர :

10. அகத்தூய்மையும் புறத்தூய்மையும் – ஸீ சித்வம் த்விவிதம் சஏவ

11. தீய செயல்களில் வெட்கம் – ஹ்ரீ :

12. தேவைக்கதிகமாக ஏற்றுக்கொள்ளாமை – அஸஞ்சய ஏவச (அபரிக்ரஹம்)

ஆ. **தயை என்பது ஆறு பிரிவுகள்**

"பரோபகாரோ த$_3$ாநம் ச ஸர்வத$_3$ா ஸ்மிதப$_4$ ா ஷணம்

விநயோ ந்யூநதாப$_4$ா வஸ்வீகார : ஸமதாமதி :"[32]

1. பிறர்க்கு உதவி – பரோபகார

2. தானம் (கொடை) – தாநம்.

3. எப்பொழுதும் இன்முகத்துடன் பேசுதல் – ஸர்வதா ஸ்மித பாஷணம்

4. பணிவு – விநய :

5. தன்னை எளியவன் என எண்ணுதல் – ந்யூநதா பாவஸ்வீகார :

6. சமதர்மம் (சமபாவனை) – ஸமதாமதி :

**இ. அமைதிக்குரிய முப்பது இலக்கணங்கள்**

"அநஸீயால் பஸந்தோஷ இந்த்$_3$ ரியாணாம் ச ஸம்பயம:

அஸங்கமோ மௌநமேவம் தே$_3$வபூஜாவிதை$_4$ள மதி:

அகுதம்சித்$_3$ப$_4$ யத்வம் ச க$_3$ாம் பீ$_4$ ர்யம் ஸ்தி$_2$ ரசித்ததா

அரூக்ஷப$_4$ாவ ஸர்வத்ரநி :ஸ்ப்ருஹத்வம் த்$_3$ருடா$_4$மதி :

விவர்ஜநம் ஹ்யாகார்யாணாம் ஸம : பூஜாபமாநயோ :

ஶ்ரீ லாகா$_4$ பரகு ணே ஸ் தேயம் ப்ரஹ்மசர்யம் த்$_4$ருதி : க்ஷமா

ஆதித்$_2$யம் சஜபோ ஹோமஸ்தீர்த$_2$ ஸேவா ய ஸேவநம்

அமத்ஸரோ ப்$_3$ந்த$_4$மோக்ஷ ஜ்ஞாநம் ஸந்ந்யாஸப$_4$ாவநா

ஸஹிஷ்ணுதா ஸீது$_3$:கே$_2$ஷீ அகார்பண்யம மூர்க$_2$ தா:"[33]

1. பிறர் குற்றம் பாராமை – அநஸீயா

2. சிறிது பெறினும் மகிழ்தல் – அஸ்பஸந்தோஷ:

3. புலன் அடக்கம் – இந்த்ரியாணாம் ச ஸம்யம :

4. போகங்களில் பற்றின்மை – அஸங்கம் :

5. பயனில பேசாமை – மௌநம்

6. தெய்வ வழிபாட்டில் ஈடுபாடு – தேவ பூஜாவிதௌ மதி :

7. எதிலும் பயமின்மை – அகுதஸ் சித்பயத்வம் ச

8. மன ஆழம் – காம்பீர்யம்

9. ஒருநிலைப்பட்ட மனம் – ஸ்திரசித்ததா

10. கடுகடுப்பின்மை – அரூக்ஷபாவ :

11. எதிலும் பற்றின்மை – ஸர்வத்ர நிஸ்ப்ருஹத்வம்

12. உறுதியான புத்தி – த்ருடா மதி :

13. செய்யத்தகாதனவற்றைச் செய்யாமல் இருந்தல் – விவர்ஜநம்ஹி  அகார்யாணம்

14. போற்றினும் தூற்றினும் ஒரே நிலை – ஸம : பூஜாபமாநயோ:

15. பிறர் நற்பண்பைப் பாராட்டுவது – ஸ் லாகா பரகுணே

16. திருடாமை – அஸ்தேயம்

17. பிரம்மசர்யம் – ப்ரஹ்மசர்யம்

18. மன உறுதி – த்ருதி :

19. பொறுமை – க்ஷமா

20. விருந்தோம்பல் – ஆதித்யம் ச

21. கடவுள் புகழ்பாடல் – ஜப:

22. வேள்வி செய்வது – ஹோம :

23. திருத்தலங்கலுக்கு புனிதப்பயணம் செல்வது – தீர்த்தஸேவா

24. பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வது – ஆர்யஸேவநம்

25. பொறாமையின்மை – அமத்ஸர :

26. தளை  (விடுதலைப் பற்றிய அறிவு) – பந்தமோக்ஷஜ்ஞாநம்

27. துறவு மனப்பான்மை – ஸந்ந்யாஸ பாவநா

28. பெருந்துன்பங்களையும் பொறுப்பது – ஸ ஹிஷ்னுதா ஸீது:கேஷீ

29. சிறு மதியின்மை – அகார்ப்பண்யம்

30. பிடிவாதமின்மை – அமூர்க்கதா :

**ஈ . அகிம்சையின் ஏழு பிரிவுகள்**

“அஹிம்ஸா த்வாஸநஜய : பரபீட$_3$ாவிவர்ஜ்நம்

ஸ்ரத்$_3$த$_4$ா சாதித்$_2$ யஸேவா ச ஸாந்தரூபப்பரத$_3$ர்ஸநம்

அத்மீயாதா ச ஸர்வத்ர ஆத்மபு$_3$த்$_3$தி$_4$ : பராத்மஸீ :”[34]

1. அசையாமல் உட்கார்ந்திருப்பது – ஆஸநஜய :

2. பிறருக்குமனதால்,உடலால்,சொல்லால்துன்பம்இழையாமை – பரபீடாவிவர்ஜநம்

3. கவனத்தோடு இருத்தல் – ஸ்ரத்தா ச

4.விருந்தோம்பல் – ஆதித்யஸேவா ச

5.அமைதியாக மலர்ந்த முகத்துடன் இருப்பது – ஸாந்தரூப ப்ரதர்ஸநம்

6. அனைவரையும் தன்னைச் சார்ந்தவர் என்று நினைப்பது – ஆத்மீயதாச

7. எல்லா உயிரையும் தன்னுயிர் போல் பேணுதல் – ஸர்வத்ர ஆத்மபுர்த்தி : பராத்மஸு

இந்த நான்கு கூறுகளும் தர்மத்தைக் கடைபிடிக்க வலியுறுத்துகின்றன. இதற்கு மாறாக நடத்தல் அறமற்றவையாக கருதப்படுகின்றன.

**அறம் குறிக்கும் பொருள்கள்**

அறம் என்பது ஒரு சொல் பலபொருள் குறித்தது. அறத்தைக் குறிக்கும் பொருள் பலவாகும். "சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் அறக்கடவுள், மனத்தூய்மை, சொல் தூய்மை, ஒழுகல், நன்மை, நற்செயல் (அ) நல்வினை, அறநெறி, அறநெறியுடையவர், அறவோர், நீதி வழங்கும் முறை, அறப்பண்பு, வளமை, அறநூல் – நீதிநூல், அரசுமுறை அறம், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, இல்லறம் – மனையறம், துறவறம் – அறன், அறம், பகுத்துண்டல் உலக வழக்கு, அறமுறை, அறக்கிழவன் , வேத தர்மம், அறப்பயன், காரணகாரியம், வாய்மை, புகழும் பயனும், கொல்லாமை, மறுமைக்கு உறுப்பு, பாவம், பார்ப்பார்க்கு அளித்தல், அறஉபாதை ஆகிய பொருண்மைகளில் அறம் பயன் படுத்தப்படுவதைக் குறிப்பிடுகிறது."[35]இவை தவிர அகராதிகள் மூலமும் அறத்திற்கான பொருண்மைகள் பெறப்படுகின்றன. அவையாவன, அறநுணுக்கம், கொடை, விருந்தோம்பல், போர் அறம், அறவோன் – மருத்துவன், அறவோன் மகன் – தருமபுத்திரன் , அறவை – அறம், கடமை, நோம்பு, கற்பு, தீப்பயனுண்டாக்கும் சொல், நயன் – அறப்பண்பு, தவம், கையறம், ஐயம், உதவி, நல்லறம், கருணை, புண்ணியம், நன்று, நல்லூழ், நற்குணம், அதிருட்டம், வீறு, உறுதி, நீர்மை, நன்றி ஆகியவையாகும்.

**அறம் – அறக்கடவுள்**

அறம் என்பதற்கு அறக்கடவுள் என்ற பொருளும் உண்டு. எலும்பில்லா சிறு எறும்பு போன்ற உயிர்களை வெயில் வருத்துவது போல அன்பில்லாத உயிர்களை அறக்கடவுள் வருத்தும் என்பதை,

**'என்பிலதனை வெயில் போலக் காயுமே**

**அன்பில் அதனை அறம்' (குறள் . 77)**

என்ற திருக்குறள் அடிகள் விளக்குகின்றன. மேலும் 130, 204-ஆம் குறள்களிலும் அறக்கடவுள் என்ற பொருளிலேயே அறம் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஐங்குறுநூறு (392: 2), புறநானூறு, பதிற்றுப்பத்து (90 : 12 -13 ) போன்ற நூல்களிலும் இதனைக் காண முடிகின்றது.

**'அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து**

**முறை வேண்டு பொழுதில் பதன் எளியோர் ஈண்டு**

**உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே' (புறம் 35 : 14-16)**

இதன் பொருளாவது அறக்கடவுள்களின் ஆராய்ச்சி போலச் செங்கோலால் ஆராய்ந்து நீதி வழங்க வேண்டும் என்பதாகும்.

**அறம் – மனத்தூய்மை**

அறத்திற்கெல்லாம் தலையாயது மனதில் குற்றமின்றி இருத்தலேயாகும். இதனை,

**'மனத்துக் கண் மாசிலனாதல் அனைத்தறன்**

**ஆகுல நீர பிற' (குறள் . 34)**

என்று வள்ளுவர் குறப்பிடுகின்றார். நல்லவை செய்யாது இருப்பினும் அல்லவற்றை மனதால் நினையாமல் இருப்பதே அனைத்திற்கும் தலையாய அறமாகும்.

**அறம் – சொல்தூய்மை**

மனதால் மட்டுமின்றி சொல்லாலும் தூய்மை உடையவராய் இருத்தல் வேண்டும். தீய வார்த்தைகளைக் கேளாமலும் சொல்லாமலும் இருத்தல் வேண்டும்.

**'அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**

**இழுக்கா இயன்ற தறம்' (குறள் . 35)**

என்பது குறள். இன்னாத சொல் சொல்வது மரத்தில் கனியிருக்க காயைப் பறிப்பதற்குச் சமமாகும். நாவடக்கம் இன்றி தூய்மையற்ற சொல்லைக் கூறினால் அது மற்றவர் மனதில் ஆறாவடுவாக மாறிப்போகும்.

**அறம் – ஒழுகல்**

தலைவன், பரத்தையர் இல்லில் தங்கி வரும் அறமற்ற ஒழுக்கமுறையைக் கையாண்டு வருகின்றான். இவ்வொழுக்கத்தைத் தோழி அறமன்று என்று இடித்துரைக்கின்றாள். இதனை ஐங்குறு நூறு,

**‘தீம்பெரும் பொய்கை யாமை கிளம்பார்ப்பு**

**தாம்முகம் நோக்கி வளர்ந்திசினா ஆங்கு**

**அதுவே ஐய, நின் மார்பே**

**அறிந்தனை ஒழுகுமதி அறனுமார் அதுவே’ (ஐங் . 44)**

என்று சுட்டுகிறது. யாமைப் பார்ப்புகள் தாய்முகம் நோக்கியிருப்பது போல தலைவி நின் மார்ப்பினை நோக்கி வாழ்க்கின்றாள். அதனை உணர்ந்து ஒழுகுதலே அறம் என்பதாக இப்பாடல் பொருள் அமைகிறது. அறம் ஒழுகல் என்ற பொருளில் இவ்வடிகளில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**அறம் – நன்மை**

நன்மையானவை எல்லாம் அறமாக கருதப்பட வாய்ப்புள்ளது. அதனடிப்படையில்,

**‘பிறர் நாணத்தக்கது தான்நாணான் ஆயின்**

**அறம் நாணத்தக்கது உடைத்து’ (குறள் . 1018)**

என்பார் வள்ளுவர். பிறரிடம் எத்தகைய நன்மையை எதிர்பார்கின்றோமோ அதையே மற்றவர்களுக்கு செய்ய வேண்டும். அதுவே அறமாகும். இங்கு அறம் நன்மை என்பதாகச் சுட்டப்பட்டுள்ளது.

**அறம் – நற்செயல் அல்லது நல்வினை**

புறநானூற்றில் வேலிப்புறத்தே நின்று வேண்டுவார்க்கு அறத்தைக் கருதி அகத்திருப்பவர் வயலகத்திலிருந்து கரும்பினைப் பறித்து எறிவர் என்ற செய்தி இடம் பெறுகிறது. அஃது,

**‘புறஞ்சிறை மாக்கட்கு அறம் குறித்து அகத்தோர்**

**புய்த்து எறி கரும்பின் விடு கழை’ (புறம் . 28 : 11 – 12)**

என்பதாகும். அறம் கருதி நற்செயல் செய்தல். இவ்வாறு செய்தல் பண்டைய இயல்பாகும்.

**அறம் – அறநெறி**

அறநெறி என்பது நன்னெறியைக் குறிக்கின்றது. மதுரைக்காஞ்சியில், ‘அறநெறி பிழையா அன்புடை நெஞ்சில்’ (மது. கா. 472),‘அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகி’ (மது. கா. 500) என்பதாக அறநெறி சுட்டப்பட்டுள்ளது.

**அறவர் – அறநெறியுடையவர்**

அறத்தைத் தன் நெறியாகக் கொண்டு ஒழுகுபவர்களை அறவர் என்றும் அறநெறியுடையவர் என்றும் குறிப்பிடுவர். ‘அறவர் அறவன் மறவர் மறவன்’ (புறம்.399:19) என்ற பாடலடி தாமான் தோன்றிக் கோனை, ஐயூர் முடவனார் பாடியதாகும். அறவர்கெல்லாம் அறவன் எனப் புகழ்கின்றார்.

**அறன் – அறவோர்**

அறன் என்ற சொல்லும் அறத்தையே சுட்டுகிறது. அறம் என்பதன் பொருள் அறவோர், அறநெறியுடையோர் என்பதாகும். பதிற்றுப்பத்தில்,

**‘அறன் வாழ்த்த நற்கு ஆண்ட**
**விறல் மாந்தரன் விறல் மருக’ (பதிற்று . 90 :12-13)**

என்று பெருங்குன்றூர் கிழார் பாடியுள்ளார். இவ்வடிகள் அறம் வாழ்த்த நன்கு ஆண்ட வெற்றி வேந்தனைப் புகழ்கிறது. இதில் அறன் என்பது அறவோர் - அறநெறியுடையோரை மட்டுமின்றி அறக்கடவுளையும் குறிப்பதாக உள்ளது.

**அறம் – நீதி வழங்கும் முறை**

நீதி என்பதும் அறம் சார்ந்தது ஆகும். நீதி வழங்குவோர் சமன் செய்து சீர்தூக்கும் துலாக்கோல் போல் செயல்படவேண்டும். நீதி தவறாது ஆட்சிபுரியும் அரசின் நாட்டில் தான் மாதம் மும்மாரி மழை பெய்யும். அதனடிப்படையில் நீதியும் அறமாகக் கருதப்படுகிறது. நற்றிணையில்,

**‘மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் கெட அறியாதாக்கு சிறந்த**
**கேண்மையொடு அளைஇ நீயே**
**கெடு அறியாய் என நெஞ்சத்தானே’ (நற். 40 : 7 -10)**

என்று அறமுறையில் நீதி வழங்கும் முறைபற்றிய செய்தி இடம்பெறுகிறது. நீதியைத் தவறாக வழங்குவதால் ஏற்படும் விளைவினைப் பற்றி நறுந்தொகை,

**‘இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே**
**இருவரும் பொருந்த உரையா ராயின்**
**மனுமுறை நெறியின் வழக்கிழந்த தவர்தம்**
**மனமுற மறுகினின் றழுத கண்ணீர்**
**முறையுறத் தேவர் மூவர் காக்கினும்**
**வழிவழி ஈர்வதோர் வாளா கும்மே’ (நறுந்தொகை . 75)**

என்று சொல்லப்பட்டுள்ளது. ''வழக்குத் தீர்ப்பவர், இருகட்சிக்காரர்களின் முறையீட்டையும் பலமுறை கேட்டு, இருவரும் ஏற்றுக் கொள்ளும்படி தீர்ப்புச் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லாராயின், அறமின்றி வழக்கில் தோற்றவர் விட்ட கண்ணீர் அப்படித்தீர்ப்புச் சொன்னவரின் குடியை வேரோடு அழிக்கும் வாளாகிவிடும். தேவராலும் காக்க முடியாது.''[36]

**அறம் – அறப்பண்பு**

அறம் ஒரு பண்பாகவும் கருதப்படுகிறது. கற்பைப் போல அறப்பண்பும் போற்றுதலுக்குரியது. அகநானூற்று தலைவி தினைப் பயிர் காவலுக்கு செல்வதன் மூலம் தலைவனைக் காண இயலும் என எண்ணுகின்றாள். ஆனால் அவளது தாயோ அவளை அனுப்ப மறுக்கின்றாள். இதனால் வெகுண்ட தலைவி, 'பல்கால் நோக்கும் அறனில் யாயே' (அகம் . 302 : 15) என்று தன் அன்னை அறப்பண்பு அற்றவள் என வெகுண்டு உரைத்தனள்.

**அறம் – வளமை**

அறம் என்ற சொல் வளமை என்னும் பொருளிலும் பயன்படுத்தப்படுகின்றது. தலைவனோடு உடன் போய் திரும்பி வந்த தலைவி, தோழியிடம் கூறுவதாக,

**' அறஞ்சா லியாரோ அறம்சா லியாரோ**

**வறனுண் டாயினும் அறஞ்சா லியாரோ' (ஐங்கு . 312 : 1 -2)**

என்ற அடிகள் அமைகின்றன. உடன் போய காலத்தில் தன்னைத்தேடிவந்த தமையன்மார்களிடமிருந்து மலையானது காப்பாற்றியது. அவர்கள் மலையில் மறைந்து கொண்டதால் தமையன்மார்களால் கண்டுபிடிக்க இயலவில்லை. எனவே அம்மலையை தலைவி நன்றியோடு வாழ்த்துகின்றாள். மழை வறண்டாலும் இம் மலையின் வளமை குன்றக்கூடாது என வேண்டிக்கொள்கிறாள். இதன் மூலம் அறஞ்சாலியரோ என்பதற்கு மலையின் வளம் குன்றாமையே பொருளாகக் கொள்ளப்படுகிறது.

**அறம் – நயன் (அறப்பண்பு)**

நயன் என்ற சொல் அறம், தர்மம் ஆகிய பொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்தில், 'நாடல் சான்ற நயனுடை நெஞ்சில்' (பதிற்று . 86 : 7) என்ற அடியில் நயன் என்ற சொல் இடம் பெறுகிறது. அறத்தினையுடைய நெஞ்சினன் என்பதாகப் பொருள் அமைகிறது.

**அறம் – அறநூல் (நீதிநூல்)**

மனுநீதி போன்ற நீதி நூல்களும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் அறத்தையே வலியுறுத்துகின்றன.

**‘ புறம்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலின் சாதல்**

**அறம் கூறும் ஆக்கம் தரும்’ (குறள். 183)**

புறம்கூறி பொய்யனாக வாழ்வதைவிட இறப்பது அறநூல்கள் கூறும் புண்ணியத்தை உண்டாக்கும். இக்குறளில் அறம் என்பது அறநூலைக் குறித்துநின்றது. அர்த்த சாத்திரம் அறநூல் என்றாலும் ‘‘அற அடிப்படையில் அமைந்ததன்று என்கின்றனர் அறிஞர்பலர்’’ [37]

**அறம் – அரசுமுறை அறம்**

ஒரு நாட்டை அரசு ஆளும் முறையானது அறவழியில் அமைதல் வேண்டும். அஃது அரசுமுறை அறமாகும். எதிர்மறையில் அரசுமுறை அறம் பற்றி,

**‘ சினனே காமம் கழிகண் ணோட்டம்**

**அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை**

**தெறல்கடு மையொடு பிறவும் இவ்வுலகத்து**

**அறம்தெரி திகிரிக்கு வழியடை யாகும்’ (பதிற்று . 22 : 1–4)**

என்று கூறப்பட்டுள்ளது. ‘‘மிகுந்த கோபமும் மிகுந்த காமமும் அளவிறந்த கண்ணோட்டமும் பகைவர்க்கு அஞ்சுதலும் பொய் கூறலும் பொருளினிடத்தில் அளவுக்கு மிஞ்சிய பற்று வைத்தலும் அளவுக்கு மிஞ்சிய தண்டனை அளித்தலும் இவை போன்ற பிறவும் இவ்வுலத்தில் அறவழியில் ஆட்சி செலுத்துதற்குரிய அரசனது ஆணைச் சக்கரத்திற்கு தடையாக நிற்பன’’[38] என்பது பாடல் பொருளாகும்.

**அறம் – அறத்தோடு நிற்றல்**

களவு மணம் கற்பு மணமாக மாற உதவும் செயல் அறத்தோடு நிற்றல் ஆகும். தலைவி, தோழியிடம் தன் களவு நிலையினைச் சுட்டி வரைவிற்கு தன் பெற்றோரை இசைவிக்கும்படி கூறுவாள். தோழியும் செவிலித்தாயிடம் தலைவியின் நிலை கூறி அறத்தோடு நிற்பாள். செவிலி நற்றாயிடமும், நற்றாய் தந்தை தமையனிடத்தும் அறத்தோடு நிற்பர். கலித்தொகையில் தோழி ஒருத்தி அறத்தோடு நின்று திருமணம் கைகூடுகிறது. வரைவு விரைவாக நடைபெற குரவை ஆடுவதாக ஒருபாடல் இடம்பெறுகிறது.

**‘ அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட**

**என்னையர்க்கு உய்த்து உரைத்தாள் யாய்’ (கலி . 39 : 20 – 21)**

என்பது தோழி அறத்தோடு நின்ற நிலையைக் குறிக்கிறது.

**அறம் – உடன்போக்கு**

தலைவி, அலர் காரணமாக இற்செறிக்கப்படும் போது, அறத்தோடு நின்ற காலை அன்னையர் உடன்படாத போதும் தலைவனோடு உடன்போக்கில் செல்வாள். இது கற்பு வாழ்க்கையை மேற்கொள்ளுதல் பொருட்டு நிகழ்வதால் அறமாகவே போற்றப்படுகிறது. மகள் உடன்போக்கில் சென்றகாலை நற்றாய்,

**‘ அறநெறி இதுவெனத் தெளிந்த என்**

**பிறைநுதல் குறுமகள் போகிய சுரனே’ (ஐங்குறு . 371 : 4–5)**

என்று புலம்புகின்றாள். இங்கு உடன்போக்கு அறநெறி என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**அறம் – இல்லறம் – மனையறம்**

இல்வாழ்க்கை பேரறமாகப் போற்றப்படுகிறது. இல்லில் உள்ள அறமே இல்லறமாகும். இல்லற ஒழுக்கம் பற்றி, ‘அறம்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த’ (அகநா. 173 : 1) என்று அறம் சுட்டப்பட்டுள்ளது.

**அறம் – துறவறம்**

இல்லற வாழ்க்கையின் இறுதி துறவற வாழ்க்கையாகும். துறவு நெறியும் அறமாகும். பற்றற்று வாமும் நிலையான துறவறம் அறநெறிப்பாற்பட்டது.

**‘ அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனே**

**வஞ்சிப்பது ஓரும் அவா’ (குறள் . 366)**

ஒருவனை ஏமாற்றி விடுவது ஆசைதான். எனவே ஆசைகளைத் துறந்து நடக்க வேண்டும். துறவறம் அறன், அறம் என்ற இரு சொற்களாலும் குறிக்கப்படுகிறது.

**‘இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்**

**பெருமை பிறங்கிற்று உலகு’ (குறள் . 23)**

இதில் துறவு என்பதற்கு அறம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அறம் – உலகவழக்கு**

உலகில் பெரும்பான்மை வழங்கி வருவது உலக வழக்காகின்றது. உலக வழக்கு என்ற பொருளிலும் அறம் வழங்கப்படுகிறது. தொல்காப்பியத்தில்,

**‘ அறக்கழிவுடையன் பொருட்பயம் படவரின்**

**வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப’ (தொல் . 1164)**

என்ற அடிகளில் உலக வழக்கு அறமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அறன் – அறமுறை**

அறம் என்ற செயல்முறையைக் குறித்து நிற்பது அறமுறையாகும். பெருந்திணைக்குரிய மெய்ப்பாடு கூறுமிடத்து, ‘ அறன் அழித்துரைத்தல் ஆங்கு நெஞ்சழிதல்’ (தொல். 1216) என்று அறனில்லை எனப்பேசுவதாக அமையுமிடம் அறமுறை பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அறம் – வேத தர்மம்**

அறம் வேத நூல்களையும் தர்மத்தையும் குறிப்பதற்குப் பயன்பட்டது. இதனை,

**‘ அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்**

**நின்றது மன்னவன் கோல்’ (குறள் . 543)**

என்ற குறளும் வலியுறுத்துகிறது. அந்தணர் ரிக், யசூர், சாம, அதர்வண வேதங்களை வழிபட்டனர். அந்தணர் நூல் என்பது வேத தர்மத்தைச் சுட்டுகிறது.

**அறம் – அறப்பயன்**

அறத்தினால் உண்டாகும் பயன் பற்றிக் கூறும் போதும் அறம் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது.

**‘ அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை**

**பொறுத்தானொடு ஊர்ந்தான் இடை’ (குறள் . 37)**

என்ற குறளில் பல்லக்கில் அமர்பவன், பல்லக்கை சுமப்பவன் ஆகியோரைக் கொண்டு அறப்பயன் கணக்கிடப்படுகிறது.

**அறம் – காரணகாரியம்**

புண்ணிய பலன் இல்லாதவனைத் தாயும் பழிப்பாள். வறுமை வந்தடையும். புண்ணிய பலன் உள்ளவனை வறுமை தீண்டாது. இதனை,

**‘ அறம்சாரா நல்குரவு ஈன்ற தாயானும்**

**பிறன்போல நோக்கப் படும்’ (குறள் . 1047)**

என்ற குறள் மூலம் அறியமுடிகின்றது. இதில் வறுமை வரக்காரணம் அறம் என்ற காரியத்தைச் செய்யாமையே ஆகும்.

**அறம் – வாய்மை**

உண்மை, மெய் என்ற பொருளில் குறுந்தொகையில், 'அறவன் ஆயினும் அல்லன் ஆயினும்' (குறுந். 284 : 4) என்ற அடியில் அறம் கூறப்பட்டுள்ளது. தலைவிக்கு தலைவன் அறமுடையவனாக, வாய்மையுடையவனாக, கொடுத்த வாக்கு தவறாதவனாக விளங்க வேண்டும் என்பதை **அறவன்** என்ற சொல் குறித்து நின்றது.

**அறம் – புகழும் பயனும்**

குற்றமற்ற வழிகளில் ஈட்டப்பட்ட செல்வம் அந்தக் குற்றமற்ற தன்மைக்குத் தக்கபடி தருமப் பலன்களைக் கொடுக்கும். இன்பங்களையும் நுகர உதவும் என்பதை,

**' அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து**

**தீதின்று வந்த பொருள்' (குறள் . 754)**

என்ற குறள் விளக்குகிறது. இங்கு அறம், புகழ், பயன் என்ற பொருள்களில் கையாளப்பட்டுள்ளது.

**அறம் – கொல்லாமை**

உயிர்க்கொல்லாமையே உயர்ந்த அறமாக சமயங்கள் போற்றுகின்றன. கொல்லாமை புண்ணியம் ஆகும். கொலை செய்வது எல்லா பாவங்களையும் கொண்டு சேர்க்குமென்பதை,

**' அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்**

**பிறவினை எல்லாம் தரும்' (குறள் . 321)**

என்ற குறள்வழி அறியமுடிகின்றது.

**அறம் – மறுமைக்கு உறுப்பு**

பிறருடைய நல்வாழ்வைக் கண்டு பொறாமைப்படுபவன் மறுமைக்கு உறுப்பாகிய அறத்தை இழக்கிறான் என்பதை,

**' அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்**

**பேணாது அழுக்கறுப் பான்' (குறள் . 163)**

என்று குறள் விளக்குகிறது. இதனால் அறம் – மறுமைக்கு உறுப்பு என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**அறம் – பார்பார்க்கு அளித்தல்**

நால்வருணத்தாரில் பார்ப்பார் என்போர் உயர்வாக எண்ணப்பட்டனர். அவர்களது தொழில் வேதம் ஓதுதலும் கற்பித்தலும் ஆகும். அத்தகைய பார்பார்க்கு அளித்தல் அறமாக ஒதுவிக்கப்பட்டது. அதன் அடிப்படையில் இலக்கியங்களும் அதை வலியுறுத்தச் செய்தன. நற்றிணையில், 'அறுமீன் பயந்த அறம் செய் திங்கள்' (நற்றி . 202 : 9) என்று அறம் செய்வதற்கான மாதமும் பார்பார்க்கு அளித்தலும் வலியுறுத்தப்படுகிறது.

**அறம் – அறநுணுக்கம்**

தர்மங்களை அறிந்தவர்களாகவும் அனுபவம் முதிர்ந்தவர்களாகவும் திறமை உள்ளவர்களாகவும் இருக்கிற பெரியவர்களுடைய ஆதரவைத் தேவைக்குத் தகுந்தபடி ஆராய்ந்தறிந்து பெற்றுக்கொள்ளவேண்டும் என்று,

**' அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**

**திறனறிந்து தேர்ந்து கொளல்' (குறள் . 441)**

என்ற குறள் கூறுகின்றது. தர்மங்களின் அனுபவம் அறிந்தவர் என்பது அறணுக்கத்தை அறிந்தவர் என்பதைக் குறிக்கிறது.

**அறன்கடை – பாவம்**

அறன்கடை என்ற சொல் பாவம் என்ற பொருள்பட உள்ளது.

**' அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை**

**நின்றாரின் பேதையார் இல்' (குறள் . 42)**

பிறர்மனை நயத்தல் பெரும்பாவம் என்று குறள் கூறுகிறது.

**அறம் – தீப்பயன் உண்டாக்கும் சொல்**

**அறம்பாடுதல்** என்னும் முறைத் தமிழ் இலக்கியத்தில் உண்டு. இயற்றப்படும் இலக்கியத்தில் தீப்பயன் உண்டாக்கும் சொற்களைப் பயன்படுத்தி பழிதீர்த்தல் அறம்பாடுதல் எனப்படும். நந்திக்கலம்பகம் இயற்றிய புலவர் அவ்விலக்கியத்தில் தீப்பயனுன்டாக்கும் சொற்களைப் பயன்படுத்தியதற்காகவும் ஈமப்படுக்கையில் அமர்ந்து கேட்ட நந்திவர்மன் இறந்துபட்டதாகவும் செய்திகள் உண்டு.

**அறம் – நன்று**

நன்று என்பது நற்செயலைக் குறித்தது. நற்செயல் அனைத்தும் அறமாகக் கருதப்படுகிறது. பதிற்றுப்பத்தில் வென்றிச் சிறப்புக் கூறுமிடத்து, 'தீது சேண் இகந்து, நன்று மிகப் புரிந்து' (பதிற்று . 22 : 5 ) என்று உள்ளது. தீமைகள் அண்மையில் நெருங்காது விடுத்து நன்மைகளைச் செய்தல் வேண்டும். அதுவே அறமாகும்.

**அறம் – நன்றி**

**' எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு'        (குறள் . 110)**

என்பது வள்ளுவர் வாக்கு. அத்தகைய நன்றியும் அறமாகும். 'செய்த நன்றி ஒருநாளும் மறக்கவேண்டாம்' (உலக நீதி .8 : 2) என்று உலகநீதியும் குறிப்பிடுகிறது.

**அறம் – கொடை**

சங்க காலத்தில் கடையெழு வள்ளல்கள் கொடையில் சிறந்து விளங்கியதாகக் குறிப்பிடுவர். சிற்றரசர்கள் பலரும் கொடையால் பெயர் பெற்றனர். பிட்டங்கொற்றன் என்ற சிற்றரசனின் கொடைச் சிறப்பை,

**' இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்**
**களம்மலி நெல்லின் குப்பை வேண்டினும்**
**அருங்கலம் களிற்றொரு வேண்டினும் பெருந்தகை**
**பிறர்க்கும் அன்ன அறத் தகையன்னே'      (புற. 171 : 8 – 11)**

என்று காரிக்கண்ணனார் பாராட்டுகிறார். ''இனமாகிய எருதுகளைத் தொழுவத்தொடு வேண்டினும் களமலிநெல்லின் குப்பை வேண்டினும் அருங்கலம் களிற்றொடு வேண்டினும் தமக்கு மட்டுமின்றிப் பிறர்க்கும் அத்தகைய அறஞ்செய்யும் கூற்றையுடையவன்''[39] என்பது பாடல் பொருளாகும். இங்கு அறம் கொடையாக நின்றது.

**அறம் – கற்பு**

தமிழ் போற்றும் நல்லுலகம் கற்பைப் பேரறமாகக் கருதுகிறது. கற்பு பெண்மைக்கு மட்டும் உரியதன்று. ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவில் வைக்குமாறு பாரதி பாடுகின்றார். 'ஒலிந்த கூந்தல் அறம்சால் கற்பின்' (பதிற்று . 31 : 24 ) என்ற அடியானது களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் தேவி அறஞ்சால் கற்பினள் என்கிறது. கற்பு

என்பது உடல் சார்ந்தது மட்டுமின்றி மனம் சார்ந்ததாகவும் உள்ளது. எனவே தான் மனதுக்கண் மாசிலானாக இருக்கும் கற்பு அறமெனப் போற்றப்பட்டது.

**அறம் – அறவை**

அறநெஞ்சமுடையவர் ஆயர் என்பதை, 'அறவை நெஞ்சத்து ஆயர்' (புறம் 39 : 1) என்னும் புறநானூற்று அடி விளக்குகிறது. அறம், அறவை என்னும் சொல்லாலும் கூறப்பட்டுள்ளது.

**அறவோன் – மருத்துவன்**

அறவோன் என்பவன் மருத்துவன் ஆவான். தீர்க்கரிய நோயைக் கொண்டவர்க்கு அவர் விரும்புவன கொடாது, ஆராய்ந்து நோய் நீக்கத்தக்க மருந்தளிப்பவன் மருத்துவன் ஆவான். இது தலைவி வளையலை விரும்பிக் கேட்டபொழுது அதனைத் தராமல் ஆராய்ந்து சிறிய பொன் வளைகள் செய்து தந்த தந்தை செயலுக்குவமையாகச் (நற்றிணை. 136:1-3,7-9) சொல்லப்பட்டது.

**அறவோன்மகன் – தருமபுத்திரன்**

தருமபுத்திரனைக் கோதமனார், 'அறவோன் மகனே மறவோர் செம்மால்' (புறம்.366:6) என விளித்து அறமுரைத்துள்ளார். பஞ்சபாண்டவர்களில் ஒருவரான தருமன் இந்திரனின் மூலம் குந்திதேவிக்குப் பிறந்தவராகக் கருதப்படுகின்றார். இந்திரன் அறத்தின் தெய்வமாக நீதியின் தோற்றமாகக் கருதப்பட்டதால் அறவோன் மகன் தருமன் ஆவார்.

**அறம் – ஐயம்**

ஐயம் என்ற சொல்லும் அறத்தைக் குறித்தே நீதி நூல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஔவையார், 'ஐயமிட்டு உண்' என்கின்றார். "பிச்சையெடுத்த உணவாயினும் பிறருக்கு அளித்து உண்"[40] என்பது பொருளாகும். ஐயம் என்ற சொல் பிறருக்கு அளித்தல் என்னும் பொருளில் அறமெனப்பட்டது. "Do that which ought to be done even if you have to beg"[41] என்பது 'ஐயம் புகினும் செய்வன செய்' (கொன்றைவேந்தன்.9) என்பதன் மொழிபெயர்ப்பாகும். இதனை நோக்க ஐயம் என்ற சொல் பிச்சை (beg) எனும் பொருளில் கையாளப்பட்டமையை உணரமுடிகிறது. பிச்சையெடுத்தாயினும் செய்வதை செய் என்று அறத்தை வலியுறுத்தி நின்றது.

**அறம் – பிறர்மனை நயவாமை**

ஒருவனுக்கு ஒருத்தி என்பது தமிழர் பண்பாடாகும். தலைவன் ஒருவன் தவறுதலாகக் கூட பிறன் தலைவியை நோக்கிடல் ஆகாது என்பதற்காகவே தாலி என்னும் அடையாளம் பெண்மைக்குரியதாயிற்று. அதனையும் மீறி பிறர்மனை நோக்குபவன் பேராண்மை உடையவனல்ல என்று சான்றோர் எண்ணுகின்றனர். நீதி நூல்களும், 'பிறன்மனை புகாமை அறமெனத்தகும்' (கொன்றை வேந்தன் .61 ) என பிறன்மனை நயவாமையை அறமாகப் போற்றுகின்றது.

**அறம் – புண்ணியம்**

நல்வழி என்ற நீதி இலக்கியம் **புண்ணியம்** என்ற சொல்லை அறம் உணர்த்தும் பொருளில்,

**'புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவை**
**மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள் – எண்ணுங்கால்**
**ஈதொழிய வேறில்லை யெச்சமயத் தோர் சொல்லுந்**
**தீதொழிய நன்மை செயல்' (நல்வழி . 1)**

என்று கூறுகின்றது. எவருக்கும் உதவியாக ஒரு செயல் கூடச் செய்யாதவன் புண்ணியத்தை எதிர்ப்பார்ப்பது கண்ணில்லாதவன் மாங்காய் எறிந்ததற்கு ஒப்பாகும் என்பதை,

**' எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது**
**புண்ணியம் வந்தெய்து போதல்லாற் – கண்ணில்லான்**
**மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே**
**ஆங்கால மாகு மவர்க்கு' (நல்வழி . 4)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதிலும் புண்ணியம் என்பது அறமெனக் கருதப்படுகிறது. இவ்வாறு இலக்கியங்கள் பலவற்றிலும் அறம் பல பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவ்வாறே காப்பியங்களிலும் அறம் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்குமுகமாய் காப்பியங்களும் அறமும் விளக்கப்படுகின்றன.

**காப்பியங்களும் – அறமும்**

காப்பியம் என்பது ஒரு காலக்கட்டத்திற்கான இலக்கியம் அல்ல. இன்றைய காலம் வரை காப்பிய இலக்கியம் வளர்ந்த வண்ணமே உள்ளது. பாரதியும், பாரதிதாசனும் கூட காப்பியங்களை விரும்பிச் சுவைத்தனர்.

**காப்பியம்– சொல் விளக்கம்**

‘‘காப்பியம் என்ற சொல் காவ்யம் என்ற வடசொல்லின் திரிபு என்பது பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, மூதறிருர் கி.வா.ஜகந்நாதன், புதின எழுத்தாளர் நா.பார்த்தசாரதி முதலானோரால் ஒப்புக் கொள்ளப்படுகிறது. கலைக்களஞ்சியத் தொகுதியில் காப்பியம் என்பதற்கு விளக்கம் எழுதிய ஆசிரியரும் இதனை ஏற்கின்றார்.’’ [42]ஆனால் இக்கருத்து பெரும்பான்மையோரால் மறுக்கவும்படுகிறது. ‘‘துடிசைக் கிழார், அ.சிதம்பரனார், புலவர் செந்துறை முத்து முதலானோர் இச்சொல்லைக் காப்பு + இயம் எனப்பகுத்து அதுவே காப்பியமாகிறது. எனவே காப்பியம் என்ற சொல் தமிழ்ச் சொல் என நிறுவ முயல்வர்.’’ [43]

காப்பியம் என்ற சொல் தனித்து தொல்காப்பியம், சங்க இலக்கியம் போன்ற முற்காலத் தமிழ் இலக்கண இலக்கிய நூற்களில் இடம்பெறவில்லை. ஆயின் தொல்காப்பியர், தொல்காப்பியம் என்ற சொற்களில் தொல் என்ற அடையுடன் இச்சொல் வழக்கு பெறுகின்றது. ‘‘ தொல்காப்பிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட டாக்டர். சி.இலக்குவனார் காப்பியம் என்பது பழமரபுகளைக் காத்தியம்புவது என்றும் எனவே காப்பியம் என்னும் இலக்கண நூலைச் செய்ததால் காப்பியன் என வழங்கப்பட்டார் என்றும் விளக்குவர்.’’[44] ஆனால் பேராசிரியர் ரா. இராகவையங்கார், ‘‘ஆரிய குலத்துச் சுக்கிராச்சியாரின் காவிய குலத்துப் பிறந்ததால் காவியர் என்பது காப்பியர் என வந்தது என்றும், திரண தூமக்கினி என்பது தொல்காப்பியரின் இயற்பெயர் என்றும் கூறுகின்றார்.’’[45] காப்பியம் என்ற சொல் வடமொழியிலிருந்து வந்ததாகவும் தொல்காப்பியர் வடமொழி சார்ந்தவர் என்ற கருத்தும் இதில் இடம்பெறுகிறது.

**காப்பியம்– தமிழ்ச்சொல்**

காப்பியம் என்ற சொல் காவ்யம் என்ற வடசொல்லின் திரிபு அன்று இஃது தமிழ்ச் சொல் ஆகும். காப்பியத்தை காப்பு + இயம் எனப் பிரித்து பொருள்கொள்ள இயலும். ‘‘இயம் என்பது சொல், ஒலி, வாத்தியம் எனப்பொருள்படும். இவை முறையே இயல், இசை, நாடகம் குறிக்கும். இயல், இசை, நாடகத்தைக்காப்பது காப்பியம். ஆரிய மொழி தமிழ்நாட்டில் நுழைவதற்குப் பல ஆண்டுகட்கு முன்னரே காப்பியக்குடி என்ற ஊரும், காப்பியங்களைப் பாதுகாக்கும் காப்பியர் என்ற குடிகளும் உண்டு. தொல்காப்பியர், தொல்காப்பியக்குடி தொல்காப்பியர், வெள்ளூர்த் தொல்காப்பியர், காப்பியஞ் சேந்தனார், காப்பியாற்றுக் காப்பியனார் என்னும் புலவர்கள் பெயர்களையும்; காப்பியம், காப்பியக்குடி, காப்பியாறு முதலிய ஊர்ப் பெயர்களையும் நோக்கினால் காப்பியம் என்பது காவ்யம் என்ற சொல்லின் திரிபு அன்று என்றும், முத்தமிழ்களையும் பாதுகாக்கும் மக்கள்

வாழும் ஊர் என்றும், முத்தமிழ்களையும் பாதுகாக்கும் குடி என்றும் பொருளாவது தெளியலாம். அதுபோல் முத்தமிழ்களையும் சிதையுறாமல் பாதுகாக்கும் நூல் காப்பியம் எனப்பட்டது என்பர் துடிசைக் கிழார் அ. சிதம்பரனார்.'' [46]

காலந்தோறும், காப்பியம் என்ற சொல்லுக்கான பொருள் மாறுபடுகிறது. முதலில் இலக்கணம் என்ற பொருளிலும் பின்னர் காவியம் (Epic) என்ற பொருளிலும் கையாளப்பட்டுள்ளது. கழகத்தமிழ் கையகராதி ''உறுதிப்பொருள் கூறும் கதைத் தொடர்நிலைச் செய்யுள் காப்பியம்''[47] என்கிறது. முற்காலத்தில் தொல்காப்பியம், பல்காப்பியம், பல்காப்பியப் புறநடை என்று இலக்கண நூல்களையே காப்பியம் என்ற சொல் குறித்து வந்துள்ளது. '' பாலகாப்பியர் என்ற முனிவர் இயற்றிய பாலகாப்பியம் என்ற யானை வைத்திய நூலும் இலக்கணம் என்ற பொருள்பட அமைவதே'' [48] ஆகும்.

சிலப்பதிகாரத்தில் 'காப்பியத்தொல்குடிக் கவின்பெற வளர்ந்தது' என்று குடியைக் குறிப்பதாகவும், மணிமேகலையில் 'நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்' என்று காக்கின்ற இயல்புடைய நூல் என்னும் பொருளிலுமே ஆளப்பட்டுள்ளது. ''காப்பியம் என்ற சொல் 'Epic' என்ற பொருளில் முதன் முதல் சீவகசிந்தாமணிலியிலேயே ஆளப்படுகிறது. இங்கு காப்பியக் கவிகள் என்னும் தொடர் 'Epic Poets' என்னும் பொருள் தந்து நிற்கிறது.''[49] இதனைத் தொடர்ந்து இலக்கண இலக்கியங்களில் குறிப்பாக பெருந்தொகை, தமிழ்விடுதூது, நன்னூல், தண்டியலங்காரம், மாறன் அலங்காரம், பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், வீரசோழியம், வச்சணந்தி மாலை ஆகியவற்றில் காப்பியம் என்ற சொல் காவியம் (Epic) என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது. ''காப்பியத்தைக் குறிக்கும் எபிக் (Epic) என்ற சொல் 'எபோஸ்' என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து ஆக்கப்பட்டது. இக்கிரேக்கச் சொல்லின் பொருள் 'சொல்' அல்லது 'பாடல்' என்பதாகும். காலப்போக்கில் இதன் பொருள் விரிவடைந்து வீரயுகப் பண்பினைக் கருவாகக் கொண்ட நீண்ட கூற்றுவகைப் பாடலைக் குறிக்கப்பயன்பட்டது.'' [50]

**தொல்காப்பியத்தில் காப்பிய இலக்கணம்**

தண்டியலங்காரம் தண்டி என்ற புலவரால் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது. அதில் காப்பியத்திற்கான இலக்கணம் சுட்டப்பட்டமையின் காப்பியமரபு வடமொழியிலிருந்து கடன் பெற்றிருக்க வேண்டுமென்று கருதுவர். ஆனால் தமிழ்மொழியின் முதல் நூலாகத் தற்காலத்தில் கருதப்படும் தொல்காப்பியத்தில் காப்பியத்திற்கான வரையறைக் கூறப்பட்டுள்ளது. ''காப்பியச் சுவைகளை

மெய்ப்பாட்டியலிலும், காப்பிய அலங்காரமாகிய அணிகளை உவமையியலிலும், காப்பிய வகைநடை குறித்த செய்திகளை வனப்பு, வண்ணங்கள் பற்றிப் பேசும் செய்யுள் இயலிலும், காப்பிய மரபு பற்றி இன்ன பொருளை இன்ன சொல்லால் முந்தையோர் மரபு கண்டு கூற வேண்டும் என்று பழைய மரபிற்கு அரண் அமைக்கும் மரப்பியலிலும் தருகின்றார் தொல்காப்பியர்''[51] என்ற டாக்டர். சி. பாலசுப்பிரமணியன் அவர்களின் கருத்து மனங்கொள்ளத்தக்கது.

**இலக்கணம் சுட்டும் காப்பிய இடங்கள்**

தொல்காப்பியத்தில் காப்பியத்திற்கான கூறுகள் நான்கு இடங்களில் பயின்று வருகின்றன.

**'பாட்டிடை வைத்த குறிப்பி னானும்**
**பாவின் றெழுந்த கிளவி யானும்**
**பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்**
**பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்**
**றுரைவகை நடையே நான்கென மொழிப' (தொல் . செய் :173)**

இதில் பொருளொடு புணராப் பொய் மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்பவற்றின் உரைகளைப் பார்க்கும் போது, இவை பழமரபுக் கதைகளைக் குறிப்பது உறுதியாகின்றது. இதன் மூலம் உரை என்பது கூற்று வகைபாடல் என்பதும், அதன் பொருள் பொரும்பாலும் பழ மரபுக் கதைகளைத் தழுவி அமையும் என்பதும் அறியப்படுகிறது.

**'தொன்மை தானே**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே' (தொல். செல் : 237)**

என்ற நூற்பா, தொன்மை என்பது உரையோடு கூடிய பழமையான கதை என்று சுட்டுகிறது. இளம்பூரணர் தொன்மைக்கு உதாரணமாக இராம சரிதத்தையும், பாண்டவ சரிதத்தையும் குறிப்பிடுகிறார். பேராசிரியர் பாரதம், தகடூர் யாத்திரையையும் நச்சினார்கினியர் சிலப்பதிகாரத்தையும் தொன்மைக்கு எடுத்துக்காட்டாகத் தந்துள்ளனர்.

**'இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்**
**பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழுகினும்**
**தோலென மொழிப தொன்மொழிப் புலவர்' (தொல். செய் : 238)**

மென்மையான மொழியால் அறம், பொருள், இன்பம், வீடென்ற விழுப்பொருளைப் பயப்பதும்; ஆசிரியப்பாவால் தொடர்நிலைச் செய்யுளாகப் பாடப்படுவதும் ; தொன்மொழி

என்பதால் பழைய கதையைக் கூறுவதும் தோல் என்று சுட்டப்படுகிறது. இங்கு சுட்டப்படும் அனைத்தும் காப்பியப்பண்பாகிறது.

**‘விருந்தே தானும்**

**புதுவது புனைந்த யாப்பின் மேற்றே’ (தொல் . செய் : 239)**

தொன்மை, தோலிலிருந்து மாறுபட்டது விருந்தாகும். விருந்து என்பது புதுமையாக ஆசிரியரே படைப்பதாகும். பழங்கதைகளைக் கூறாது புதிய கற்பனைகளைக் கூறுவது விருந்தாகின்றது. எனவே விருந்தும் காப்பியப் பண்பாகிறது.

**தண்டியலங்காரம்**

தண்டியலங்காரம் காப்பிய இலக்கணம் பற்றி,

**‘ பெருங்காப் பியநிலை பேசுங் காலை**
**வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்**
**றேற்புடைத் தாகி முன்வர வியன்று**
**நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்**
**தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்**
**மலைகட னாடு வளநகர் பருவம்**
**இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து**
**நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்**
**பூம்பொழி னுகர்தல் புனல்விளை யாடல்**
**தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்**
**புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்**
**றின்னை புனைந்த நன்னடைத் தாகி**
**மந்திரந் தூது செலவிகல் வென்றி**
**சந்தியிர் றொடர்ந்து சருக்க மிலம்பகம்**
**பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி**
**நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்**
**கற்றோர் புனையும் பெற்றிய தென்ப’ (தண்டி . பொதுவணியியல் : 8)**

என்று சுட்டுகிறது. மாறனலங்காரம் (நூற்பா.72–76), பன்னிரு பாட்டியல் (நூற்பா.347-351), வச்சணந்திமாலை (அ) வெண்பாப்பாட்டியல் (நூற்பா . 40 - 43), நவநீதப்பாட்டியல் (நூற்பா . 62 - 65), சிதம்பரப்பாட்டியல் (நூற்பா . 41 - 42), திவாகரநிகண்டு, யாப்பருங்கல விருத்தி, வீரசோழியம் போன்ற பல இலக்கண நூல்களிலும் காப்பியம் குறித்த இலக்கணம் சுட்டப்பட்டுள்ளது.

**காப்பிய இலக்கியங்கள்**

காப்பியங்களுக்குரிய இலக்கணங்கள் அமைந்த இலக்கியங்கள் பல தமிழ் மொழியில் உண்டு. மொழிபெயர்ப்பு காவியங்களும் இங்குண்டு வால்மீகி இராமாயணம், கம்பராமாயணம், மகாபாரதம், வில்லிபாரதம், நளவெண்பா, நைடதம் போன்றவற்றை காப்பியங்களாக இலக்கிய உலகம் சுட்டுகிறது. புராணங்களும் காப்பிய இலக்கணங்களுக்கு ஓரளவு ஒத்துப்போகின்றன. கி.வா.ஜ,''வடமொழியில் இதிகாசம், புராணம், காப்பியம் ஆகிய மூன்றும் வேறு வேறு. தமிழில் இம்மூன்றுமே காப்பியங்களாகக் கருதப்படுகின்றன'' [52] என்பார்.

**காப்பியப் பகுப்பு**

காப்பியங்களைப் பொதுவாக ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள் எனப் பகுப்பர். மேலும் ''படைப்பாளிகளை அடிப்படையாகக் கொண்டு காப்பியங்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று தனிஒரு புலவனின் புலமைத்திறத்தால் உருவாக்கப்பட்டவை. மற்றது, மக்கள் மத்தியில் பரவலாகக் காணப்படும் வரலாற்றுப் பழங்கதைகளைப் பயன்படுத்திப் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு பெயர் அறியப்படாத புலவர் பெருமக்களால் படைக்கப்பெற்றவை.''[53] முதல் வகைக்கு மணிமேகலை, நீலகேசி ஆகியவையும், அடுத்த வகைக்கு சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், சூளாமணி ஆகியவையும் சிறந்த எடுத்துக்காட்டுக்களாக அமைகின்றன.

**ஐம்பெருங்காப்பியங்கள்**

பெருங்காப்பியம், சிறுங்காப்பியம் என்ற பகுப்பு தமிழ் இலக்கிய உலகில் இல்லை என்பது அறிஞர் பெருமக்களின் கருத்து. '' ஐம்பெரும் காப்பியம் என்ற வழக்கை முதன்முதலில் மயிலைநாதர் தொடங்கி வைத்தார் என்றும், அந்த நூல்கள் எவை என்பதை கி. பி. 19 ஆம் நூற்றண்டினரான கந்தப்பதேசிகரே,

**' சிந்தாமணி யாம் சிலப்பதி காரம் படைத்தான்**
**நந்தாமணி மேகலை புனைந்தான் – நந்தா**
**வளையாபதி தருவான் வாசவனுக் கீந்தான்**
**திளையாத குண்டல கேசிக்கும் ....'**

என்று விளக்கினார்"[54] என்றும் தமிழண்ணல் கூறுகின்றார். சில சில பகுப்புகளின் அடிப்படையில் அமையும் போது ஆய்வின் ஆழம் அதிகரிக்க வாய்ப்புள்ளது. "காப்பிய இலக்கிய வகையில் தனிச் சிறப்பு வாய்ந்தது பெருங்காப்பியங்கள். வடமொழியில் இதனை மகாகாவியங்கள் என்பர். இரகுவம்சம், குமார சம்பவம், சிசுபாலவதம், கிரதார்ஜீனியம், நைஷதீய சரிதம் என்பன வடமொழி மகா காவியங்கள். இம்முறைபடி சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசிஆகியவற்றைப் பிற்காலத்தவர் ஐம்பெருங் காப்பியங்களாகத் தொகுத்தனர்."[55] பின்னர் இதனைக் காலவரிசைப்படி,

❖ சிலப்பதிகாரம்

❖ மணிமேகலை

❖ சீவகசிந்தாமணி

❖ வளையாபதி

❖ குண்டலகேசி

என்பன ஐம்பெருங் காப்பியங்களாகக் கருதப்பட்டன. இவற்றில் மணிமேகலையும், குண்டலகேசியும் பௌத்த காப்பியங்கள் ஆகும். மற்றவை அனைத்தும் சமணகாப்பியங்கள் ஆகும்.

**ஐஞ்சிறு காப்பியங்கள்**

ஐஞ்சிறுகாப்பியத்தில்,

❖ யசோதர காவியம்

❖ உதயணகுமார காவியம்

❖ நாககுமார காவியம்

❖ சூளாமணி

❖ நீலகேசி

ஆகியவை அடங்கும். இவற்றில் சூளாமணி பெருங்காப்பியத் தகுதிபெற்றதாகக் குறிப்பிடுவர். இவை அனைத்தும் சமண காப்பியங்கள் ஆகும்.

**மொழிபெயர்ப்புக் காப்பிங்கள்**

சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், திருவிளையாடல் புராணம் போன்ற ஒரு சிலவே நேரடியான தமிழ்க்காப்பியங்கள் ஆகும். ஏனைய அனைத்தும் மொழி பெயர்ப்பாகவோ தழுவல்களாகவோ அமைந்தவையாகும். மனுசரிதையும் வசுசரிதையும் தெலுங்கிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. பிரபு லிங்கலீலை, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் கன்னடத்திலிருந்து மொழி

பெயர்க்கப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் மில்டனால் எழுதப்பட்டு உலகச் சிறப்புப் பெற்ற துறக்க நீக்கம் (Paradise lost) வெள்ளக்கால் ப.சுப்பிரமணிய முதலியாரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. கோமரின் இலியட், எஸ்.ஆர். ஆனந்த நாராயண ஐயர் அவர்களாலும் கோமரின் மற்றொரு காவியமான ஒதீசி, அ.சிங்காரவேலு அவர்களாலும் உரைநடையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. காளிதாசருடைய இரகுவம்சம், குமாரசம்பவம், மேகசந்தேசம் ஆகிய காப்பியங்கள் க.ரா.ஜமதக்கனியால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. உமறுப்புலவரால், இயற்றப்பட்ட சீறாப்புராணமும் அகமது மரைக்கையாரால் இயற்றப்பட்ட சின்னச்சீறாவும், கையெழுத்து பிரதியாக உள்ள முகமதியர் காவியம் ஆகியவையும் மொழிபெயர்க்கப்பட்ட இசுலாமிய காவியங்கள் ஆகும். தேம்பாவணி, இரட்சணிய யாத்திரிகம், திருவாக்குப் புராணம், சுவிசேஷ புராணம், கிறிஸ்தாயணம், கிறிஸ்து மான்மியம் போன்றவை கிறித்துவ மொழிபெயர்ப்பு காப்பியங்களாகும்.

**தற்காலக் காப்பியங்கள்**

பாரதியாரின் பாஞ்சாலிசபதம், குயில்பாட்டு ஆகியவையும் பாரதிதாசனின் பாண்டியன் பரிசு, சஞ்சீவி பர்வதத்தின் சாரல், புரட்சிக்கவி, வீரத்தாய், தமிழச்சியின் கத்தி, இருண்டவீடு, எதிர்பாராத முத்தம் போன்றவையும், கவிமணியின் மருமக்கள் வழி மான்மியமும், கண்ணதாசனின் ஆதிமந்தி – ஆட்டனத்தி, மாங்கனி ஆகியவையும், முடியரசனின் பூங்கொடி, வீரகாவியம் போன்றவையும் சுத்தானந்த பாரதியின் பாரதசக்தி மகாகாவியமும், புலவர் குழந்தையின் இராவண காவியமும் தற்காலக் காப்பியங்களாகும்.

**மேலை இலக்கியக் காப்பிய வகை**

1. முன்முறைக் காப்பியம் (Primifive or oral Epic)
2. வழிமுறை அல்லது கலைக் காப்பியம் (Sewndry or literary Epic )
3. வீரயுகக் காப்பியம் (Chivalric Epic)
4. வீரயுகக் காதல் காப்பியம் (Chivalric Romance)
5. காதல் காப்பியம் (Romantic Epic )
6. நகைச்சுவைக் காப்பியம் (Burlesque Epic)

கலைத்தன்மை பெறாத – அதே நேரத்தில் உணர்ச்சிப் பெருக்காகக் கவிஞனால் தங்கு தடையின்றி வாய்மொழி மரபில் பாடப்பட்டு வருவன முன்முறைக் காப்பயங்கள். கலைக்காப்பியங்களில் கவிஞனின் சிந்தனைக்கும் கற்பனைக்கும் இடம் உண்டு. தேசிய

முக்கியத்துவம் வாய்ந்த ஒரு கருத்தியல் இவ்வகைப் படைப்புகளில் சிறப்பான இடத்தைப் பெறும்.

**வடமொழிக் காப்பிய வகை**

1. இதிகாசம் – இவ்வாறு முன் இருந்ததென வரலாற்றுக்கு முற்பட்டதைக் கூறுவது
2. மகாகாவியம் – நாற்பொருள் உடையது. பெங்காப்பியத்தை ஒத்தது.
3. காவியம் – நாற்பொருளில் ஒன்றிரண்டு குறைவுடையது. சிறுகாப்பியங்களை ஒத்தது.
4. புராணகாவியம் – கடவுளைப் பற்றியது.
5. உத்பாத்தியம் – இதிகாச, புராணக் கதைகள் அல்லாத புதுப்படைப்பு
6. சம்பு காவியம் – உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்
7. சந்தேச காவியம் – தூது இலக்கிய வகை
8. கண்ட காவியம் – பழைய இதிகாச, புராணக் கதைகளில் காலத்திற்கு ஏற்ப மாற்றமும் புதுமையும் கொண்டது.

**தமிழில் காப்பிய வகை**

1. இதிகாசம் – இராமாயணம், பாரதம்.
2. புராணம் – பெரியபுராணம் போன்றவை.
3. பெருங்காப்பியம் – சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவை.
4. சிறுகாப்பியம் – சூளாமணி, நீலகேசி போன்றவை.
5. மறைந்துபோன தமிழ்க் காப்பியம் – தகடூர் யாத்திரை, வளையாபதி, குண்டலகேசி, விம்பசாரகதை, சாந்தி புராணம், நாரத சரிதை, கலியாணன் கதை, பருப்பதம், புராண சாகரம், அமிர்தபதி, பிங்கலகேசி, அஞ்சனகேசி, காலகேசி, இராசாச விசயம், வீரணுக்க சரிதம், குலோத்துங்க சோழன் சரிதை, பாரதநூல்கள் சைனராமாயணம்.
6. மொழிபெயர்ப்புக் காப்பியம்
7. இசுலாமிய சமயக்காப்பியம்
8. கிறித்துவ சமயக்காப்பியம்
9. தற்காலக்காப்பியம் மற்றும் கதைப்பாடல்.

“மேலை இலக்கியக் காப்பிய வகை, வடமொழிக்காப்பிய வகை, தமிழில் காப்பிய வகை என்றும் காப்பியங்களைப் பகுக்க இயலும்.”[56]

**மாந்தர் படைப்பு**

காப்பியங்கள், மாந்தர்கள் எனும் கல் கொண்டு கட்டப்பட்ட மாளிகைகள் ஆகும். காப்பிய உருவாக்கத்திற்கு மாந்தர் படைப்பு இன்றியமையாதது. தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களும் கதை, மாந்தர், கிளைக்கதை ஆகியவையே காப்பியத்திற்கு இன்றியமையாத கூறுகள். அதிலும் குறிப்பாக மாந்தர் படைப்பே மிக இன்றியமையாதது என்கிறார். " பல்வேறுபட்ட பாத்திரங்களே காப்பியத்திற்கு உயிரூட்டுகின்றன. காப்பியத்திற்குப் பொலிவும் உணர்ச்சியும் ஊட்டுவதோடு வாசகருக்குச் சுவையூட்டி மகிழ்ச்சிப்படுத்தப் பாத்திரங்களே துணை செய்கின்றன. மட்டுமின்றிக் கவிஞன் தன் உணர்ச்சியை வெளியிடும் களனாகவும் இப்பாத்திரங்கள் அமைகின்றன. (Dr.T.E.Granamoorthy - A Critical stydy of civaka Cintamani - P: 102)"[57]

அரிஸ்டாட்டில் மாந்தர் படைப்பு பற்றி நான்கு கருத்துக்களைக் கூறிச்செல்கிறார். " 1. படைக்கப்படும் பாத்திரம் சிறப்பாக நல்லனவாக அமைதல் வேண்டும். 2. இவை கால, இடச் சூழலுக்கு ஏற்பப் பொருத்தமாகக் படைக்கப் பெறுதல் வேண்டும், 3. படைக்கப் பெற்ற பாத்திரம் உண்மையில் வாழ்ந்த ஒரு மனிதனின் பதிலாள் என்ற உணர்வைத் தோற்றுவிக்க வேண்டும். மேலும் இவை வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்க வேண்டும். முழுவதும் கற்பனை மாந்தராக அமைதல் கூடாது. 4.படைக்கப்பெற்ற பாத்திரம் இறுதிவரை ஒரு நிலைத்த பண்புடையதாக அமைதல் வேண்டும்"[58] என்று கூறுகின்றார். ஐம்பெரும், ஐஞ்சிறுங் காப்பியங்களில் இடம் பெறும் மாந்தர் படைப்புகள் சமண, பௌத்த சமயங்களின் அடிப்படையில் அறநிலையில் ஆராயப்பட்டுள்ளது. எனவே சமண, பௌத்த சமயங்களின் அறங்கள் குறித்தும் விளக்கப்படுகிறது.

**சமணசமயம்**

| | | |
|---|---|---|
| தோற்றுவித்தவர் | - | 24 வது தீர்த்தங்கரரான மகாவீரர். |
| இயற்பெயர் | - | வர்த்தமானர் |
| தந்தை | - | சித்தார்த்தர் |
| தாய் | - | திரிசலை |
| மனைவி | - | யசோதா |
| மகள் | - | அன்னோசனா பிரியதர்சனா |
| சகோதரர் | - | நந்திவர்த்தனன் |
| காலம் | - | கிமு 6 -ம் நூற்றாண்டு (கி.மு.534 - 462) |
| மொழி | - | பிராகிருதம் |

| | | |
|---|---|---|
| பிறந்த இடம் | - | பிஹாரில் உள்ள குந்தக்ராம் |
| தீர்த்தங்கரர்கள் | - | ரிஷபதேவர், அஜிததேவர், சம்பவர், அபிநந்தர் சுமதிதேவர், பத்மப்ரபர், சுபார்ஸ்வர், சந்திரப்ரபர், புஷ்பதந்தர், சீதளர், ஸ்ரேயாம்சர், வாசுபூஜ்யர், விமலர், அனந்தர், தர்மர், சாந்திநாதர், குந்துநாதர், அரநாதர், மல்விநாதர், முனுஸ்வீரதர், நமி, நேமி, பார்ஸ்வர், வர்த்தமானர். |
| ஆலயங்கள் | - | சித்த தலம், அதிசய தலம் என இருவகைப்படும். தீர்த்தங்கரர்கள் நிர்வாணம் (முக்தி) அடைந்த இடம்சித்தலம். துறவிகள், ஆசாரியர்கள் வீடுபேறு அடைந்த இடங்கள் அதிசய தலம். அவர்களின் உருவச் சிலைகள் வாகனங்களோடு ஆலயங்களில் இடம்பெறும். (எ.கா) ரிஷபதேவர் - எருது வாகனம், வர்த்தமானர் - சிங்கவாகனம். |
| தியானம் | - | ஆர்த்த தியானம், ரௌத்திர தியானம், தர்ம தியானம், சுக்ல தியானம். |
| கடவுள் | - | 16 வகை குற்றங்களைக் கடந்தவர் ஜினன் (கடவுள்) ஆவார். 24 தீர்த்தங்கரர்களைக் கடவுளாக வழிபடுவர். |
| 16 வகை குற்றங்கள் | - | பசி, தாகம், பயம், ஆசை, கோபம், மயக்கம், சிந்தனை, மூப்பு, வியாதி, இறப்பு, வியர்வை, இளைப்பு, கர்வம், பற்று, தூக்கம், வருத்தம். |
| தவம் | - | 30 வயதில் துறவு மேற்கொண்டு 42 வயதில் ஞானம் பெற்று 72 வயதில் மகாநிர்வாணம் அடைந்தார். |
| மகாநிர்வாணம் | - | பீகாரில் உள்ள பவபுரியில் அடைந்தார். |
| சமயப் பிரிவு | - | திகம்பரம், ஸ்வேதாம்பரம் (ஸ்தானகவாசி, யாப்பனீயம் என்ற பகுப்பும் இருப்பதாகக் கூறுவர்) |

**சமண சமய அறங்கள்**

சமண சமயம், துறவறத்தாருக்குரிய அறங்களை யதி தர்மம் என்றும், இல்லறத்தாருக்குரிய அறங்களை சாவக தர்மம் என்றும் குறிப்பிடுகிறது.

| | | |
|---|---|---|
| "மகா விரதங்கள் | - | 5 |
| சமிதிகள் | - | 5 |
| புலனடக்கம் | - | 5 |
| முக்கியக் கருமங்கள் | - | 6 |
| முடிநீக்கல் | - | 1 |
| ஆடையில்லாமை | - | 1 |
| நீராடாமை | - | 1 |
| நிலத்தில் படுத்தல் | - | 1 |
| பல்துலக்காமை | - | 1 |
| நின்றுண்ணல் | - | 1 |
| ஒருவேளை உணவு ஏற்றல் | - | 1 |
| | | 28 |

இவ்விருபத்தெட்டு ஒழுக்கங்களும் சமணசமய துறவறத்தாருக்கு உரியதாகும்."[59]

| | | |
|---|---|---|
| "அணுவிரதம் | - | 5 |
| கள்உண்ணாமை | - | 1 |
| ஊன் உண்ணாமை | - | 1 |
| தேன் உண்ணாமை | - | 1 |
| இரவு உண்ணாமை | - | 1 |
| பெரியோரை வணங்குதல் | - | 1 |
| | | 10 |

ஆகிய பத்து அறங்களும் இல்லறத்தாருக்கு உரியவையாகும்."[60]

**மாவிரதங்கள்: (5)**

1. அகிம்சை, 2. வாய்மை, 3.கள்ளாமை, 4. துறவு, 5. அவாவறுத்தல் என்பன மாவிரதங்கள் ஆகும்.

**அகிம்சை**

இன்னா செய்யாமை, அருளுடைமை, கொல்லாமை, புலால் மறுத்தல் ஆகிய நான்கும் ஒன்று சேர்ந்தது அகிம்சையாகும். உயிர்களைக் கொல்லாவோ, கொல்ல நினைக்கவோ, கொல்லச் சொல்லவோ, கொல்ல உதவி புரியவோ கூடாதது அகிம்சை எனும் அறமாகும்.

**வாய்மை**

பொய்மை இன்மையே வாய்மையாகும். நன்மைதரும் இடம் தவிர மற்ற இடங்களில் பொய் கூறுதல் கூடாது. மெய்யே பேசுதல், பொய் பேசாதிருத்தல், பொய்மைக்கு உடன் படாதிருத்தல், பொய் பேசத் தூண்டாமை ஆகியவை வாய்மை எனும் அறத்தின்பாற்படும்.

**கள்ளாமை**

பிறர் பொருளைக் கவராமை கள்ளாமையாகும். களவு செய்யாமையும், களவிற்கு மனம், மெய், மொழிகளால் உடன்படாமையும் கள்ளாமை எனும் அறமாகும்.

**பிரமசரியம்**

சிற்றின்பத்தை நீக்கிப் பிரமசரியம் காத்தல் புணர்ச்சி விழையாமை எனும் அறமாகும்.

**அவாவறுத்தல்**

உலகப் பொருள்கள் மீது உள்ள பற்றையும் உள்ளத்து உணர்ச்சிகளையும் விலக்குதல். ஆசைகள் அனைத்தையும் அறுத்தல் அவாவறுத்தலாகும்.

**சமிதிகள் : (5)**

1. இரியை, 2. பாஷை, 3.ஏஷணை, 4.ஆதான நிஷேபனை, 5.உத்சர்க்கம் ஆகியவை சமிதிகள் ஆகும்.

**இரியாசமிதி**

சமணத்துறவி நடக்கும் போது மூன்றுமுழ தூரம் பிஞ்சம் (மயிற்பீலிக்குஞ்சம்) கொண்டு தூய்மை செய்து நடத்தல் இரியாசமிதி எனும் ஒழுக்கமாகும். இஃது எறும்பு, புழு, பூச்சி ஆகியவை காலடியில் மிதிபட்டு இறக்காமல் இருப்பதற்காக மேற்கொள்ளப்படுகிறது.

**பாஷாசமிதி**

நாவடக்கம் கொள்ளுதல், பழித்துப் பேசுதல், புகழ்ந்து பேசுதல், கோபமாகப் பேசுதல், கடுஞ்சொல் கூறல் ஆகியவற்றை நீக்கி இனிமையாகப் பேசுவதும், அறத்தைப் பேசுவதும் கற்பிப்பதும் பாஷாசமிதியாகும்.

**ஏஷணாசமிதி**

நாற்பத்தாறு வகையான குற்றங்கள் இல்லாத உணவைச் சமணத்துறவி யாசித்துப் பெற்று அளவோடு உண்ணல் ஏஷணா சமிதியாகும். ''நாற்பத்தாறு வகையான குற்றங்களாவன,

1. சமைத்த பாண்டத்திலிருந்து மற்றொரு பாத்திரத்தில் உணவை மாற்றி வந்து தானம் செய்யும் உணவு
2. பலியிட்ட தானியத்தால் ஆன உணவு
3. காலம் கடந்து அளிக்கும் உணவு
4. தீ கொழுந்து விட்டெரியும்போது அளிக்கும் உணவு
5. விலைக்கு வாங்கிய உணவு
6. தீய வழியில் வந்த பொருளால் ஆன உணவு
7. உணவு போதாதிருக்கும்போது வேறு இடத்தில் வாங்கிய உணவு
8. அமங்கலமான குற்றமுள்ள பாத்திரத்தில் செய்யும் உணவு
9. தளத்தின் மேல் சமையல் செய்து இழித்து வந்த உணவு
10. வலிய வாங்கி வந்த பொருளினால் ஆன உணவு
11. முலைக்கூலி செய்து வந்த பொருளால் ஆகிய உணவு
12. தூது நடந்த பொருளால் செய்யும் உணவு
13. தன்னைப் புகழ்ந்து அளிக்கும் உணவு
14. மருத்துவம் செய்து வந்த பொருளால் ஆன உணவு
15. சினத்தால் தேடிய செல்வத்தால் ஆகிய உணவு
16. கர்வத்தால் தேடிய செல்வத்தால் ஆன உணவு
17. மாயையினால் தேடிய பொருளானால் ஆன உணவு
18. பேராசையால் தேடிய பொருளால் வந்த உணவு
19. ஒருவனைப் புகழ்ந்து வாங்கிய பொருளால் ஆகிய உணவு
20. உண்டபின் தரும் உணவு
21. மந்திரத்தினால் வாங்கிய பொருளால் வரும் உணவு
22. சூரத்தினால் (பொடியினால்) வாங்கிய பொருளால் செய்யப்பட்ட உணவு

23.கூட்டில் நெடுநாள் நின்ற நெல்லின் உணவு

24.உலர்ந்த பூ,  இலை முதலியவைகளைத் தொட்டபின் இடும் உணவு

25.பச்சிலை இட்டு மூடி வைத்த உணவு

26.நன்றாக மூடாத உணவு

27.முன்றானை தரையில் புரண்டுவரக் கொண்டுவந்து இடும் உணவு

28.குழந்தையைப் பெற்ற பெண்மணி ஒரு மாதத்திற்குள் கொண்டு வந்து இடும் உணவு

29.கள், சாராயம் குடிப்பவன் மனையில் தரப்படும் உணவு

30.நோயாளி தீண்டிய உணவு

31.இடுகாடுவரை பிணத்தின்பின் சென்றவன் தீண்டிய உணவு

32.பேடி(அலி) தொட்ட உணவு

33.ஆறுமாத்திற்கு மேலான கர்ப்பிணி கையால் இடும் உணவு

34.சந்ததியற்றவர் கையாற் கொள்ளும் உணவு

35.நீராடித் தூய்மை பெறாதார் கையாலிடும் உணவு

36.தவமுனிவர் முன்னே இடறி விழுந்தவரின் கையாலிடும் உணவு

37.ஐவகைப் பொய்க் காட்சியாளர் கையால் கொள்ளும் உணவு

38.நோன்பு இயற்றாதார் கையாலிடும் உணவு

39.எட்டு வயதுக்குட்பட்ட சிறுவர் கையாலிடும் உணவு

40.கற்புத்தவறியவளின் கணவனால் இடப்படும் உணவு

41. உறுப்புக் குறைந்தவர் கையாலிடும் உணவு

42. பலநாட்கள் பெரியோர்களைக் குறை கூறும் மக்கள் கையில் கொள்ளும் உணவு

43. துறவியர் முன்னே தீ மூட்டியும் அவித்தும் அப்பொழுதே இறக்கி வந்து இடும் உணவு

44.முனிவர் முன் மெழுகுவதும், பெருக்குவதும் செய்து குழந்தையை அழவிட்டும் இடும் உணவு.

45.முனிவர் கீழே இருக்க, தான் மேலே இருந்து இடும் உணவு

46.கலகல வெனப் பேசிக்கொண்டே இடும் உணவு.''[61]

**ஆதான நிக்ஷேபனா சமிதி**

சாதுக்கள் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்ட பொருள்களான புத்தகம், பிஞ்சம், கமண்டலம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில்  கவனத்தோடு இருத்தல். இவற்றை வைக்கும்போதும் எடுக்கும் போதும் சிறு உயிர்கள் இறந்துபடாமல் இருத்தல்.

**உத்சர்க்க சமிதி**

உடலிலிருந்து வெளியேறும் கழிவுகளினால் பிற உயிருக்குத் துன்பமும் இடையூறும் ஏற்படாதவாறு நடந்து கொள்ளல்.

**புலனடக்கம்: (5)**

1. நாட்டியம், நடனம் போன்ற காட்சிகளைக் காணாமை.
2. பாட்டு, யாழ், வீணை முதலிய இசைகளைக் கேளாமை.
3. சந்தனம், பூ முதலிய நறுமணங்களை நுகராமை
4. அறுசுவை உணவுகளை உண்ணாமை
5. புலனுக்கு இன்பமளிப்பவற்றை தொடாதிருத்தல் ஆகிய ஐம்புல உணர்வுகளைக் கட்டுப்படுத்துதலே புலனடக்கம் ஆகும்.

**முக்கிய கருமங்கள் : (6)**

இதனை ஷடாவஸ்யக்கிரியை என்று சமணம் கூறுகிறது. 1. சாமயிகம், 2.துதி, 3.வணக்கம், 4. பிரதிகிர்மணம், 5. கழுவாய், 6.விசர்க்கம்.

**சாமயிகம்**

இன்ப-துன்பம், நன்மை-தீமை, உயர்வு-தாழ்வு முதலியவற்றை ஒரு தன்மையாகப் பார்த்தல்.

**துதி**

இருஷபவர் முதலிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களையும் அருகப் பரமேட்டியையும் போற்றித் துதித்தல்.

**வணக்கம்**

அருகர், சித்தர், தீர்த்தங்கரர் முதலியவர்களின் திருவுருவங்களையும், சாத்திரங்களைக் கற்ற தபசிகளையும் தீக்ஷை கொடுத்த குருக்களையும், பெரியோர்களையும் மனம், வாக்கு, காயங்களினால் வணங்குதல்.

**பிரதிகிர்மணம்**

பாவத்திற்குக் காரணமானவை தன்னிடத்தில் மனம், வாக்குக் காயங்களினால் நேராதபடி காத்துக்கொள்ளுதல்.

**கழுவாய்**

அஃதாவது பிராயச்சித்தம். சமண முனிவர் தமது விரதத்தில் ஏதேனும் குற்றம் நேர்ந்து விட்டால் அதனையுணர்ந்து வருந்தி மனம் மொழி மெய்களால் நொந்து கொண்டு அக்குற்றத்தைக் கழுவுதல்.

**விசர்க்கம்**

காயோத்ஸர்க்கம் எனவும் கூறுவர். தவம் செய்யும்போது வரும் துன்பங்களை அஞ்சாமல் பொறுத்தல். யாக்கையில் பற்றறுத்தல்.

**முடிநீக்கல்: (லோசம்)**

அஃதாவது மயிர் களைதல். சமண முனிவர் துறவு கொள்வதற்கு முன்னர்த் தீஷை பெறுவர். தலை மயிரைக்களைவது தீஷையில் இன்றியமையாதது. தலை மயிரைக்கத்தியால் மழிக்காமலும் கையினால் பிடுங்கிக் களையவேண்டும். மீண்டும் மயிர் வளரும் போதெல்லாம், அவ்வப்போது பிடுங்கிக்களைய வேண்டும். இதனைச் செய்யும் நாட்களில் பட்டினி நோன்பிருக்க வேண்டும். இச்செயலில் உண்டாகும் வலி, சமணத் துறவியின் மன வலிமையையும், பொறுத்துக் கொள்ளும் தன்மையையும், உடல் பற்றின்மையையும் காட்டுகிறது.

**ஆடையில்லாமை : (திகம்பரம்)**

திக் + அம்பரம் – திகம்பரம். திக் என்பது திசையையும் அம்பரம் என்பது துணியையும் குறிக்கிறது. திசைகளை ஆடையாக அணிந்தவர்கள் திகம்பரர்கள். அஃதாவது நிர்வாணமாக இருத்தல். உடல் தமதன்று என்று உடல் பற்றின்மையை வலியுறுத்துதல். சுவேதாம்பரர், ஸ்தானகவாசி, யாப்பனீயர் போன்ற மற்ற சமணப் பிரிவினர் ஆடை உடுக்க வல்லவர்.

**நீராடாமை**

சமண முனிவர்கள், நீராடிப் போற்றும் புறத்தூய்மையை விட அகத்தூய்மையைப் பெரிதாகப் போற்றுவர். மேலும் நீரில் உள்ள உயிர்களுக்குத் தீமை ஏற்படாதிருக்கும் பொருட்டும் நீராடார். நீரில் உயிர் அணுக்கள் உள்ளமைபற்றியே சமண முனிவர் நீருண்ணும்போது ஏழுமுறை வடிகட்டிய பின்னர்க் குடிக்கவேண்டும் என்னும் ஒழுக்கத்தைச் சட்டமாக வைத்துள்ளனர்.

**நிலத்தில் படுத்தல்**

பாய் படுக்கைகளைத் தவிர்த்துக் கல், மண் உள்ள தரையில் படுத்துறங்குவதால், உடலில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்தல் வேண்டும். குப்புறப்படுப்பதும், மல்லாந்து படுப்பதும் கூடாது. எறும்பு, புழு, பூச்சிகள் இல்லாத இடத்தில் படுக்க வேண்டும்.

**பல்துலக்காமை**

உடம்பும் மிகை என்று தமது உடம்பையும் துறந்த சமண முனிவர் பல்தேய்த்துச் சுத்தம் செய்தால், தாம் துறந்து விட்ட உடம்பின்மீது மீண்டும் பற்றினை உண்டாக்கும் எனக் கருதுவர்.

**நின்றுண்ணல்**

சமண முனிவர், நின்றபடியே கையில் உணவினை வாங்கி உண்ணல் வேண்டும். துறந்து விட்ட உடலிற்கு ஆசனம் தேடுதல் கூடாது.

**ஒருவேளை உணவு ஏற்றல்**

ஒருநாளைக்கு ஒருவேளை உண்ணுதல். சூரியன் புறப்பட்ட மூன்று நாழிகைக்குப் பின்னரும், சூரியன் மறைவதற்கு மூன்று நாழிகைக்குப் முன்னரும் உணவு கொள்ள வேண்டும். சமண முனிவர்களில் சிலர் இரண்டு நாட்களுக்கு ஒரு முறையும், மூன்று நாட்களுக்கு ஒருமுறையும், எட்டு நாட்களுக்கு ஒருமுறையும் உணவு எடுத்துக்கொள்வர்.

**ஒன்பது பொருள்கள்**

இதனை நவபதார்த்தம் என்று சமண சமயம் குறிப்பிடுகிறது. இதனை மேருமந்தர புராணம்,

**“ உயிரும்உயி ரல்லதும், புண்ணியம் பாவம் ஊற்றும்**
**செயிர்தீர்செறிப் பும் உதிர்ப்பும் கட்டும் வீடும் உற்ற**
**துயர்தீர்க்கும் தூய நெறியும்சுருக் காய்யுரைப்பன்**
**மயல் தீர்ந்த காட்சி யுடையோய் இது கேண்மதித்தே”** [62]

என்று சுட்டுகிறது.

1. உயிர் - ஜீவன்
2. உயிரல்லது - அஜீவன்
3. புண்ணியம் - புண்ணியம்

4. பாவம் - பாவம்
5. ஊற்று - ஆஸ்ரவம்
6. செறிப்பு - ஸம்வரை
7. உதிர்ப்பு - நிர்ஜரை
8. கட்டு - பந்தம்
9. வீடு - மோக்ஷம்

என்பது வடமொழி பெயர்ப்பாகும். சமணர்கள் மக்கள் பேசும் மொழியிலேயே தங்கள் கொள்கைகளைக் கூறினர்.

**உயிர்**

உயிர்கள் எண்ணிறந்தன ; அழிவில்லாதன ; அவை நல்வினை, தீவினைகளுக்கேற்ப நரகதி, விலங்கு கதி, மக்கள் கதி, தேவகதி அடையும். தொல்காப்பியர் கூறிய ஒரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர், ஆறறிவுயிர் என்ற பகுப்பு சமணத்தில் இடம் பெறுகிது. எனவே தான் தொல்காப்பியரைச் சமணர் என்று குறிப்பிடுகின்றனர்.

**உயிரல்லது**

புத்கலம், தர்மம், அதர்மம், காலம், ஆகாயம் ஆகியவை உயிரல்லவையாகும். இதில் புத்கலம் என்பது உயிர்களில் படிந்து நல்வினை தீவினைகளைச் செய்விக்கும்.

**புண்ணியம்**

நல்லெண்ணங்களாலும், நற்சொற்களாலும், நற்செய்கைகளாலும் உண்டான புண்ணியமானது மனிதராகவும் தேவராகவும் பிறக்கச் செய்கிறது. அறிவு, செல்வம், இன்பம், புகழ், மேன்மை, சிறப்பு ஆகிய நன்மைகளைக் கொடுக்கக்கூடியது.

**பாவம்**

தீய எண்ணங்களாலும், தீய சொற்களாலும், தீய செய்கைகளாலும் உண்டான பாவமானது நரகராகவும் விலங்காகவும் பிறக்கச் செய்கிறது. அறிவின்மை, துன்பம், இகழ்ச்சி, வறுமை, சிறுமை முதலிய துன்பங்களை அடையச் செய்கிறது.

**ஊற்று**

நீர் ஊற்றுக்களில் நீர் சுரப்பது போல நல்வினை, தீவினை இரண்டும் உயிரில் சேர்வது ஊற்று எனப்படும். இதனைக் கன்மத் தொடர்ச்சி அல்லது பொறிவழிச் சேறல் என்றும் கூறுவர்.

**செறிப்பு**

உயிர்கள் தாம் முன்பு செய்த நல்வினை தீவினைப் பயன்களைத் துய்த்து ஒழிக்கும் போது, புதிய கர்மங்கள் வந்து சேராதபடி ஊற்றின் வழியை அடைப்பது செறிப்பு எனப்படும்.

**உதிர்ப்பு**

இருவினை ஊற்று உயிரினிடத்து மேன்மேலும் பெருகாதபடி தடுத்த பின்னர், அனுபவித்துக் கழிக்காமல் எஞ்சி நின்ற வினைகளைக் களைந்து விடுவதற்கு உதிர்ப்பு என்று பெயர்.

**கட்டு**

மனம், வாக்கு, காயம், ஐம்புலன் முதலியவற்றால் உண்டான வினைகள் உயிருடன் ஒன்றில் கலப்பது கட்டு எனப்படும்.

**வீடு**

வினையின்று நீங்கிய உயிர் கேவல ஞானம், கேவல தரிசனம், கேவல வீரியம், கேவல சுகம் அடைந்து விட்டுலகை அடைதல் வீடு எனப்படும். ‘‘மேற்கூறிய ஒன்பது பொருள்களின் உண்மையை அறிந்து கொள்வது நன்ஞானம் என்றும், இவற்றின் தன்மையை ஐயப்பாடின்றி உணர்ந்து கொள்வது நற்காட்சி என்றும், நன்ஞானம், நற்காட்சி இரண்டையும் ஒரு தன்மைத்தாக மனத்திற் கொண்டு ஒழுகுவது நல்லொழுக்கம் என்றும் கூறப்படும். இதனை இரத்தினத்திரயம் என்றும் மும்மணி என்றும் கூறுவர். இரத்தினத்திரயம் வீடு பேற்றிற்கு இன்றியமையாதது.’’[63]

**இல்லறத்தாருக்குரிய அறங்கள்**

இல்லறத்தார், 1. கொல்லாமை (அகிம்சை), 2. பொய்யாமை (பொய் பேசாதிருத்தல்), 3. கள்ளாமை (களவு செய்யாமை), 4. பிறன்மனை விரும்பாமை, 5.பொருள் வரைதல் ஆகிய அணுவிரதங்கள் ஐந்தோடு, 6. கள்உண்ணாமை, 7.ஊன் உண்ணாமை, 8.தேன்

உண்ணாமை, 9.இரவு உண்ணாமை, 10.பெரியோரை வணங்குதல் ஆகிய ஐந்தும் சேர்ந்த ஒழுக்கங்களைக் கடைபிடிக்கவேண்டும்.

**பௌத்தசமயம்**

| | | |
|---|---|---|
| தோற்றுவித்தவர் | - | கௌதம புத்தர் |
| இயற்பெயர் | - | சித்தார்த்தர் |
| தந்தை | - | சுத்தோதனர் |
| தாய் | - | மாயாதேவி |
| மனைவி | - | யசோதரை |
| மகன் | - | இராகுலன் |
| காலம் | - | கி.மு. 6-ம் நூற்றாண்டு (கி.மு. 567 - 487) |
| மொழி | - | பாலி |
| பிறந்த இடம் | - | வைசாலி நகரம் (பீஹார்) |
| கடவுள் | - | புத்த நிலையே கடவுள் நிலை. பலபுத்தர்கள் பூமியில் அவதரிப்பதாகக் கூறப்படுகிறது. |
| தவம் | - | 35 வயதில் கயாவில் உள்ள உருவலாவில் போதி நிலையடைந்தார். |
| மகாநிர்வாணம் | - | 80 - வது வயதில் மகாநிர்வாணம் குஷி நகரத்தில் அடைந்தார். |
| ஆலயங்கள் | - | புத்த விகாரைகள் |
| பிரிவு | - | மகாயானம், ஹீனயானம் |

“ பௌத்த மதப் பிரிவுகளை பெ. சுயம்பு அவர்கள் தமது இந்தியாவில் சமயங்கள் எனும் நூலில் கொடுக்கப்பட்ட கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு அட்டவணைப்படுத்தப்படுகிறது.”[64]

## பௌத்த மதப் பிரிவுகள்

| ஹீனயானம் | மஹாயானம் |
|---|---|
| புத்தர் ஒரு மனிதர். முயன்று நிர்வாணம் அடைந்தவர். | புத்தரைக் கடவுள் நிலைக்கு உயர்த்துகிறது. |
| புத்தருக்கு மீண்டும் பிறப்பு இல்லை | தருமம் குன்றும்போது பிறப்பு உண்டு |
| புத்தர் அற்புதச் செயல்களைச் செய்யவில்லை. | அற்புதத் செயல்கள் செய்தார் |
| நல்லோர் சொர்க்கமும் தீயோர் நகரமும் செல்வர் என்ற வரையறை இல்லை | வரையறை உண்டு |
| புத்தர் ஒருவரே. அவரும் தெய்வம் அல்ல. | புத்தர் பலர். அவர்களுள் போதிச்சத்துவர் ஒருவர். அவரை தெய்வமாகத் தொழுவர். |
| அவலோகிதேஸ்வரர், மஞ்ஜீஸ்ரீ, தாரா போன்றோர் பிக்குகள், பிக்குணிகளே. | இவர்களைப் போதிச்சத்துவர் நிலைக்கு உயர்த்துகிறது. |
| தன்னடக்கம், தியானமே வீடு பேற்றிற்கான வழி | தெய்வ வழிபாடே வீடுபேற்றிற்கான வழி |
| வீடு பேற்றிற்கு துறவறம் மட்டுமே உகந்தது. | இக்கருத்து வலியுறுத்தப்படவில்லை. |
| ஒருவன் அமைதியாக இருக்க வேண்டும் | ஒருவன் அமைதியாக இருத்தலோடு சமூக அமைதி பெறவும் தொண்டாற்ற வேண்டும் |
| ஒருவன் தன் குறிக்கோளை முயற்சியில் தேடி அடையவேண்டும் | குறிக்கோளை அடைய போதிச் சத்துவர்களையும் புத்தர்களையும் வணங்க வேண்டும். |
| கோவில் வழிபாடு, உருவவழிபாடு, பெரியோர் வழிபாடு இல்லை. | உண்டு |
| ஸ்தூபிகள், விகாரைகள் மட்டும் | அதனுள் உருவச் சிலைகளும் உண்டு |
| ஆன்மா இல்லை. | ஆன்மா உண்டு |
| புத்தரின் தத்துவங்களில் மாற்றமில்லை. | இந்து சமய முறைகள் கலந்த புத்த தத்துவங்கள். |

**பௌத்த சமய அறங்கள்**

பௌத்த சமய அறங்கள், பன்னிரு சார்புகள், நான்கு உண்மைகள், எட்டு வழிகள், சீலம், தியானம், ஞானம் எனப் பகுக்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| சார்புகள் | - | 12 |
| உண்மைகள் | - | 4 |
| வழிகள் | - | 8 |
| சீலம் | - | 1 |
| தியானம் | - | 1 |
| | | 26 |

**பன்னிரு சார்புகள்**

“ 1. பேதமை (அவிஜ்ஜை)

2.செய்கை (ஸங்க்காரம்)

3. உணர்வு ( விஞ்ஞானம்)

4.அருவுரு ( நாமரூபம்)

5.வாயில் (ஸளாயதனா)

6.ஊறு (பஸ்ஸ)

7.நுகர்வு (வேதனா)

8.வேட்கை (தண்வரா)

9.பற்று (உபாதானம்)

10.பவம் (பவம்)

11.தோற்றம் (ஜாதி)

12.வினைப்பயன் (ஜராமரணம்)” [65]

இப்பன்னிரு சார்புகளும் அறுக்கப்பட வேண்டியவை.

**நான்கு உண்மைகள்**

பன்னிரு சார்புகளையும் அறுத்து நான்கு உண்மைகளையும் அறிதல் வீடுபேறு அடைவதற்கான வழியாகும்.

“1. நோய் (துக்கம்)

2. நோய் காரணம் (துக்கோற்பத்தி)

3. நோய் நீங்கும் வாய் (துக்க நிவாரணம்)

4. நோய் நீங்கும் வழி (துக்க நிவாரண மார்க்கம்)” [66]

**எட்டு வழிகள்**

இவை அஷ்டாங்க மார்க்கமென அழைக்கப்படுகின்றன. இவை கடைபிடிக்க வேண்டிய அறங்களாகும்.

“ 1. நற்காட்சி (ஸம்யக் திருஷ்டி)
2. நற்கருத்து (ஸம்யக் சங்கல்பம்)
3. நல்வாய்மை (ஸ்ம்யக் வாக்கு)
4. நற்செய்கை (ஸ்ம்யக் கர்மம்)
5. நல்வாழ்க்கை (ஸ்ம்யக் ஆஜீவம்)
6. நன்முயற்சி (ஸ்ம்யக் வியாயாமம்)
7. நற்கடைப்பிடி (ஸம்யக் ஸ்மிருதி)
8. நல்லமைதி (ஸ்ம்யக் சமாதி)”[67]

**சீலம்: (ஒழுக்கம்)**

1. பஞ்ச சீலம்
2. அஷ்டாங்க சீலம்
3. தச சீலம்

என சீலம் மூன்று வகைப்படும். பஞ்ச சீலம் இல்லறத்தாருக்கு உரியது. இல்லறத்தில் சற்று உயர்நிலையடைந்தோர் அஷ்டாங்க சீலத்தில் ஒழுகுவர். தச சீலம் துறவியருக்குரியது.

1. கொல்லாமை
2. கள்ளாமை
3. கற்பு நெறியில் சிற்றின்பம் துய்த்தல்
4. பொய்யாமை
5. கள்ளுண்ணாமை
6. இரவில் குறைவாக உண்ணல்
7. நறுமணங்களை நுகராமை
8. தரையில் உறங்குதல்
9.இசை கூத்து, நாடகம் காணாமை
10.பொன், வெள்ளியைத் தொடாதிருத்தல்

முதல் ஐந்தும் பஞ்சசீலம் என்றும் எட்டாவது ஒழுக்கம் வரை உள்ளவை அஷ்டாங்கசீலம் என்றும் பத்தும் சேர்ந்தது தசசீலம் என்றும் அழைக்கப்படுகிறது.

**தியானம்**

துறவறம் மேற்கொண்டு தசசீலங்களில் ஒழுகுபவர் ஐம்புலன்களை அடக்கி தியானம் செய்யவேண்டும்.

**ஞானம்**

ஞான நிலையடைதல்.

## தொகுப்புரை

- சங்ககாலம் தொட்டு முன்னோர்களால் அறம் போற்றப்பட்டு வருகிறது. அறம் காலந்தோறும் மாறும் இயல்புடையது.
- அறம் என்ற சொல் அறு என்ற வேர்ச் சொல்லிலிருந்து தோன்றியது. தீமையை அறுத்தல் அறமாகும்.
- தொல்காப்பியம் முப்பொருள் உரைத்தல், அறத்தொடு நிற்றல், செயல், இல்லறம், துறவறம், அறமுரைத்தல் ஆகிய நிலைகளில் அறத்தைக் கூறுகிறது.
- புற இலக்கியங்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, அக இலக்கியங்களான அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை மற்றும் அகப்புற இலக்கியமான பரிபாடல் ஆகியவற்றிலும் அறம் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- நீதி இலக்கியம் எனப் போற்றப்படும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் அறம் குறித்து ஆராயப்பட்டுள்ளது.
- அறங்கள் முப்பத்திரண்டும் பிருகத்தர்ம புராணம் கூறும் அறத்தின் வகைகளும் விவரிக்கப்பட்டுள்ளன.
- அறம் என்ற சொல் குறிக்கும் பொருள்கள் குறித்து விரிவாகக் கூறப்பட்டுள்ளது.
- அறத்தைத் தொடர்ந்து அறத்தை வலியுறுத்தும் காப்பியங்கள் பற்றிய செய்தி இடம் பெறுகிறது.
- ‘காப்பியம் என்ற சொல் வடசொல் அல்ல தமிழ்ச் சொல்லே’ என்ற கருத்துத்தளம் ஆராயப்பட்டுள்ளது.
- இலக்கணங்களில் காப்பியம் பற்றியும் கூறப்பட்டுள்ளது.
- காப்பிய இலக்கியங்களின் பகுப்புகளான ஐம்பெரும், ஐஞ்சிறுங் காப்பியங்கள் பற்றியும் அவற்றில் இடம் பெறும் சமண, பௌத்த அறங்கள் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
- காப்பிய வகைகள், மாந்தர் படைப்பு போன்றவையும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. இரா. காசிராசன், உலக காப்பியங்கள், ப. 393
2. கெம்பு ஆறுமுகம், ஸ்ரீ விஷ்ணு புராணம், ப. 113
3. தமிழ் லெக்சிகன், ப . 173
4. இரா. ஜெகதீசன் (ப.அ), புறநானூறு ஆய்வுக் கோவை(3) – 2007, ப.1002
5. விக்கிபீடியா – இணையதளம்
6. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 156
7. P. இராமநாதன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி – 2 , ப. 419
8. ச.வே. சுப்பிரமணியன் (உ.ஆ), தொல்காப்பியம், ப. 477
9. பேராசிரியர் (உ.ஆ), தொல்காப்பியம் – பொருளதிகாரம், ப . 41
10. இரா.சாரங்கபாணி (ப.அ), சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்(1), ப.119
11. தவத்திரு அழகரடிகள், திருக்குறள் அறம், ப.84
12. மேலது, ப. 93
13. மேலது, ப. 110
14. மேலது, ப. 113
15. ஜெ. ஸ்ரீசந்திரன் (உ.ஆ), நாலடியார், ப. 57
16. அ. மாணிக்கம் (உ.ஆ),பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள்(2), ப.503
17. மேலது, ப. 552
18. மேலது, ப. 610
19. மேலது, ப. 889
20. மேலது, ப. 892
21. மேலது, ப. 922
22. மேலது, ப. 961
23. மேலது, ப. 1270
24. வாழ்வியற் களஞ்சியம்(2), பக். 34 – 39
25. மேலது, ப. 35
26. ஸ்ரீஜெயதயால் கோயந்தகா (உ.ஆ), ஸ்ரீமத்பகவத்கீதா, ப.137
27. மேலது, ப. 140
28. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 42
29. த.மோகனசுந்தரி, ஐம்பெருங்காப்பியங்களில் அறக்கோட்பாடுகள், ப .19
30. ஸ்ரீ. ஜெயதயால் கோயந்தகா (உ.ஆ), ஸ்ரீமத் பகவத்கீதா, ப. 950

31.மேலது, ப. 950

32.மேலது, ப. 951

33.மேலது.

34.மேலது ப. 953

35.வே. அண்ணாமலை, சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் (1) (தொ.ஆ), பக்.59-64

36.வ.சுப.மாணிக்கனார் (உ.ஆ), நீதி நூல்கள், ப. 38

37.இரா. மோகன்,(ப.ஆ), ஆய்வுக்கோவை(3) - 2007 , ப. 1455

38. அ.ஆலிஸ் (உ.ஆ), பதிற்றுப்பத்து, ப.57

39.கு.வெ.பாலசுப்பிரமணியன், புறநானூறு, ப.411

40 வ.சுப. மாணிக்கனார் (உ.ஆ) நீதி நூல்கள், ப.14

41.கிருஷ்ணசாமி (உ.ஆ), நீதி நூல்கள் பத்து, டி.பி. ப. 14

42. இரா. காசிராஜன், காப்பியம், ப.1

43.மேலது , ப. 2

44. மேலது, ப. 5

45. மேலது, ப. 4

46.மேலது, பக் . 6 - 7

47. சேலை சகதேவ முதலியார், காழி சிவகண்ணுசாமிப்பிள்ளை (தொ.ஆ), கழகத் தமிழ் கையகராதி, ப. 125

48. இரா. காசிராஜன், காப்பியம், பக். 6 - 7

49. மேலது, ப. 10

50. இரா. காசிராஜன்,உலகக் காப்பியங்கள், ப. 1

51. இரா. காசிராஜன், காப்பியம், ப. 13

52. கி.வ. ஜகநாதன், தமிழ்க்காப்பியங்கள், ப.52

53. இரா. காசிராஜன், உலகக்காப்பியங்கள், ப.3

54. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 253

55. கி.வா. ஜகநாதன், தமிழ்க்காப்பியங்கள், ப.78

56. விக்கிபீடியா - இணையதளம்

57. இரா. காசிராஜன்,உலகக் காப்பியங்கள், ப. 11

58. மேலது,  ப.12

59. ஜெ. ஸ்ரீசந்திரன், பஞ்சபரமேஷ்டிகளும் ஜைனதத்துவமும், ப.7

60. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 32

61. ஜெ. ஸ்ரீசந்திரன், பஞ்சபரமேஷ்டிகளும் ஜைனதத்துவமும், பக். 92 - 94

62. மயிலை சீனி, வேங்கடசாமி, சமணமும், தமிழும், ப. 15

63. மேலது, ப. 20

64. பெ. சுயம்பு, இந்தியாவில் சமயங்கள், பக். 126 – 128

65. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 15

66. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப.20

67. மேலது.

# சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை ஐம்பெருங்காப்பியங்கள் ஆகும். இவற்றுள் சிலப்பதிகாரம் முதன்மையானதும் காலத்தால் முந்தியதுமாகும். சிலப்பதிகாரம் சமணசமய காப்பியம் ஆகும். சமணசமயத்தின் கருத்துக்கள் அடிப்படையில் காப்பிய மாந்தர்கள் வழி எடுத்துரைக்கப்படும் அறம் மற்றும் அவ்வறத்தை எடுத்துரைக்கப் படைத்துள்ள மாந்தர் படைப்புகள் பற்றியும் இவ்வியல் எடுத்துரைக்கின்றது. சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் இளங்கோவடிகள் ஆவார். இஃது கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நூலாகும். இது 5001 அடிகள் மூன்று காண்டங்கள், முப்பது காதைகள் எனும்படி அமைந்துள்ளது. நிலை மண்டில ஆசிரியப்பாவால் ஆனது. புகார், மதுரை, வஞ்சிக் காண்டங்கள் முறையே 10, 13, 7 காதைகளைக் கொண்டுள்ளன.

முதல் தமிழ் காப்பியம், உரையிடையிட்டப் பாட்டுடைச் செய்யுள், முத்தமிழ்க் காப்பியம், முதன்மைக் காப்பியம், பத்தினிக் காப்பியம், நாடகக் காப்பியம், குடிமக்கள் காப்பியம், புதுமைக் காப்பியம், பொதுமைக் காப்பியம், ஒற்றுமைக் காப்பியம், ஒருமைப்பாட்டுக் காப்பியம், தமிழ்த் தேசியக் காப்பியம், மூவேந்தர் காப்பியம், வரலாற்றுக் காப்பியம், போராட்ட காப்பியம், புரட்சிக் காப்பியம், சிறப்பதிகாரம் ஆகியவை சிலப்பதிகாரத்தின் வேறு பெயர்கள் ஆகும். சிலப்பதிகாரம், தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் தமிழ்க் காப்பியம் என்று போற்றப்படும் பெருமை உடையது. ''வடமொழியில் நூபுர காவியம் எனவும், இந்தியில் நூபுரகதா எனவும் சிலப்பதிகாரம் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது.'' [1]

சிலப்பதிகாரக் கதை வழிவழியாக வந்த செவிவழிக் கதை என்று கூறுவர். அஃது கோவிலன் கதை என்பதாகச் சுட்டப்படுகிறது. புகார் காண்டச் செய்திகளும் பெயர்களும் மட்டுமே மாறுபாடுடையன. மற்றைய காண்டங்களின் கதை அமைப்பு ஒப்புமையுடையது. ''வைசிய புராணம் என்னும் நூலில் 32 – ஆம் சருக்கமாகிய பஞ்ச காவியத்தலைவரில் மாசாத்து வாணிபன் சிலப்பதிகாரம் பெற்ற சருக்கம் என்பதில் கோவிலன் கதைக் கூறப்பட்டுள்ளது''[2]

**கோவிலன்கதை**

மாசாத்து வாணிபன் குலத்தில் மணியரசன் (கோவலன் முற்பிறப்பு) என்ற வணிகன் பிறந்து என்ணெய் வாணிகம் செய்து வந்தான். நரபலி கேட்கும் துர்க்கையம்மனுக்கு எண்ணெய் தீபமிட்டதால் பாண்டியனின் ஆணைப்படி கொலைசெய்யப்பட்டான். துர்க்கை

சிலையின் கையில் சென்று மணியரசன் தலை விழுந்து மன்றாடியமையின், துர்க்கை பாண்டியன் மகளாகப் பிறந்து பாண்டியனின் கொற்றத்தை அழிப்பதாக உறுதிகூறினாள். மணியரசன் தனது தம்பிக்கு மகனாகப் பிறந்து கோவிலன் எனும் பெயர் பெற்றான். மணியரசன் மனைவியும் அப்போதே இறந்து மாதகி (மாதவி) என்னும் ஆடல் மகளாகப் பிறந்தாள்.

துர்க்கை, பாண்டியனின் மகளாகப்பிறந்து அரசுக்கு ஆபத்து என்ற கணிப்பர்களின் வாக்கால் பெட்டியில் வைத்து ஆற்றில் விடப்பட்டாள். கோவிலனின் மாமன் அக்குழந்தைக்கு கர்ணகி (கண்ணகி) எனப்பெயரிட்டு வளர்த்து, கோவிலனுக்குத் திருமணம் முடித்தான். திருமணத்தில் ஆடவந்த மாதகியைக் கண்டு நயந்து அவளோடு வாழ்ந்தான். பின்னர் உள்ள கதை சிலப்பதிகாரத்தோடு ஒப்பது. வான் பொருள் தொலைத்தல், கண்ணகியோடு மதுரை செல்லல், சிலம்பு விற்றல், பொற்கொல்லனால் திருடன் என்ற பட்டம் சுமத்தப்பட்டு கோவலன் கொலைபடல், கண்ணகி வழக்குரைத்தல், பாண்டிய நாடு தீக்கிரையாகுதல், கண்ணகி தெய்வமாதல் போன்றவை சிலப்பதிகாரக் கதையே ஆகும். எனினும் இக்கோவிலன் கதை வைணவ சமயத் தொடர்புடையதாக விளங்குகிறது.

**சிலப்பதிகாரம் உணர்த்தும் அறங்கள்**

சிலப்பதிகாரம் சமண சமயத்தைச் சார்ந்த அறங்களை எடுத்துரைக்கிறது. சமண சமயம், துறவறத்தாருக்கு உரிய அறங்களாக இருபத்தெட்டினையும், இல்லறத்தாருக்குரிய அறங்களாக பத்தினையும் குறிப்பிடுகின்றது. அவை முன் இயலில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுள் சிலப்பதிகாரம் அகிம்சை, நாவடக்கம், வாய்மை, கள்ளாமை, நிலையாமை, அவாவறுத்தல், புலனடக்கம், இன்ப–துன்பங்களை ஒக்க நோக்கல், மனத்தூய்மை, துதித்தல், வணங்குதல், பாவத்திலிருந்து விலகியிருத்தல், கழுவாய் தேடல், பிறன்மனை நயவாமை, அறவழியில் பொருள் தேடல், கள், ஊன், தேன் உண்ணாமை, பெரியோரை வணங்குதல் ஆகியவற்றை வலியுறுத்துகிறது.

**சிலப்பதிகாரத்தில் அறமாந்தர்கள்**

சிலப்பதிகார அறமாந்தர்களை சமய அடிப்படையில் இரண்டு வகையாகப் பகுக்க இயலும். அவை, 1.அறம் உரைக்கும் மாந்தர்கள், 2 அறவழியில் வாழ்ந்த மாந்தர்கள் ஆகியவையாகும். சிலப்பதிகாரத்தில் அறமுரைக்கும் அஃதாவது அறத்தை எடுத்துரைக்கும் மாந்தர்களாகக் கவுந்தியடிகள், சாரணர், மாடல மறையோன் ஆகியோர் விளங்குகின்றனர். அறவழியில் வாழ்ந்த மாந்தர்களாக கண்ணகி, கோவலன், மாதரி, சாயலன் மற்றும் அவன் மனைவி ஆகியோரைக் குறிப்பிட இயலும்.

**கவுந்தியடிகள்**

சிலப்பதிகாரத்தில் அறமுரைக்கும் மாந்தர்களில் குறிப்பிடத்தகுந்தவர் கவுந்தியடிகள் ஆவார். புகார்க்காண்டத்து நாடுகாண் காதை, மதுரைக் காண்டத்து காடுகாண் காதை, புறஞ்சேரியிறுத்த காதை, ஊர்காண் காதை, அடைக்கலக் காதை, வஞ்சிக் காண்டத்து நீர்ப்படைக் காதை ஆகியவற்றில் இடம் பெறுகின்றார். சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகள், கோவலன் – கண்ணகிக்கு மதுரை செல்வதற்கு வழித்துணையாய் அமைகின்றார். ஆயர் குலமகளான மாதரியிடம் கண்ணகியை அடைக்கலப்படுத்துபவராகவும், கோவலனின் இறப்பிற்காகவும் கண்ணகியின் நிலைக்கும் வருந்தி வடக்கிருந்து உயிர் துறப்பவராகவும் படைக்கப்பட்டுள்ளார்.

கவுந்தியடிகளைப் பற்றிக் காப்பியத்தில் உரைக்கும் போது ‘‘உறுதவத்தோர், கழிபெருஞ்சிறப்பிற் கவுந்தி, மாதவத்தாட்டி, தவப்பெருஞ் சிறப்பிற் கவுந்தி, புண்ணிய முதல்வி, மறவுரைநீத்த மாசறுகேள்வி, ஆசில் கொள்கை அறவி, இருந்தவ முதல்வி, பொய்தீர்காட்சிப் புரையோர், தவந்தரு சிறப்பிற் கவுந்தி, பொறைசாலாட்டி’’[3] என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். அறத்தை எடுத்துரைப்போர் எத்தன்மைத்தாக இருக்கவேண்டும் என்பதற்கு உதாரணமாக கவுந்தியடிகள் சுட்டப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இக்காரணத்தினாலே காப்பியமாந்தர்களில் அறம் உணர்த்துபவர்களில் முதன்மையிடத்தில் கவுந்தியடிகள் எடுத்துரைக்கப் படுகின்றார்.

நல்ல பண்புகள் என்பது அகம் சார்ந்தது. ஆதலால் கவுந்தியடிகளின் நற்பண்புகளை விதந்தோதிய இளங்கோவடிகள் அவரது புறத்தோற்றம் பற்றி சிறப்பிக்கவில்லை. எளிமையான அவரின் தோற்றத்தைக் ‘‘கவுந்தியடிகளைப் பொறுத்தவரை புறக்கோலம் அவர் தனிச்சிறப்பன்று. ஆதலின் அதனை ஆசிரியர் கூற முற்படவில்லை. கடிகை, அவாமேல் அறுகை (உறி), கைப்பீலி என்பன கொண்டு மந்திரத்தையே வழித்துணையாகக் கூறிச் செல்கின்றார். இவ்வளவே வெளிக்கோலம்’’[4] என்ற தொ.பொ.மீ யின் கருத்து இங்கு நோக்கத்தக்கது. கவுந்தியடிகளைச் சமய அடிப்படையில் நோக்க ஒருவித புறத்தோற்றத்தை அனுமானிக்க முடிகிறது. சமணசமயம் சுவேதாம்பரர், திகம்பரர், ஸ்தானகவாசிகள் என்ற மூன்று பகுப்பை உடையது பிற்காலத்தில் யாப்பனியம் என்ற நான்காவது பகுப்பும் சுட்டப்பட்டது. ‘‘கவுந்தியடிகள் யாப்பனீய சங்கத்தைச்சேர்ந்தவர் என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.’’[5]

**‘தோமறு கடிகையுஞ் சுவன்மே லறுவையும்**

**காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு’ (சிலம்பு. நாடுகாண்:98-99)**

என்று சிலம்பு கூறுவதனால், பிச்சைப் பாத்திரத்தையும், தோளிலிடும் உறியையும் மயிற்றோகையையும் கை கொண்டிருந்தார் என்றும், மக்களோடு கலந்து பழகுவதனால் வெண்ணிற ஆடை உடுத்தியிருக்கவேண்டும் என்றும் இவரது புறத்தோற்றம் அறியப்படுகிறது.

**கவுந்தியடிகள் – பெயர் விளக்கம்**

சமண சமயப் பெண்பாற் துறவிகளுக்கு ‘‘கந்தி அல்லது கௌந்தி என்ற பெயரும் அவ்வை, அம்மை, கன்னி, பைம்மை, சாமி, குரத்தி, பெருமாட்டி, ஆசான், தலைவி, ஐயை, கவுந்தி, ஆகிய பெயர்களும் வழக்கில் இருந்துள்ளதாக சூடாமணி நிகண்டு, பிங்கல நிகண்டு, கயாதர நிகண்டு ஆகியவை குறிப்பிடுகின்றன.’’[6] ‘இந்த அம்மையின் (கவுந்தீ) இயற்பெயர் ஐயை’ என்று தெ. பொ.மீ கருத்துரைக்கிறார். ஆனால் கயாதர நிண்டு,

**‘‘சாமி குரத்தி பெருமாட்டி ஆசான் தலைவி ஐயை**
**நாமங் கவுந்தியும் பைம்மையும் ஆருகதத்துத் தவப்பெண்’’** [7]

என்று கூறுவதால் தெ. பொ. மீயின் கருத்து ஏற்புடையதாக இல்லை. ஏனெனில் ஐயை என்பதும் சமணப் பெண்களின் துறவுப்பெயரே ஆகும். எனவே கவுந்தி என்ற துறவுப்பெயர் இயற்பெயராகி அடிகள் என்ற அடையுடன் கவுந்தியடிகள் என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

**கவுந்தியடிகள் உணர்த்தும் அறம்**

சமயம், மக்களைப் பண்படுத்தும் கருவியாகக் காலந்தோறும் பயன்பட்டு வந்துள்ளது. கவுந்தியடிகளும் தான் சார்ந்த சமண சமய அறக்கருத்துக்கள் பலவற்றை மக்களுக்கு எடுத்துரைக்கின்றார். கவுந்தியடிகளைச் சமணப்பற்று உடையவராக அருகனைத் தவிர மற்ற தெய்வங்களை வணங்காதவராகச் சமணக் கொள்கைகளைப் பின்பற்றுபவராக இளங்கோவடிகள் படைத்துள்ளார். சமணக் கொள்கைகளாக சாமயிகம், துதி, வணக்கம், பிரதிகிர்மணம், கழுவாய், விசார்க்கம் என ஆறு குறிப்பிடப்படுகிறது. இக்கொள்கையின்படி வழுவாது வாழ்ந்து வரும் மாந்தராகக் கவுந்தியடிகள் படைக்கப்பட்டுள்ளார்.

**இன்ப துன்பங்களை ஒக்க நோக்கல்: (சாமயிகம்)**

இன்ப துன்பங்களை ஒக்க நோக்கும் தன்மையை சமணம் **சாமயிகம்** என்று குறிப்பிடுகிறது. ‘‘இன்பதுன்பம், நன்மை தீமை, உயர்வு தாழ்வு முதலியவற்றை ஒரு

தன்மையாகப் பார்த்தல் சாமயிகம் எனப்படும்.''[8] பொறைசாலாட்டி இன்பதுன்பத்தையும் நன்மை தீமையையும் ஒக்கவே நோக்குகிறார். இதனை,

**'தீதுடை வெவ்வினை யுருத்த காலைப்**
**பேதமை கந்தாப் பெரும்பே துறுவர்**
**ஒய்யா வினைப்பயன் உண்ணுங் காலைக்**
**கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள்**
**பிரிதல் துன்பமும் புணர்தல் துன்பமும்**
**உருவி லாளன் ஒறுக்குந் துன்பமும்**
**புரிகுழன் மாதர்ப் புணர்ந்தோர்க் கல்லது**
**ஒருதனி வாழ்க்கை உரவோர்க்கு கில்லை' (சிலம்பு.ஊர்காண்:29-36)**

என்ற கூற்றால் அறிய முடிகிறது. நன்மை வருங்காலத்து அதனை இன்பமாக ஏற்கும் மக்கள், தீமை வருங்காலத்து அதனை ஏற்காது துன்புற்று அறிவு மயங்குகின்றனர். பிரிதல், புணர்தல், காமத் துன்பங்கள் மனதை அடக்காதவர்களுக்கு உரியது. மனதை அடக்கி துறவு வாழ்க்கை மேற்கொள்பவருக்கு என்னாளும் இன்பம் உண்டாகும் என்று கவுந்தியடிகள் கூறுகின்றார். கண்ணகியும் கோவலனும் மதுரைக்குச் செல்லும் பயணத்தில் கவுந்தி, கண்ணகியின் மெல்லியல்பு அறிந்து அவளுக்குத் துணையாகப் புறப்படுகிறார். துன்புற்றோருக்கு உதவத் தன்னையே வருத்திக்கொள்ளும் நற்பண்பு இவ்விடத்தில் அறியப்படுகின்றது.

**துதி**

"இருஷபவர் முதலிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களையும் அருகப் பரமேட்டியையும் போற்றித் துதித்தல் துதி எனப்படும்.''[9] சிலம்பிலும் சாரணர் அருகனைப் போற்ற கவுந்தியடிகள் துதி செய்வதை,

**'ஒருங்குட னில்லா வுடம்பிடை யியர்கள்**
**அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்**
**செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்**
**... ... ... ...**
**... ... ... ...**
**சங்கரன் ஈசன் சயம்பு சதுமன்**
**அங்கம் பயந்தோன் அருகன் அருள்முனி**
**பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்**
**விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி' (சிலம்பு.நாடுகாண்:175-189)**

என்ற அடிகளால் உணரமுடிகிறது. இதன் மூலம் துதி எனும் சமண அறத்தை முறையாகக் கடைபிடித்தவர் கவுந்தியடிகள் என்பதை அறியமுடிகிறது.

**வணக்கம்**

“அருகர், சித்தர், தீர்த்தங்கரர் முதலியவர்களின் திருவுருவங்களையும், சாத்திரங்களைக் கற்ற தபசிகளையும் தீக்ஷை கொடுத்த குருக்களையும், பெரியோர்களையும் மனம் வாக்கு காயங்களினால் வணங்குதலும்”[10] சமணசமயம் உணர்த்தும் கொள்கையாகும். கவுந்தியடிகளும் தனது மனம், வாக்கு காயங்களினால் அருகன் ஒருவனையன்றி வேறொரு தெய்வத்தை வணங்கமாட்டேன் என்று கூறுவதாகக் காணப்படுகிறது. கவுந்தியடிகள்,

**‘ ஒரு மூன் றவித்தோன் ஓதிய ஞானத்**
**திருமொழிக் கல்லதென் செவியகம் திறவா**
**காமனை வென்றோ னாயிரத் தெட்டு**
**நாம மல்லது நவிலா தென்நா**
**… … … …**
**இறுதியி லின்பத் திறைமொழிக் கல்லது**
**மறுதரவோதியென் மனப்புடை பெயராது’(சிலம்பு.நாடுகாண்:194-207)**

என்று அருகனை வணங்குகின்றார். மேலும் சமணப் பெரியோர்களாகிய சாரணர்களையும் வணங்குகின்றார். இதனால் வணக்கம் என்னும் சமண அறத்தை வழுவின்றி பின்பற்றியவர் ஆகின்றார்.

**இன்னா செய்யாமை: (பிரதிகிர்மணம்)**

இன்னா செய்யாமையை சமணம் **பிரதிகிர்மணம்** என்ற சொல்லால் குறிப்பிடுகிறது. “பாவத்திற்குக் காரணமானவை தன்னிடத்தில் மனம் வாக்கு காயங்களினால் நேராதபடி காத்துக் கொள்ளுதல் பிரதிகிர்மணம் எனப்படும்.”[11]

**‘மனத்துகண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற’ (குறள் . 34)**

என்று மனதால் மாசுபடாதிருத்தல் அறத்திற்கெல்லாம் சிறந்த அறம் என்று வள்ளுவம் கூறுகின்றது. சமணக்கொள்கையும் மனம் மாசுபடாதிருத்தலை வலியுறுத்துகிறது. பாவச்செயலை செய்யாதிருப்பதும், மனதால் நினையாதிருப்பதும் அறமெனக் கூறப்படுகிறது. பிற உயிருக்கு இன்னா செய்யாமையும் இன்னாத சொற்களைப் பேசாமையும் அறமாகும். கவுந்தியடிகளும் காட்டு வழியிலும், வயல் வெளியிலும் நடந்து

செல்கையில் தன்னால் சிறு உயிர்களும் பாதிப்படையக் கூடாது என்பதில் கருத்தோடியிருந்தார். இதனால் இன்னா செய்யாமை எனும் அறத்தின் வழிவாழ்ந்தவர் கவுந்தியடிகள் என்பது அறியப்படுகின்றது.

**கழுவாய்**

"இது பிராயச்சித்தம் எனப்பொருள்படும். சமண முனிவர் தமது விரதத்தில் ஏதேனும் குற்றம் நேர்ந்துவிட்டால் அதனை யுணர்ந்து வருந்தி மனம், மொழி, மெய்களால் நொந்து, அக்குற்றத்தைக் கழுவுதல் கழுவாய் எனப்படும். அருங்கலச் செப்பு எனும் நூல்,

**'ஒன்றியும் ஒன்றாதும் தான்செய்த தீவினையை**

**நின்று நினைந்திரங்கற் பாற்று'**

**'தீயவை எல்லாம் இனிச் செய்யேன் என்றடங்கியத்**

**தூயவழி நிற்றலும் அற்று'**

என்று கழுவாய்க்கு விளக்கம் தருகிறது." [12]கவுந்தியடிகளும் தன் செயலுக்காக வருந்துபவராகக் காட்டப்படுகிறார். கண்ணகியும், கோவலனும் மதுரை சென்றது ஊழின் செயலெனப்படுகிறது. ஊழ் என்றவொன்று இல்லையென்றும், இது கோவலனால் எடுக்கப்பட்ட முடிவு என்று கூறற்கிடமுண்டு. ஆனால் கவுந்தியடிகள் தன்னால் தான் அவர்கள் மதுரைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர் என்று எண்ணி, அவர்களின் துன்பத்திற்கு தானே காரணம் என கலங்கி அக்கொலைக்கான கழுவாயும் தேடுகின்றவராகக் காட்டப்பட்டுள்ளார்.

**'என்னோ டிவர்வினை யுறுத்த தோவென**

**உண்ணா நோன்பொ டுயர்பதிப் பெயர்த்ததும்' (சிலம்பு.நீர்படை:83-84)**

என்று வடக்கிருந்து உயிர் துறக்கின்றார். இங்கு சமணக்கொள்கை வழுவாத கவுந்தியடிகளைக் காணமுடிகின்றது. "வடக்கிருத்தல் அல்லது சல்லேகனை என்பது சமண சமயக் கொள்கை. உண்ணா நோன்பிருந்து உயிர்விடுவது என்பது இதன் பொருள். வடக்கிருத்தல் எப்போது செய்ய வேண்டும் என்பதை அருங்கலச் செப்பு என்னும் சமண சமய நூல் கூறுகிறது.

**'இடையூறு ஒழிவில் நோய் மூப்பு இவை வந்தால்**

**கடை துறத்தல் சல்லே கனை'**

அஃதாவது பொறுக்க முடியாத மனவேதனையைத் தருகிற இடையூறு, நோய், மூப்பு இவை வந்தால் வடக்கிருந்து உயிர் துறக்கவேண்டும் என்கிறது."[13] கவுந்தியடிகளும் வடக்கிருந்து

உயிர் துறக்கக் காரணம் இடையூறு ஆகும். இங்கு இடையூறை இருபொருளில் கொள்ள வேண்டும்.

1. தன்னால் இரு உயிர்கள் (கண்ணகி, கோவலன்) துன்பமடைந்ததால், தான் மேற்கொண்ட பிரதிகிர்மணம் என்ற விரதம் இடையூறு பெறுகிறது. அதனால் கவுந்தியடிகள் வடக்கிருந்திருக்க வேண்டும்.
2. பந்த பாசமற்ற துறவுநிலையையுடைய கவுந்தியடிகள், தன்மக்கள் என்று கண்ணகி – கோவலனைக் கொண்டாடி பாசத்தில் உழன்றதால், துறவு நிலைக்கே இடையூறு தோன்றியது.

எந்த நிலையில் நோக்கினும் அவரது துறவு நிலைக்கு இடையூறு ஏற்பட்டதால் தான், கழுவாய் ஒன்றைத் தேடிக்கொள்கிறார். இதன்படி தவறு செய்தால் கழுவாய் தேடல் வேண்டுமென்ற அறவொழுக்கத்தினின்று தவறாத மாந்தராகக் கவுந்தியடிகள் விளங்குவது தெளிவு.

**நிலையாமை (விசர்க்கம்)**

“இதனை காயோத்ஸர்க்கம் எனவும் கூறுவர். தவம் செய்யும் போது வரும் துன்பங்களை அஞ்சாமல் பொறுத்தல், வாளும் உறையும் போல உடலும் உயிரும் வேறு வேறு என்பதை உணர்ந்து, தமது உடம்பையும் தமது என்று கருதாமல் யாக்கையிற் பற்றறுத்தல் விசார்க்கம் ஆகும்.”[14] கவுந்தியடிகளும் தனது யாக்கையின் மீது பற்றறுத்து வடக்கிருந்து உயிர் துறக்கின்றார். இதன்வழி நிலையாமை எனும் அறத்தை சமுதாயத்திற்கு உணர்த்திச் செல்கிறார்.

**கொல்லாமை**

எல்லா அறங்களும் கொல்லாமை என்னும் அறத்தில் அடங்குகிறது. கொல்லாமையைக் கடைபிடிப்பதன் மூலம் பிற உயிர்களுக்கு தீங்கு விளைவிக்காமை (அ) உயிர்களிடத்து அன்பு செலுத்துதல், புலால் உண்ணாமை போன்ற அறங்களையும் கடைபிடிக்க முடியும்.

**‘நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்**

**கொல்லாமை சூழும் நெறி’ (குறள் . 324)**

என்பது வள்ளுவர் வாக்கு. ‘வீடுபேறு அடைவதற்கான அறநெறி எதுவென்றால், யாதொரு உயிரையுங் கொல்லாமையாகிய அறத்தினைக் காக்கக் கருதும் நெறியே ஆகும்’ என்று வள்ளுவம் சுட்டுகிறது.

**‘எறிநீ ரடைகரை இயக்கந் தன்னிற்**

**பொறிமா ணலவனு நந்தும் போற்றாது**

**ஊழடி யொதுக்கத் துறுநோய் காணில்**

**தாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா’(சிலம்பு .நாடுகாண் : 90 – 93)**

என்ற கவுந்தியடிகளின் உரையும் கொல்லாமையைச் சுட்டிநிற்கிறது. மதுரை செல்லும் வழியின் இயல்பு கூறுமிடத்து, நீரோடும் வாய்க்கால் கரையில் நண்டும் நத்தையும் ஊர்ந்து செல்லும். அதனைக் கவனமாகக் கடந்து செல்ல வேண்டுமேயன்றி அதற்கு ஊறு செய்தால், அதனால் மனிதர்களுக்கு வரும் துன்பம் அளவுகடந்ததாக இருக்குமென வலியுறுத்துகிறார். ந.மு.வேங்கடசாமி நாட்டார், இங்கு குறிப்பிடப்படும் துன்பம் என்பது கொலைப்பாவம் என்கிறார். ‘‘இம்மைக்கண் அன்றி மறுமையிலும் நரகத்திலுறுந் துன்பமும் தாங்க வொண்ணா எனப் பொருள் தருதலின் … அருக சமயத்தாரின் கள்ளுண்ணாமை, கொல்லாமை யென்னும் அறங்கள் மறந்தும் வழுவலாகா வென்பதனை இங்ஙனம் அழகுறக் கூறிப் போந்தனர்’’[15] என்று குறிப்பிடுகின்றார். இவற்றிலிருந்து கொல்லாமை என்ற அறம் போற்றும் மாந்தராகக் கவுந்தியடிகள் படைக்கப்பட்டுள்ளமையை அறியமுடிகின்றது.

**பிரமசரியம்: (சிற்றின்பத்தை துறத்தல்)**

‘‘சிற்றின்பத்தை மனம் வாக்கு காயங்களால் செய்யாதிருத்தலே பிரமசரியம் எனப்படும். தெய்வங்களுடனாவது மனிதர்களுடனாவது விலங்குகளுடனாவது இணைவிழைச்சாகிய சிற்றின்பத்தைத் துய்க்க மாட்டேன்; இதனை மனம், மொழி, மெய்களால் முக்காலத்திலும் செய்யாதிருக்க உறுதி கூறுவதாக’’[16] சமணத் துறவிகள் உறுதிமொழி ஏற்கின்றனர்.

**‘பிரிதல் துன்பமும் புணர்தல் துன்பமும்**

**உருவி லாளன் ஒறுக்குந் துன்பமும்**

**புரிகுழன் மாதர்ப் புணர்ந்தோர்க் கல்லது**

**ஒருதனி வாழ்க்கை உரவோர்க் கில்லை**

**பெண்டிரும் உண்டியும் இன்பமென் றுலகிற்**

**கொண்டோ ருறூஉங் கொள்ளாத் துன்பம்**

**கண்டன ராகிக் கடவுளர் வரைந்த**

**காமஞ் சார்பாக் காதலின் உழந்தாங்**

**கேமஞ் சாரா இடும்பை எய்தினர்’ (சிலம்பு . ஊர்காண் : 35 – 43)**

என்ற கவுந்தியடிகளின் கூற்று பிரமசரியத்தை வலியுறுத்திகிறது. இளங்கோவடிகள் இத்தகைய விரதம் மேற்கொண்ட இளந்துறவியாவார். அதனால் இப்பிரமசரிய கொள்கையை எடுத்துரைக்க கவுந்தியடிகள் எனும் படைப்பை ஆசிரியர் பயன்படுத்திக்கொண்டுள்ளார்.

**அவாவறுத்தல்**

ஆசையே அனைத்துத் துன்பத்திற்கும் காரணம் என்பது பௌத்தமதக் கருத்தாகும். இக்கருத்தைச் சமணமும் வலியுறுத்துகிறது. ஆசையை அறுத்தால் தான் பற்றிலிருந்து விடுபெற்று வீடுபேற்றை அடைய முடியும் என்பது சமணக் கொள்கையாகும். அவாவறுத்தலாவது முற்றத் துறத்தல். துறத்தலாவது தன்னுடைய பொருளைப் பற்றறத் துறத்தல்.

**'மெய்வாய் கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற**
**ஐவாய வேட்கை அவாவினைக் – கைவாய்**
**கலக்காமற் காத்துய்க்கும் ஆற்ற லுடையான்**
**விலங்காது வீடு பெறும்' (நாலடியார் . துறவு : 59)**

என்று அவாவறுத்தலை நாலடிநானூறு சுட்டுகிறது. கவுந்திடிகளை பற்றற்றவராக இளங்கோவடிகள் படைத்துள்ளார். எனினும் கோவலன் கண்ணகி மீது அன்பும் பற்றும் கொண்டவராகக் காட்டப்பட்டுள்ளார். ''தவப்பள்ளியின் தனித்து வாழ்ந்த காலத்தில் பாசத்திரையை விலக்கி உயிருக்கு விடுதலை வழங்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள் கவுந்தி. கண்ணகியின் தொடர்பு ஏற்பட்டபின் பாசத்திற்கு மீண்டும் அடிமையாகின்றாள் அவள்'' [17] என்று சாமுவேல் தாசன் சுட்டுகின்றார். பந்தம் அறுக என்று சாரணர் வலியுறுத்தினாலும் அன்பு கெடுக என்று எந்த மதமும் போதிப்பதில்லை. அன்பு அனைத்து உயிர்களுக்கும் அடிப்படையானது. கண்ணகியின் கற்பு நெறியும் ஒழுக்கமும் கவுந்தியடிகளை அவள்பால் அன்பு கொள்ளச் செய்தது. அவாவை அறுத்தல் சமணம் சுட்டும் நெறியாகும். அன்பை அறுத்தல் சமணத்தின் நெறியன்று. இவ்வடிப்படையில் கவுந்தியடிகள் சமணசமயக் கொள்கையைப் பின்பற்றிய நல்ல அன்புள்ளம் கொண்ட மாந்தராகப் படைக்கப்பட்டிருப்பது புலனாகிறது.

**நாவடக்கம்**

பாஷாசமிதி எனும் அறத்தில் நாவடக்கம் எனும் அறமும் ஒன்றென சமணசமயம் கூறுகிறது. அவையறிந்து, திறனறிந்து சொல்லும் சொல்லே வெல்லும் சொல்லாகும். அதுவன்றி நாவடக்கமின்றி சொல்லப்படும் பயனிலச் சொற்களால் தீமையே விழையும்.

**‘யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்**

**சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு’ (குறள் . 127)**

என்பது வள்ளுவம். வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும் கண்ணகி – கோவலனைக் கண்டு யாரென வினவ, அடிகளும் தம் மக்கள் என்று பதிலிற ஒரு வயிற்று மக்கள் திருமணம் செய்து வாழ்வரோ என்று அவர்கள் ஏளனப்படுத்த இதனைப்பொறாத கவுந்தியடிகளும், அவர்களை முதுநரியாகச் சாபமிடுகின்றார். அவர்கள் நாவடக்கமின்மையால் இழிபிறப்பு உற்றனர். ‘அறியா மையினின் றிழிபிறப் புற்றோர்’ (சிலம்பு.நாடுகாண்:241) என்பதற்கு உரை பகன்ற ந.மு.வேங்கடசாமி நாட்டார், “நெடுங்காலம் தவஞ்செய்து பெற்ற மக்கட் பிறப்பை ஒரு மொழியான் இழந்தனர் என்பது தோன்ற இழிபிறப்பு உற்றோர் என்றார். இதனானே யாகாவாராயினும் நாகாத்தல் இன்றியமையாதது என்பது பெறப்படும்”[18] என்கிறார். யாவர்க்கும் நாவடக்கம் வேண்டும் என்ற அறம் கவுந்தியடிகள் வழியாகக் காப்பியத்தில் உணர்த்தப்படுகிறது.

**அடைக்கலம்**

‘திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை’ என்பர். இங்கு தெய்வமாய், சமண சமயப் பெரியோர்கள் நின்று திசையறியா பறவைகளாய் உள்ள மக்களை பாதுகாத்தனர். அடைக்கலம் கொடுப்பதை உயர் அறமாக சமணம் கூறுகிறது. “அடைக்கல தானத்தையும் சமணர் பொன்போல் போற்றி வந்தனர். அச்சங்கொண்டு அடைக்கலம் என்று புகல் அடைந்தவருக்கு அபயமளித்துக் காப்பது அபயதானம் என்பது. இதற்கென்று குறிப்பிட்ட சில இடங்கள் இருந்தன. இந்த இடங்கள் பெரும்பாலும் சமணக் கோயில்களை அடுத்திருந்தன. இந்த இடங்களுக்கு அஞ்சினான் புகலிடம் என்பது பெயர் இந்த இடங்களில் புகல் அடைந்தவரைச் சமணர் காத்துப் போற்றினார்கள்.”[19] அத்தகைய சமணப்பள்ளியில் வாழ்ந்து வந்த கவுந்தியடிகளைக் கோவலனும் கண்ணகியும் சந்தித்து வணங்குகின்றனர். தவமேற் கவுந்தி, அவர்களிருவரும் ஓரிடமாக அவ்விடத்தை தங்கியிருக்கவும் விருப்பமில்லாமல், மதுரை சென்று பொருளீட்டும் நோக்கத்தோடு வந்திருப்பதை உணர்ந்த உளவியல் நுட்பமுடையவராய்க் காணப்படுகிறார். அவர்கள் இருவரின் உணர்வறிந்த கவுந்தியடிகள்,

**‘உரிய தன்றீங் கொழிகென வொழியீர்**
**மறவுரை நீத்த மாசறு கேள்வியர்**
**அறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்**
**தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்**

**கொன்றிய வுள்ள முடையே னாகலின்**

**போதுவல் யானும் போதுமி னென்ற'          (சிலம்பு . நாடுகாண் : 55 – 60)**

என்கிறார். அடைக்கலம் என்று வந்துவிட்டமையால், அவர்களுக்குத் தங்கிச் செல்ல உதவியதுடன் வாழ்வின் திசையறியாது தவிக்கும் அம்மக்களுக்குத் துணையாக அவர்கள் பால் கொண்ட அன்பின் காரணமாக உடன் செல்கிறார். மாதரி என்ற இடைக்குல மடந்தையிடம் அடைக்கலப்படுத்துகின்றார். மதுரை புறஞ்சேரி வந்தவுடன் கவுந்தியடிகள் தன்வழியே செல்லாது, தாயைப் போலப் பரிந்து, ஆயர் மகளின் இயல்பறிந்து, அடைக்கலமாகப் பெறுவதனால் ஏற்படும் நன்மைகளை குரங்குக்கை வானவன் கதை மூலம் விளக்கி, மாதரி மனதைப் பக்குவப்படுத்தி, பின்னர் அவளிடம் கண்ணகியையும் கோவலனையும் அடைக்கலப்படுத்துகின்றார். சமணக் கொள்கையின்படி அடைக்கல மாக வந்தவரைக் காத்தல் அறம். அவ்வறம் வழுவாது இறுதிவரை உதவியவராகக் கவுந்தியடிகள் விளங்குவது தெளிவு.

**கவுந்தியடிகளும் இளங்கோவடிகளும்**

**" யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்**

**வள்ளுவர் போல், இளங்கோ வைப்போல்**

**பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை"** [20]

என்று பாரதி கூறுமிடத்து இளங்கோவின் புலமைத்திறனை அறியமுடிகின்றது. அத்தகைய புலமைமிக்க இளங்கோவடிகள் தன்னையும் தன் காவியத்தில் மாந்தராக்கி உலவ விட்டுள்ளார். அவர் மறைபொருளாய் இருக்கும் பாத்திரம் கவுந்தியடிகள் என்று ஆய்வுலகம் குறிப்பிடுகிறது. "சிலப்பதிகாரப் பாத்திரங்களிலொன்றில் இளங்கோ மறைந்திருப்பதாக நாம் கருதினால், அப்பாத்திரம் எது ? ஒன்று , மாடலன் என்னும் பாத்திரமாக அது இருக்க வேண்டும். அன்றெனின், கவுந்தி என்னும் நமது பாத்திரமாக இருக்க வேண்டும். நமது எண்ணம் கவுந்தியைச் சுற்றியே வட்டமிடுகின்றது"[21] என்ற குறிப்பு நோக்கத்தக்கது.

இளங்கோவடிகள் சமணசமயத் துறவி என்பது பலரால் ஏற்கப்பட்ட கருத்தாகும். சமணசமயத்தை பரப்பக் கவுந்தியடிகளைப் படைக்காமலே ஆசிரியர் கூற்றாய்ச் சமணக் கொள்கைகளைக் குறிப்பிட்டிருக்க முடியும். ஆனால் அது படிப்போர் மனதில் பதியாது சலிப்பை ஏற்படுத்தும். எனவே தானும் காப்பியத்தில் ஒரு மாந்தராகி தலைவனையும் தலைவியையும் வழிநடத்திச் செல்லும் பாங்கில் சமணசமயத்து அறக்கருத்துக்களை வழிமொழிகிறார். இளங்கோவடிகள் துறவைச் சிறப்பிக்க கவுந்தியடிகள் என்னும் துறவியைப் படைக்கின்றார். இல்லறம், துறவறம் என்ற இரு நெறிகளும் சமுதாயத்தின்

இரு கண்கள் போன்றவை. இல்லறம் கண்ணகியின் கற்பால் திண்மை பெறுகிறது. துறவின் மேன்மையை எடுத்துரைக்க கவுந்தியடிகளை இளங்கோவடிகள் படைத்துள்ளார்.

இளங்கோவடிகளால் அறமாந்தராகப் படைக்கப்பட்டிருக்கும் கவுந்தியடிகளின் சில செயல்கள் சமண சமய நெறிக்குப் புறம்பானவையாக காணப்பட்டாலும், அதனை தன் சொற்திறனாலும், படைப்புத் திறனாலும் இளங்கோவடிகள் மாற்றிவிடுகிறார். சமண நெறிக்கும் புறம்பானதாக இரவில் நடத்தல், வம்பப்பரத்தைக்கும் வறுமொழியாளனுக்கும் சாபமிடுதல், பாசத்தில் சிக்குண்டு தவித்தல் போன்றவற்றைச் சுட்ட இயலும். சமணக் கொள்கையில் இரவில் நடத்தல் குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால் கவுந்தியடிகள் கண்ணகியின் மென்மைத் தன்மையின் காரணமாக இரவிலும் பயணம் மேற்கொள்கிறார். முன்பு வழிநடைப்பயணத்தின் போது நண்டு, நத்தை போன்றவற்றை மிதித்துக் கொள்ளவதால் ஏற்படும் தீமையை விளக்கும் கவுந்தியடிகள், இராவழிப்பயணத்தை மேற்கொள்கின்றார்.

**'நிலவொளி விளக்கின் நீனிடை மருங்கின்**

**இரவிடைக் கழிதற் கேத மில்லெனச்**

**குரவரும் நேர்ந்த கொள்கையி னமர்ந்து' (சிலம்பு . புறஞ்சேரி : 12 – 14)**

என்று கவுந்தியடிகள் முதலானோர் நிலாவொளியில் சென்றதை இளங்கோவடிகள் குறிக்கின்றார். நிலவொளியானது விளக்கைப் போல் வெளிச்சம் தருவதால் தான் கவுந்தியடிகள் இரவில் நடக்க இசைகின்றார் என்பதில் ஐயமில்லை. ஆதலால் இரவில் நடத்தல் முரண்பாடென்றாலும் அவர் நிலவின் ஒளியில் உயிர்களுக்குத் தீங்குநேரா வண்ணம் தான் சென்றார் என்பதை ஆசிரியர் சுட்டிச் செல்கிறார்.

சமணசமயம் சினமிகலை **பாஷாசமிதி** எனும் அறத்தில் அடக்குகிறது. கோபமாகப் பேசுதல் கூடாது என்கிறது. சமணசமயத் துறவி சினமின்மை கொள்கையைக் கடைபிடிக்க வேண்டும். ஆனால் கவுந்தியடிகள், தலைவன் தலைவியை இகழ்ந்த வம்பப்பரத்தையையும் வறுமொழியாளனையும், 'முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகென' (சிலம்பு.நாடுகாண்:232) சபிக்கின்றார். தவமுதல்வி ஆகயால் சாபம் உடனே பலிக்கிறது. இது கண்ணகி – கோவலன் மீது கொண்ட பற்றின் காரணமாகவும் உறவு கொச்சைப்படுத்தப் பட்டதற்காகவும் நிகழ்கிறது. பின்னர், கோவலன் இறந்த செய்தியைக் கேட்ட அடிகள், தவறான நீதி வழங்கிய பாண்டிய மன்னன் மீது சினம் கொள்கின்றார். இதனை நீர்ப்படைக் காதையில் வரும்,

**' தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்றம்**

**நிவந்தோங்கு செங்கோல் நீணில வேந்தன்' (சிலம்பு .நீர்ப்படை : 79 – 80)**

என்ற அடிகளால் உணர இயலும். இவ்விரண்டு இடங்களிலும் தவநிலையையுடைய கவுந்தியடிகள் தவறான செயல்களைக் கண்டு சினம் கொள்வதாகக் காட்டப்பட்டுள்ளார்.

**வீடுபேறடைதல்**

கவுந்தியடிகள் பாசத்தால் வீடுபேறின்றி மண்ணுலகில் உழல்கின்றார். புகார் காண்டத்தில் சாரணர் கூறிய 'பவந்தரு பாசம் கவுந்தி கெடுகென்று' (சிலம்பு . நாடுகாண் : 211) என்ற வாக்கின் மூலம் இளங்கோவடிகள், கவுந்தியடிகள் பாசம் நீங்கப்பெற்றறதாகக் குறிப்பிடுகின்றார். வஞ்சிக்காண்டத்து நீர்ப்படைக்காதையில் இறந்தவர் அனைவரும் மறுபிறவி எடுக்கின்றனர். கவுந்தியடிகள் வடக்கிலிருந்து உயிர்துறந்த பின்னும் மறுபிறவி எடுக்கவில்லை யாதலால் வீடுபேறு அடைந்தார் என்பதை அறியமுடிகிறது.

சிறந்ததொரு குடிமக்கள் காப்பியத்தைப் படைத்தளித்த இளங்கோவடிகள் சமுதாயத்திற்கு அறத்தை எடுத்துரைக்க வழியாக அமைந்தது கவுந்தியடிகளின் படைப்பு ஆகும். சிலம்பில் அறத்தை எடுத்துரைக்க இம்மாந்தர் படைப்பு இவருக்குப் பேருதவி செய்துள்ளது. இன்பதுன்பங்களை ஒன்றாகக் கருதுதல், பெரியோரைப் போற்றுதல், மனம் வாக்கு காயத்தால் மாசுபடாதிருத்தல், கொல்லாமை, கழுவாய்தேடல், துறவுநிலை, யாக்கை நிலையாமை, பிரமசரியம், அவாவறுத்தல், அன்பு பாராட்டல், நாவடக்கல், அடைக்கல அறம் போன்ற அறக்கருத்துக்கள் இம்மாந்தர் படைப்பின் வழியே வெளிப்படுத்தப் பட்டுள்ளன.

**சாரணர்**

சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் சாரணர்கள் அறமுரைக்கும் மாந்தர்களாவர். சாரணர் என்பது சமண முனிவரைக் குறிக்கின்றது. இச்சாரணர் சிலம்பின் நாடுகாண் காதையிலும், அடைக்கலக் காதையிலும் இடம்பெறுகின்றனர். இவர்கள், கவுந்தியடிகளைப் **பந்தம் அறுக** என்று கூறி வழிநடத்துவதும் அருகனை வாழ்த்துவதும் சிலப்பதிகாரத்தில் இடம்பெறுகிறது. மேலும் சாரணர் இயல்பும் அவர்கள் கூறிய அடைக்கல அறங்களும் இடம் பெறுகின்றன.

**சாரணர் இயல்பு**

''சாரணர் எண்வகையினராவர். அஃதாவது தல சாரணர், சல சாரணர், பல சாரணர், புட்ப சாரணர், தந்து சாரணர், சதுரங்குல சாரணர், சங்க சாரணர், ஆகாச சாரணர்''[22] என்பதாகும். சாரணர் விருப்பு, வெறுப்பு அற்றவர். எனவே தான் கவுந்தியடிகளுக்கு ஏற்படவிருக்கும் துன்பத்தை அறிந்தும் வருந்தவில்லை. இதனை,

**‘சிந்தை விளக்கில் தெரிந்தோன் ஆயினும்**

**ஆர்வமும் செற்றமும் அகல நீக்கிய**

**வீரன் ஆகலின் விழுமம் கொள்ளான்’ (சிலம்பு .நாடுகாண்:167-169)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதில் வீரன் என்பது இருவரைச் சுட்டுகிறது. என்றும் இருவராகச் சென்று அறம் போதிப்பதே சாரணர் வழக்கமாகும் என்றும் சிலப்பதிகார உரையாசிரியர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் குறிப்பிடுகின்றார்.

**சாரணர் அறிவுரை**

சாரணர் அவதி ஞானம் உடையவர். எனவே கவுந்தியடிகளுக்கு தீங்கு நேரும் என்பதை அறிந்து, அவர் முன் தோன்றி அறிவுரை வழங்குகின்றனர். சாரணர், ‘ஊழ்வினை உறுத்துவந்தூட்டும். இதனை யாராலும் ஒழிக்க இயலாது. தீவினையை நுகர்ந்தேயாக வேண்டும். விளை நிலத்திலிட்ட வித்து பயன்தருதலை யாராலும் தடுக்க இயலாது. இவ்வாறு நல்வினையை நுகர்வது போலவே தீவினையையும் நுகரவேண்டும். நல்வினை தீவினைப் பயனாகிய இன்பமும் துன்பமும் வருங்கால் அதனை யாவாராலும் ஒழிக்க இயலாது. புயற்காற்றில் வைத்த விளக்குப் போல் உடம்பில் உயிர் நிற்காது’ என்ற யாக்கை நிலையாமை பற்றியும் கவுந்தியடிகளுக்கு எடுத்துக் கூறினர்.

**சாரணர் கூறும் அடைக்கல அறம்**

சமணசமயத்தில் ஒழுக்கம், கல்வி ஆகியவற்றிற்கு கொடுக்கப்படும் இடம் அடைக்கலத்திற்கும் கொடுக்கப்படுகிறது. அடைக்கல அறத்தை வலியுறுத்த சாரணர் சாயலன் கதையைக் கூறுகின்றார். சாயலன், ஒரு குரங்கை அடைக்கலமாகப் பெற்று பாதுகாத்ததனால், அவனும் மனைவியும் தேவருலகை அடைந்தனர். இங்கு சாரணர் முன், குரங்குக்கை வானவன் எடுத்துக்கூறுவதன் மூலம் அடைக்கல அறம் கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரம் சமண சமயத்தைப் பற்றி அதிகம் பேசுவதால் சாரணர் பற்றியும் ஆங்காங்கு எடுத்துக்கூறப்படுவதோடு அதன் வழி அடைக்கலம் எனும் சமண அறமும் போதிக்கப்படுகிறது. சாரணர் அறத்தை எடுத்துரைக்கும் மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளார்.

**மாடலமறையோன்**

இளங்கோவடிகள் சமயப்பொதுமையுடையவர் என்பதை உணர்த்த இம்மாந்தர் படைப்பு கவுந்தியடிகளுக்கு இணையாகப் படைக்கப்பட்டுள்ளது. மாடலமறையோன் சைவ சமயத்துறவியாவார். எனினும் சிலப்பதிகாரத்தில் பெரும்பான்மை சமண சமயக் கருத்துக்கள் இடம் பெறுகின்றன. சிலப்பதிகாரத்தில் மாடல மறையோன் அறமுரைக்கும்

மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளார். இவர் அடைக்கலக்காதை, நீர்ப்படைக்காதை, நடுகற்காதை, வரந்தரு காதை ஆகிய நான்கு காதைகளில் இடம்பெறுகின்றார்.எனினும் காப்பியம் முழுமையும் ஒருங்கிணைக்கும் தன்மையுடைய மாந்தர் படைப்பாக விளங்குகின்றார்.

**மாடலமறையோன் வரலாறு**

அடைக்கலக் காதையில் மாடலன், கோவலனின் இம்மை நல்வினைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கோவலனைப் பற்றிக்குறிப்பிடுகையில் மறையோனை யானையிடமிருந்து மீட்ட கருணை மறவர் என்றும் கணவனால் துறக்கப்பட்ட பார்ப்பனியின் துயர்தீர்த்த செல்லாச் செல்வன் என்றும், சதுக்கபூதத்தால் கொல்லப்பட்டவனின் உறவினர்களைக் காப்பாற்றிய இல்லோர் செம்மல் என்றும் கூறி, அவனது வறிய நிலைக்கு மாடலன் வருந்துகின்றார்.

நீர்ப்படைக்காதையில், மாடலன் கங்கையாடி வரும்போது சேரனைக் கண்டு, கோவலன் வரலாற்றையும், அவன் கொலையுண்டது, அதனைக் கேட்ட கோவலன் கண்ணகி தந்தையர் துறவு பூண்டது, அவர்களது தாயர் இறந்தது, மாதரி தீ புக்கது, கவுந்தியடிகள் வடக்கிருந்து உயிர் துறந்தது, நெடுஞ்செழியன் துஞ்சியபின் கொற்கையிருந்த வெற்றிவேற் செழியன் பாண்டியநாட்டை ஆட்சி செய்து வரும் செய்திகள் அனைத்தையும் சேரனுக்குக் கூறுகின்றார். நடுகற்காதையில் மாடலன் சேரனுக்கு அறத்தை உரைக்கின்றார். சேரனது போர்வெறியைக் குறைத்து வீட்டுலகை அடைய வழி சொல்கின்றார். இளமை, யாக்கை, செல்வம், உயிர் ஆகியவற்றின் நிலையில்லாத் தன்மையையும், வீட்டுலகை அடைய வேள்வி செய்ய வேண்டுமென்று கூறி அரசனை வழிநடத்துகின்றார்.

வரந்தரு காதையில் மாடலன் மறுபிறப்புத் தத்துவத்தைப் போதிக்கின்றார். தேவந்தி தெய்வமுற்று ஆடி, மாடலன் கையில் உள்ள கரகநீரை சிறுமியர் மீது தெளிக்கின்றாள். அரட்டன் செட்டியின் மகள்களாக கோவலன் – கண்ணகியின் தாயர் மறுபிறப்பு எடுத்திருப்பதும், மாதரி சேடக்குடும்பியின் மகளாகப் பிறந்திருப்பதும் மாடலன் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது. இவ்வாறு மாடலமறையோனின் மாந்தர்படைப்பு சிலம்பில் இடம்பெறுகிறது.

**மாடலமறையோன் புறத்தோற்றம்**

மாடலன் ஒரு சைவ சமயத் துறவியாவார். இவரை அந்தணர் என்று ஆசிரியர் சுட்டுகிறார். இதற்கு ‘‘சிலப்பதிகாரத்தில் அந்தணர்கள், பார்ப்பார், நான்மறையாளர்,

இருபிறப்பாளர், உயர் பிறப்பாளர் முதலிய பல பெயர்களால் அழைக்கப்படுகின்றனர். அந்தணனான மாடலமறையோன் என்பான், மாமுது மறையோன், மாமறை முதல்வன், மாமறையாளன், அருமறை முதல்வன், மங்கல மறையோன் என அழைக்கப்படுகிறான்'' [23] என்ற அடிகள் சான்றுபகரும். சைவ சமய அந்தணத் துறவியர் சடைமுடியையும், மார்பில் முப்புரி நூலையும், கையில் முக்கோலையும் கொண்டவராவர். ''அந்தணத் துறவியரின் புறத்தோற்றம் பற்றிக் கூறுங்கால், சடைமுடியையும், ஈரம் புலராத ஆடையையும், முப்புரி நூலினையும் உடையவர்கள் என்பதைச் சிலப்பதிகாரம்,

**'புன்மயிர்ச் சடைமுடி புலரா உடுக்கை**
**முந்நூல் மார்பின் முத்தீச் செல்வத்து**
**இருபிறப் பாளர்'**

என்ற வரிகளில் புலப்படுத்தும். திருமுருகாற்றுப்படையிலும் இதே கோலம் அந்தணர் கோலமாகக் கூறப்படுகிறது.''[24]

**'இருபிறப் பாளர், பொழுது அறிந்து நுவல**
**ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்,**
**புலராக் காழகம் புலர உடீஇ' (திருமுருகாற்றுப்படை : 182 – 184)**

என்ற அடிகள் அந்தணர் தோற்றத்தையைக் குறிக்கின்றன. இத்தகைய தோற்றத்தை உடைய மாடலன் கடலை வேலியாக உடைய தலைச் செங்கானம் என்றும் ஊரைச் சார்ந்தவர். மாடலனை,

**'நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை**
**மாமறை முதல்வன் மாடலன் என்பேன்' (சிலம்பு . அடைக்க : 12 – 13)**

என்று நான்கு வேதங்களையும் முற்ற உணர்ந்த நன்மையை விரும்பிய கோட்பாட்டினையுடைய, மறையவர் தலைவன் என்பதாக இளங்கோவடிகள் அறிமுகம் செய்கின்றார். இந்த அறிமுகத் தொடர் மாடலனின் பெருமையைச் சுட்டுவதாய் அமைகிறது. மாடலன், ஈரம் புலராத ஆடையையும், முப்புரி நூலையும், சடை முடியையும் கொண்டவராய், உள்ளத்தில் தூயவராய் விளங்குகின்றார்.

**மாடலன் கூறும் அறங்கள்**

மாடலன் அறத்தை சமுதாயத்திற்கு கூறும் முகத்தான் பலவித அறங்களைக் குறிப்பிடுகின்றார். அவரது தோற்றம் ஏற்படுத்திய மரியாதை, அவரது சொல்லிலும் இருக்கக் கூடும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது. இந்நிலையில் மாடலன் கூறும் அறக்கருத்துக்கள் ஏற்கத்தக்கவையாய் அமைகின்றன. சிலப்பதிகாரத்தில்

கவுந்தியடிகளுக்கு இணையான மதிப்புடைய மாந்தர் படைப்பு மாடலன் ஆவார். மாடலன் அறத்தைக் கூறும் மாந்தர் என்பதை நடுகற்காதை, அடைக்கலக்காதை, நடுகற்காதை, வரந்தரு காதைகள் மூலம் அறியமுடிகிறது. இவர் அறவேள்வி, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை, வீடுபேறு போன்ற அறச்செயல்கள் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

**அறவேள்வி**

உடல், உயிர், இளமை, செல்வம் யாவையும் நிலையற்றது. எனவே இவற்றை ஓம்புதல் தவிர்த்து அறவேள்வி செய்தல் நன்மை பயக்கும் என்பதை மாடலன் சேரமன்னனுக்கு அறிவுறுத்துகின்றார். சிலம்பில்,

**‘ வையங் காவல் பூண்டநின் நல்யாண்டு**
**ஐயைந் திரட்டி சென்றதற் பின்னும்**
**அறக்கள வேள்வி செய்யா தியாங்கனும்**
**மறக்கள வேள்வி செய்வோ யாயினை’ (சிலம்பு . நடுகற் : 129 – 32)**

என்ற அடிகள் சேரமன்னன் ஐம்பது வயதைக் கடந்தபின்னும் அறக்களவேள்வி செய்யாது, மறக்கள வேள்வி செய்வதாக மாடலன் இடித்துரைப்பதை உணர்த்துகின்றன. “இந்து சமயம், நூறு ஆண்டுகளை முழு வாழ்க்கையாக் கருத்தில் கொண்டு முதல் இருபத்தைந்து ஆண்டுகள் மாணவ நிலையாகவும் அடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் இல்வாழ்க்கை நிலையாகவும், அதற்குஅடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் காட்டு வாழ்வு நிலையாகவும், இறுதி இருப்தைந்து ஆண்டுகள் துறவு நிலையாகவும் பிரிக்கிறது.”[25] இதனை நோக்க ஐம்பது வயதைக் கடந்த சேரமன்னன் காட்டு வாழ்க்கையாவது வாழ்ந்திருக்க வேண்டும். ஆனால் உயிர்களைக் கொன்று குவிக்கும் போர்களைச் செய்து கொண்டிருக்கிறார். இதனைத் தடுக்க மாடலன், சேர மன்னனின் அகவையை எடுத்துக்காட்டி அறவேள்வி செய்யுமாறு வலியுறுத்துகிறார். மேலும்,

**‘வானவர் போற்றும் வழிநினக் கழிக்கும்**
**நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பான்**
**அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய**
**பெருநல் வேள்வி நீ செயல் வேண்டும்’ (சிலம்பு . நடுகற் : 175 – 78)**

என்று அரசர்கள் அறவேள்வி செய்யும் முறையையும் வலியுறுத்துகின்றார். விண்ணவர் புகழும் வீட்டு நெறியினைப் பெற, நான்கு வேதங்களிலும் கூறப்படும் வேள்வியினைச் செய்யும் அந்தணற் அறவேள்வியைச் செய்ய வேண்டுமாய்க் கூறுகின்றார். அரசர்களுக்குரிய வேள்வியாக இராசசூயம், பரி–வேள்வி, துரங்க வேள்வி

போன்றவற்றைக் குறிப்பர். இவ்வேள்விகளைச் செய்தால் வீடுபேற்றை அடைய முடியும் என்ற அறத்தை மாடலன் எடுத்துரைக்கின்றார். இவ்வேள்விகள் மூலம் மக்களுக்கும் நன்மை விளைகிறது. வேள்வி நாட்களில் குடிமக்களுக்கு பரிசுப்பொருட்களை அளிக்கின்றனர். இத்தகைய அறவேள்விகளும் அறத்தின் பாற்பட்டதேயாகும்.

**யாக்கை நிலையாமை**

"ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே
உதிரப் புனலிலே உண்டை சேர்த்தே
வாய்த்த குயவனார் பண்ணு பாண்டம்
வரை ஓட்டுக்கும் ஆகாதென்று ஆடுபாம்பே" [26]

என்ற பாம்பாட்டிச்சித்தரின் பாடல் யாக்கை நிலையாமையைக் குறிப்பிடுகிறது. தசையும் இரத்தமும் சேர்ந்த இவ்வுடல் இப்புவியில் நிலைப்பது சிறிது காலமே. அதற்குள் நன்மைகளைச் செய்யவேண்டும். மாடலன், சேரமன்னனுக்கு யாக்கை நிலையாமையைக் கூறும் முகத்தான், அவனது முன்னோர்களின் செயல்களைக் குறிப்பிடுகின்றார்.

❖ ஒரு சேரமன்னன் கடலிடத்து சென்று பகைவர்களின் காவல் மரமாகிய கடம்பமரத்தை வெட்டினான்.

❖ குடக்கோச் சேரலாதன் இமயத்தில் வில்லினைப் பொறித்தான். இதனை,

**'குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன்'** **(மணி . 28 : 103 – 104)**

என்று மணிமேகலையும் சுட்டுகிறது.

❖ பாலைக்கௌதமனாரையும் அவர் மனைவியையும் உடலோடு துறக்கம் புக பல்யானைச் செல்கெழுகுட்டுவன் உதவினான். இச்செய்தியை பதிற்றுப்பத்து 3–ஆம் பதிகமும் குறிப்பிடுகிறது.

❖ சோம யாகத்தை சோமயாஜி மன்னன் செய்தான். " ஸோம யாகம் எல்லாராலும் செய்து கொண்டாட முடியாத ஒன்று... இது தேவதைகளுக்கும் புரோகிதர்களுக்கும் சோமரசம் அருந்தும் பொதுத்திருவிழாவாக இருந்து வந்துள்ளது... இதில் சோமரசம் காலையில், பகலில், மாலையில் என்று ஒரு நாளில் மூன்று தடவை பிழியப்படும். இரவு முழுவதும் யாகம் செய்யப்படும். இது ஓர் அசாதாரணமான யாகமாகச் சொல்லப்படுகிறது. மிகவும் வசதிபடைத்தவர் செய்யும் யாகம் இது. தேவதைகளுக்குக் குறிப்பிட்ட ஒழுங்கில் சோமரசம் பிழிந்தே வழங்கப்பட வேண்டும்." [27]

இவ்வாறு பல்வேறு வகையில் புகழ்பெற்ற மன்னர்கள் எவரும் இன்று இல்லை. எனவே யாக்கை நிலையில்லாதது என்பதை உணர வேண்டும் என்பதாக யாக்கை நிலையாமைக் கருத்துக்கள் சிலம்பில் கூறப்பட்டுள்ளன. இக்கருத்து மாடலன் வழியாக உணர்த்தப்பட்டுள்ளது.

**செல்வம் நிலையாமை**

வேதநாயகம் பிள்ளையவர்கள் நீதிநூலில் செல்வ நிலையாமை பற்றி,

**'ஒப்பருநற் குணத்தவர்குங் கொலைகாமங்**

**கட்களவை யுபதே சிக்கும்**

**அப்பனாய் நட்பினர்க்குப் பகை விளைகுஞ்**

**சத்துருவா யகிலத் துற்ற**

**செப்பரிய துயர்கெல்லா மாதாவாய்த்**

**தீவினைக்கோர் செவிலி யாய**

**இப்பொருளை நற்பொருளென் றெப்படிநீ**

**யொப்புகின்றா யேழை நெஞ்சே' (நீதி நூல் . அதிகாரம் : 39 – 2)**

என்று உருவக முறையில் விளக்குகின்றார். சிறந்த பண்புகளையுடையோருக்கும் கொலை, காமம், கள், களவு முதலிய பெருந்தீமைகளைச் சொல்லிக் கொடுக்கும் தந்தையாய், நண்பர்களுக்குள் பகையை விளைவிக்கும் மாற்றானாய், சொல்ல முடியாத உலகியல் துன்பங்களுக்கெல்லாம் அன்னையாய், கொடுஞ் செயல்களுக்கு எல்லாம் வளர்ப்புத் தாயாய் இருக்கும் பொருளானது நற்பொருள் அல்ல என்று செல்வ நிலையாமையைச் சுட்டுகின்றார். சிலம்பில் மாடலனும் இக்கருத்தை வலியுறுத்துகின்றார். ஆரிய மன்னர்கள் செல்வச் செருக்கால் தமிழ் நாட்டு வேந்தர்களை எள்ளி நகையாடினர். அதன் பொருட்டு சேரன் படையெடுத்துச் சென்று கனகவிசயரைத் தோற்கடித்தான். இதனை,

**'மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கில்**

**செல்வம் நில்லா தென்பதை வெல்போர்த்**

**தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரின்**

**கண்டனை யல்லையோ காவல் வேந்தே' (சிலம்பு . நடுகற் : 151–54)**

என்று மாடலன் குறிப்பிடுகின்றார். அன்று செல்வந்தர்களாய் வாழந்த ஆரிய மன்னர்கள் இன்று அடிமையாய் வாழ்கின்றனர். எனவே செல்வம் நில்லாது. இவ்வறத்தை வலியுறுத்துவதாய் மாடலன் சொல் அமைகிறது.

**இளமை நிலையாமை**

நாலடியார், பழங்கள் உதிராமல் இருக்க காய் உதிர்ந்து விடுவது போல, வயதானவர் இருக்க வாலிபர் இறந்து படுவதும் உண்டு என்று கூறுகிறது. இதனை,

**'முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்**

**நற்காய் உதிர்தலும் உண்டு' (நாலடியார் . 19)**

என்ற அடிகள் உணர்த்தும். தலை நரைத்து கிழப்பருவம் எய்தி, தண்டை ஊன்றி நடக்கும் நிலையும் ஏற்படும் என்றும் இளமை நிலையாமை பற்றி நாலடியார் சுட்டுகிறது. இளமை நிலையில்லாதது என்பது உலகம் அறிந்தது. நரை கூடிக் கிழப்பருவம் எய்துதல் என்பது இளமை நிலையாமையைச் சுட்டுகிறது.

**'இளமை நில்லா தென்பதை எடுத்தீங்கு**

**உணர்வுடை மாக்கள் உரைக்க வேண்டா**

**திருஞெமிர் அகலத்துச் செங்கோல் வேந்தே**

**நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை' (சிலம்பு . நடுகற் : 155 – 158)**

என்று சேர மன்னன் கிழப்பருவம் எய்தியதைச் சுட்டிக்காட்டி இளமை நிலையாமையை மாடலன் குறிப்பிடுகிறார்.

**உயிர் நிலையாமை**

யாக்கை, செல்வம், இளமை நிலையாமை பற்றிய கருத்துக்கள் அதிகமாக அறநூல்களில் பேசப்படுகின்றன. இங்கு மாடலன் உயிர் நிலையாமை பற்றியும் குறிப்பிடுகின்றார். உயிர் நிலையாமையை **மறுபிறவிக்கொள்கை** என்று குறிப்பிட இடமுண்டு. இதனை,

**'விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்**

**மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்**

**மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்**

**மிக்கோய் விலங்கின் எய்தினும் எய்தும்**

**விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்**

**கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்**

**ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்**

**கூடிய கோலத் தொருங்குநின் றியலாது**

**செய்வினை வழித்தாய் உயிர்செலு மென்பது**

**பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்' (சிலம்பு.நடுகற்:150–169)**

என்று உயிர் செல்லும் வழி குறித்து மாடலன் குறிப்பிடுகின்றார். ஈங்கு,

- ❖ தேவ வடிவத்தோடு உயிர் துறக்கம் புகும்.
- ❖ துறக்கம் சென்ற உயிர் மீண்டும் மண்ணிலே பிறக்கும்
- ❖ மன்னனின் உயிர் விலங்கின் உடலிலே புகும்.
- ❖ விலங்கின் உயிர் நரகரது உடலைச் சேரும்

என்ற மறுபிறவிக் கொள்கைகள் மொழியப்பட்டுள்ளன. அறவழிச் செல்லா உயிர், **தேவன் → மனிதன் → விலங்கு → நரகர்** என்ற அடிப்படையில் கீழ்நிலையடையும். அறநெறிச்சென்ற உயிர் மேல்நிலை அடைதலும் உண்டு.

கூத்தர்கள் கூத்தினுக்கேற்ப வடிவம் மாறுதல் போல உயிரும் ஓரிடத்தில் நில்லாது தனது உருவத்தை மாற்றிக் கொண்டே இருக்கும். உயிர் சாரும் உடலுக்கேற்ப அதன் குணங்களும் மாறுபடும். எனவே உயிரும் நிலையில்லாதது என்ற சிறப்புக் கருத்தை முன்மொழிகின்றார். இம்மறுபிறவிக் கொள்கை வரந்தரு காதையிலும் வலியுறுத்தப்படுகிறது. கண்ணகி – கோவலனின் தாயர் அறச்செயல் ஏதும் செய்யவில்லையென்னும், நன்மனம் காரணமாக மறுப்பிறப்பில் அரட்டன் செட்டியின் மக்களாகப் பிறக்கின்றனர். ஆயர்குல மகள் மாதவியும் நன்மனம் காரணமாகவும், திருமாலைக் குரவையாடி வழிபட்டதன் காரணமாகவும் திருமாலுக்குச் சேவை செய்யும் சேடக்குடும்பியின் மகளாய்ப் பிறக்கின்றார். கோவலன் கருணை மறவனாக, இல்லோர்ச் செம்மலாக, செல்லாச் செல்வனாக விளங்கினமையின் வானோர் உலகையடைகின்றான்.

**‘ நற்றிறம் புரிந்தோர் பொற்படி யெய்தலும்**
**அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்**
**அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்**
**பிறந்தவ ரிறத்தலும் இறந்தவர் பிறத்தலும்**
**புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை’ (சிலம்பு . வரந்தரு : 136 – 140)**

என்று மறுபிறவிக்கு கொள்கை குறிக்கப்பட்டுள்ளது.

‘நல்ல அறத்தின் வகைகளை விரும்பிச் செய்தோர் பொன்னுலகம் அடைதலும், ஒருவர்பால் அன்புமிக்க உள்ளமுடையார் இந்நிலத்து தாம் அன்பு வைத்த இடத்தே பிறத்தலும், ஒருவர் செய்த அறத்தின் நற்பயன் அவருக்கு உண்டாதலும், பாவத்தின் தீப்பயன் உண்டாதலும், இவ்வுலகிடைத் தோன்றியோர் மறைதலும் மறைத்தோர் தோன்றுதலும் புதியனவல்ல. படைப்புக் காலம் தொட்டே நிகழும் வழக்காகும்’ என்று மாடலன் விளக்குகின்றார். இவற்றின் அடிப்படையில் மறுபிறவிக் கொள்கைகளாக,

1. அறம் செய்த உயிர் துறக்கத்தை அடையும்.
2. அறம் செய்யா உயிர் நரகத்தை அடையும்.
3. அன்பு கொண்ட உயிர் அவ்விடத்தைச் சாரும்.

4. நன்மை செய்தாருக்கு நற்பயன் உண்டு.
5. தீமை செய்தாருக்குத் தீப்பயன் உண்டு.
6. பிறந்தவர் இறப்பர்.
7. இறந்தவர் பிறப்பர்.

என்ற ஏழினையும் பெற முடிகிறது.

**அன்றே செய் ! நன்றே செய்!**

மாடலன், சேரனுக்கு வீடுபேறு பற்றிக் குறிப்பிடுகின்றார். அறஞ் செய்த உயிர், பாவம் செய்த உயிர் போகும் வழியான நரககதியை அடையாது. துறக்கத்தையே அடையும். அரசனும் துறக்கத்தை அடையவேண்டி வேள்வி செய்யுமாறு வேண்டுகிறார். இவ்வறச் செயல்களும் வேள்விகளும் அன்றே செய்ய வேண்டு என்றும் வலியுறுத்திகின்றார். ஏனெனில்,

**‘ நாளைச் செய்குவம் அறமெனில் இன்றே**
**கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கும்.’ (சிலம்பு . நடுகற் : 179 – 180)**

என்று உயிர் இன்று போயின், நாளை அறம் செய இயலாது என்பதைக் குறிப்பிட்டு நற்செயல்களை அன்றே செய்ய மாடலன் வலியுறுத்துகின்றார்.

**நாவன்மை**

மாடலன் என்னும் படைப்பின் மூலம் சமுதாயத்திற்கு அறவேள்வி, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, உயிர்நிலையாமை, வீடுபேறு போன்ற பல அறச்செய்திகள் கூறப்பட்டன. மேலும் மாடல மறையோனின் நாவன்மையும், குறிப்பறியும் திறனும் சமுதாய மக்களின் நடத்தையை வலியுறுத்துவதாகவும், இளங்கோவடிகளின் கூரிய அறிவை, படைப்புத்திறனை வெளிப்படுத்துவதாகவும் அமைக்கின்றன. கம்பராமாயணத்தில் அனுமனைச் **சொல்லின் செல்வர்** என்பர். அது போன்று சிலம்பில் மாடலனைச் **சொல்லின் செல்வர்** என்றும் **சொல் வல்ல மறையோன்** என்றும் சுட்ட முடியும்.

**‘ சொல்லுக செல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை**
**வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து’ (குறள் . 645)**

என்பது வள்ளுவர் கூற்று. ஒரு சொல்லை வெல்லும் சொல் வேறு இருக்கக் கூடாது. இதுபோன்றே மாடலனது சொற்களுக்கு நிகராக வேறு சொற்களைக்கூற இயலாது. மாடலன், சேரமன்னனுக்கு அறிவுரை வழங்கும் முகத்தான் நிலையாமை கருத்துக்களைக்

கூறவிழைகின்றார். அப்போது நீ இறந்துபடுவாய் என்று நேரடியாகக் கூறவில்லை. அது அறவோனுக்கு அழகுமல்ல. எனவே,

**'மண்ணாள் வேந்தே நின்வா ணாட்கள்**

**தண்ணால் பொருநை மணலினுஞ் சிறக்க' (சிலம்பு . நடுகற் : 125 – 126)**

என்று சேர மன்னன் ஆன்பொருநை ஆற்று மணலின் எண்ணிக்கையை விட பலநூறு ஆண்டுகள் நன்று வாழ வேண்டும் என்று முதலில் வாழ்த்துகின்றார். பின்னர் உடல் நிலையாமை, உயிர் நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை பற்றிக்குறிப்பிடுகின்றார். இது மாடலனின் சொல்வன்மையைக் காட்டுகிறது. இரண்டாவதாக மாடலனின் சொல்வன்மைக்கு சேர மன்னனிடம் கதை கூறியமையைச் சுட்டலாம். கோவலன் இறப்பு, கண்ணகியின் வழக்கு, அதன் மூலம் பாண்டிய நாடு தீக்கிரையாகியது போன்ற மதுரைக்காண்டத்துச் செய்திகள் சேரனுக்கு சாத்தனாரால் சொல்லப்பட்டது. எனவே சிலம்பின் முழுக்கதையும் சாத்தனாரால் சேரனுக்குக் கூறப்படவில்லை என்பது தெளிவு. மணிமேகலை கதையின் மூலம் புகார் காண்டத்துச் செய்திகளையும் சேர்த்து முழுக்கதையையும் சேரமன்னனுக்குக் கூறியவர் மாடலனேயாவார். அதனை,

**'வாழ்க வெங்கோ மாதவி மடந்தை**

**கானற் பாணி கனக விசயர்தம்**

**முடித்தலை நெரித்தது' (சிலம்பு . நீர்ப்படை : 49 – 51)**

என்ற அடிகள் விளக்கும். மாதவியின் கானல்வரிப் பாடல் கனகவிசயர் முடி இடிக்கக் காரணம் என்று மாடலன் கூறினார். இஃதும் மாடலனின் சொல்வன்மைக்கு எடுத்துக்காட்டாகும். மாதவியைப் பற்றி மன்னன் அறிந்திலன். "அறியாத செய்தியின் மேல் மாடலன் ஆர்வத்தை ஏற்படுத்தியதாக குடிமக்கள் காப்பியத்தில் தெ.பொ.மீ சுட்டுவார்."[28] மாடலன் சேரனுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தி அதன் மூலம் புகார் காண்டத்துச் செய்திகளையும் மதுரைக்காண்டத்துச் செய்திகளையும் ஒருங்கே எடுத்துரைக்கின்றார். மூன்றாவதாக மாடலனின் நாவன்மைக்கு நடுகற்காதையில் அந்தணர் கொண்டு வேள்வி செய்யுமாறு கூறிய செய்தி சான்றாக அமைகிறது. இதனை,

**'நான்மறை மருங்கின் வேள்விப் பார்ப்பான்**

**... ... ... ...**

**பெருநல் வேள்வி நீ செயல் வேண்டும்' (சிலம்பு . நடுகற்: 176 – 178)**

என்ற அடிகள் உணர்த்தும். மாடலன் அந்தணர் என்பதால், பொருளீட்டும் வேட்கையிலே அந்தணர்கொண்டு வேள்வி செய்யக் கூறினாரோ என்ற ஐயம் எழல் இயல்பு. அதனைப் போக்கும் முகத்தான் மாடலனே, 'அரும்பொருட் பரிசிலேன் அல்லேன்'

(சிலம்பு . நடுகற் : 171) என்று கூறிய பின்னரே அறவேள்வி செய்ய வலியுறுத்துகின்றார். இவற்றின் மூலம் மாடலனின் நாவன்மை மட்டுமின்றி மாடலனின் அறம்போற்றும் தன்மையும் இளங்கோவடிகளின் படைப்புத்திறனும் வெளிப்படுகிறது.

**மாடலன் உயர்வு**

சிலம்பின் அனைத்து மாந்தர் படைப்பும் சிறப்பிடம் பெறுகின்றன. இதில் மாடலமறையோன் அறவோர் என்ற நிலையில் முதன்மை பெறுகின்றார். கவுந்தியடிகளிடம் சிற்சில குறைகள் உண்டு. ஆனால் மாடலனிடம் அத்தகைய குறையேதும் இல்லை. ''மாடல மறையோன் சொல்லின் செல்வனாக விளங்குகிறான். காப்பிய நிகழ்ச்சிகளை இணைக்கிற பாத்திரமாக வருகின்றான்; ஊழின் பெருவலி யுணர்ந்தோனாகவும் அறிவுரை பகரும் ஆசானாகவும் நடமாடுகிறான். கண்ணகியின் புகழ்பாட கவுந்தி என்றால் கோவலன் புகழ்பாட மாடலன் படைக்கப்பட்டுள்ளான்'' என்ற திறனாய்வுக் கருத்துக்கள் உண்மையானவை.

மாடலன் அறத்தை உரைக்கும் மாந்தராய் சிலம்பில் இடம் பெறுகின்றார். கவுந்தியடிகள் போன்ற புறச்சமயிகளும் மாடலனை மதித்துள்ளனர். மூவேந்தர்களிடமும் அன்பும் மரியாதையும் மிக்கவராய்த் திகழ்ந்துள்ளார். இவரது அறிவின் திறத்தை நோக்கி சேரமன்னன், தன் எடைக்குச் சமமான பொன்னை ஈந்தலின் திறம் பெறப்படுகிறது. மக்களிடம் மட்டுமின்றி தெய்வத்திடமும் தொடர்புடையவர். பாசண்ட சாத்தன் கரகநீரை மாடலன் கையகப்படுத்தும் காட்சியின்றி கதை நிகழ்ந்திருக்க முடியும். எனினும் மாடலனை உயர்த்தும் பொருட்டு அக்காட்சி சிலம்பில் இடம்பெறுகின்றது.

மூன்று காண்டங்களுக்கிடையே ஓர் இணைப்புப் பாலமாக மாடலன் திகழ்கின்றார். ''மாடலனை தெ.பொ.மீ. அறவணவடிகளோடு ஒப்ப நோக்குவார்.''[30] இத்தகைய சிறப்புக்குக் காரணம் மாடலன் சைவ சமயத்தவராய் இருந்தபோதும் சமயம் பற்றிக் குறிப்பிடவில்லை. புலவர்கள் செவியறிவுறுத்துவது போல அறங்களை வலியுறுத்துகிறார். மேலும் இவர், சமயத்தைவிட அறமே வீடுபேற்றுக்கான வழி என்பதை நன்குணர்ந்தவராகவும், கவுந்தியடிகளும், மாங்காட்டுமறையோனிடம் காணாத உயர்வை மாடல மறையோனிடம் காண்பதாகவும் இளங்கோவடிகள் இம்மாந்தர் படைப்பை அமைத்துள்ளார்.

**கண்ணகி**

சிலப்பதிகாரத்தின் கதைத் தலைவி கண்ணகி ஆவாள். இவள் அறவழியில் வாழ்ந்த மாந்தர் ஆவாள். தன்னளவில் அடங்கி இருத்தல் தன்னடக்கம் ஆகும். கண்,

செவி, மூக்கு, வாய், மெய் என்னும் ஐம்புலனும் அடங்கி இருத்தல் வேண்டும் என்றும் சமணசமயம் கூறுகிறது. தீயவற்றைப் பார்க்காது, கேட்காது, பேசாது, நுகராது, தீண்டாது இருக்கும் அடக்கமுடையவளாகச் சிலப்பதிகாரத் தலைவி கண்ணகி படைக்கப்பட்டுள்ளாள்.

**கண்ணகியின் கற்புத்திறம்**

ஒரு மாந்தரை மற்றைய மாந்தர்கள் புகழும் போது தான் அதன் உயர்வு புலப்படும். ஏதுமறியா சிறு பெண்ணாக அறிமுகப்படுத்தப்படும் கண்ணகி அடக்கத்தை அணிகலனாகக் கொண்டமையின், வானத்து மீன்கள் மட்டுமே அவளது ஒப்புமைக்கு உரியதாகின்றன. 'தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்' (சிலம்பு . மங்கல : 26) என்றும், 'சாலியொருமீன் தகையாளை' (சிலம்பு . மங்கல : 21 ) என்றும், 'அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை' (சிலம்பு . மங்கல : 63 ) என்றும் வானத்தில் உள்ள வடமீன், சாலி, அருந்ததி போன்ற விண்மீன்களுக்கு நிகராக கண்ணகியின் கற்பு பேசப்படுகிறது.

ஒரு பெண்ணை அறிமுகப்படுத்தும் போது அவளது வடிவும் ஆடை அணிகலன்களும் வருணிக்கப்படுதல் இயல்பு. ஆனால் கண்ணகியின் அறிமுகமோ அவளது கற்புத்திறத்திலும் அடக்கத்திலும் தொடங்குகிறது.

**'போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்**
**தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்**
**மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்**
**காதலாள்பெயர் மன்னுங்கண்ணகி யென்பாள் மன்னோ' (சிலம்பு.மங்கல:25-29)**

என்று கூறப்படுகிறது. திருமகளை ஒத்தவள் . புகழை வடிவாகக் கொண்டவள். வடமீனின் கற்புத் திறத்தை உடையவள். மாதர்கள் தொழும் சிறப்பு வாய்ந்த குணமுடையவள். மற்றைய பெண்கள் தொழத்தக்க உயர் குணம் உடையவள் என்றெல்லாம் உயர்த்தப்படுகிறாள். கண்ணகி, கணவனுக்குத் தொண்டு செய்வதை இல்லறக் கடமையாகக் கொண்டவள். கோவலனின் தாய், தன் மகளைத் தனிக்குடித்தனம் அமர்த்துகின்றாள். இஃது கண்ணகி தன்னைப் போலவே தன் மகனைக் கவனித்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் எடுக்கப்பட்ட முடிவாகும். கோவலன் - கண்ணகி இணைந்து அறப்பரிகாரம் பலசெய்து வாழ்ந்தனர். இச்சூழலில் சிலகாரணங்களினால் மாதவியுடன் காதல் கொண்டு கண்ணகியைக் கோவலன் பிரிகின்றான். அப்போது கண்ணகி இருந்த நிலையை,

**‘அஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்**
**கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்**
**மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்**
**கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்**
**திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்**
**பவள வாணுதல் திலகம் இழப்பத்**
**தவள வாணகை கோவலன் இழப்ப**
**மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்’(சிலம்பு.அந்திமாலை:47-56)**

என அடிகள் சுட்டுகிறார். ஒருவரின் மனநிலையை அவரது முகமட்டுமன்று ஆடையும் அணிகலனும் கூட எடுத்துக்காட்டவல்லன. கண்ணகி, கணவன் அருகில் இல்லையென்பதால் மகிழ்ச்சியும் தன்னருகில் வரக்கூடாது என்பதற்காக அணிகலன்களைத் துறந்து தன்னை அடக்கிக் கொண்டாள். கால்களில் சிலம்பின்றி, இடையில் மேகலையின்றி, காதில் குழையின்றி, மங்கலவணியன்றி பிறிதணியணியாமல், கண்களில் மையின்றி, இதழ்களில் சாயமின்றி, நெற்றியில் குங்குமமின்றி, கூந்தலில் நெய்யணியின்றி, முறுவலைக் கூட மறந்து தன்னிலையில் அடங்கியிருந்தாள். இக்கோலம் அவள் மனதை அடக்கவும் உதவக்கூடியதாகும்.

**குலப்பெருமை**

கண்ணகியின் தோழி தேவந்தி, சூரியகுண்டம், சோமகுண்டம் ஆகியவற்றில் நீராடினால் துன்பம் போகும் என்றழைத்தும் அது குலப் பெருமையன்று என்று வரமறுத்தாள். கணவனின்றி வெளிச்செல்வதைவிட மனையில் தன்னடக்கத்தோடு இருத்தலே பெருமை என்பது கண்ணகியின் கருத்து. ஆனால் வான்பொருள் தொலைத்த கணவன் வா என்றவுடன் எதிர் மொழிதலின்று உடன் சென்றாள்.

**நாவடக்கம்**

கணவன், மாற்றானிடம் வான்பொருள் தொலைத்த போதும் எஞ்சிய சிலம்புகளையும் இன்முகத்தோடு,

**‘நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்**
**சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்’ (சிலம்பு . கனாத் : 73 – 74)**

எனக் கண்ணகி கொடுத்தாள். பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்ட சங்கத்தலைவர்களை தலைவியர் பல மொழிகளில் ஏசியுள்ளனர். ஊடல் கொண்டு தலைவர்களைத்

தவிர்த்தபோது விருந்துடன் வந்து ஊடல் தனிவித்ததாய் இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் கண்ணகி, கோவலனை ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. மேலும் தன்னிடம் மீதமிருந்த சிலம்புகளையும் கொடுக்க முன்வந்தாள்.

**'யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**

**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு' (குறள் . 127)**

என்பது குறள். நாவடக்கம் இன்றேல் சொற்குற்றம் ஏற்பட்டுத் துன்பப்பட நேரிடும் என்பதை கண்ணகி உணர்ந்திருந்தாள். அவ்வடக்கமே கோவலனை கண்ணகியிடம் மீண்டும் அன்பு கொள்ளச் செய்தது. இல்லையெனில் கோவலன் தனித்து மதுரை சென்றிருக்கக் கூடும்.

**செவியடக்கம்**

ஐம்புலனடக்கத்தில் செவியடக்கமும் ஒன்றாகும். தீமொழிகளைக் கேட்ட போது கண்ணகி செவிதனைப் புதைத்தது செவியடக்கத்தைக் குறிப்பிடுகிறது. வம்பப்பரத்தை ஒருத்தியும் வறுமொழியாளன் ஒருவனும் காவில் கவுந்தியடிகளோடு இருந்த கோவலன் – கண்ணகியை நோக்கி இவர்கள் யாரென வினவ, கவுந்தியடிகள் தம்மக்கள் என்று கூற,

**'உடன் வயிற்றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை**

**கடவது முண்டோ கற்றறிந் தீரென '**

மொழிந்தனர். ஒரே வயிற்றில் பிறந்தவர்கள் திருமணம் செய்து வாழ்கின்றனரா என்ற தீ மொழிகளைக் கேட்ட கண்ணகி செவியகம் புதைத்ததை,

**'தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்**

**காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க' (சிலம்பு . நாடுகாண் : 229 –230)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

**மனவடக்கம்**

**'தோன்றிற் புகழோடு தோன்றுக அஃதில்லார்**

**தோன்றலின் தோன்றாமை நன்று ' (குறள் . 236)**

என்பது வள்ளுவர் வாக்கு. புகழுக்கு மயங்காத மனங்கள் இல்லை. கண்ணகி மனவடக்கம் உடையவளாதலால் புகழ் மொழிக்கு மயங்கவில்லை. சாலினி என்ற வேட்டுவப் பெண் தெய்வமுற்று கண்ணகியை கொங்கச் செல்வி, குடமலையாட்டி, தென்றமிழ்ப் பாவை செய்த தவக் கொழுந்து, ஒரு மா மணியாய் உலகிற்கு ஓங்கிய திருமாமணி என்று புகழ்ந்துரைத்தாள். அதனைக் கேட்ட கண்ணகி,

**‘பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டியென்று**

**அரும்பெறற் கணவன் பெரும்புறத் தொடுங்க**

**விருந்தின் மூரல் அரும்பினள் நிற்ப’ (சிலம்பு.வேட்டுவ : 51 – 53)**

என்று புகழ்மொழிக்கு மயங்காது கணவனின் புறத்து மறைந்தாள். கண்ணகி, மாகவான் நிகர் வண்கை மாநாய்கனின் மகளும், சங்கநிதி – புதுமநிதியைத் தம்மிடம் கொண்ட மாசாத்துவானின் மருமகளும் ஆவாள். சங்க நிதி என்பது 32 சுழியங்களையும், பதுமநிதி 60 சுழியங்களையும் கொண்டது. அத்தகைய செல்வந்தர்களின் குடும்ப விளக்கு, கிடைத்த இடத்தில் கிடைத்தப் பொருளைக் கொண்டு உண்டி சமைத்து படைப்பது அவளது மனவடக்கத்தைக் காட்டுகிறது. சிலப்பதிகாரக் கொலைக்களக் காதை,

**‘மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்**

**கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்**

**திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன**

**கரிபுற அட்டில் கண்டனள் பெயர**

**வையெரி மூட்டிய ஐயை தன்னொடு**

**கையறி மடமையிற் காதலற் காக்கித்’ (சிலம்பு. கொலைக் : 29–34)**

என்று அதனை விளக்குகின்றன. செல்வமுள்ளவரிடத்து உள்ள அடக்கம் மேலும் அவர்களிடம் செல்வம் சேர்தலை ஒக்கும் என்பதை,

**‘ எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளம்**

**செல்வர்க்கே செல்வம் தகைத்து’ (குறள் . 125)**

என்று குறள் கூறுகிறது. கண்ணகி அத்தகைய இயல்புடையவளாகப் படைக்கப்பட்டுள்ளது தெளிவு.

**அடக்கமுடைமை**

அடக்கமுடைமை என்பது ஒன்றும் அறியாமல் அடங்கியிருப்பதன்று. கற்க வேண்டியதைக் கற்று அறிய வேண்டியதை அறிந்து அவ்வறிவின் நெறியில் அடக்கமுடன் இருந்தால், அந்த அடக்கமே சிறப்புத் தரும். இதனை வள்ளுவர்,

**‘செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து**

**ஆற்றின் அடங்கப் பெறின்’ (குறள்.123)**

என்ற குறள் மூலம் குறிப்பிடுகின்றார். கண்ணகியும் இக்குறளுக்கு இலக்கணமாய்த் திகழ்ந்துள்ளாள்.

**‘அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்**
**துறவோர்க் கெதிர்தலும் தொல்வோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னைநும்**
**பெருமக டன்னொடும் பெரும்பெயர்த் தலைத்தால்**
**மன்பெருஞ் சிறப்பின் மாநிதுக் கிழவன்**
**முந்தை நில்லா முனிவிகந் தனனா**
**அற்புளஞ் சிறந்தாங் கருண்மொழி யளைஇ**
**எற்பா ராட்ட யாகைத் தொளித்த**
**நோயும் துன்பமும் நொடிவது போலுமென்**
**வாயல் முறுவற்கவர் உள்ளகம் வருந்தப்**
**போற்றா வொழுக்கம் புரிந்தீர்’ (சிலம்பு . கொலை : 71 – 81)**

என்ற அடிகள் கோவலன் பிரிந்ததால் கண்ணகி இழந்த அறச்செயல்களையும் மன இழப்புகளையும் பட்டியலிடுகின்றது. கண்ணகி தன் கணவனின் போற்றா ஒழுக்கத்தைக் கடிந்துரைக்கும் அளவுக்கு அறிவில் மேம்பட்டவள். எனினும் தன்னடக்கமுடையவள். ஆதலால் கோவலன் எழுக என்றவுடன் குடிமுதல் சுற்றத்தையும் குற்றிளையோரையும் நீங்கி எவ்வித வினாவுமின்றி எழுந்து வந்தாள். இவ்வடக்கமே அவளது சிறப்பை உயர்த்தி காட்டுகிறது. அடக்கம் என்பதற்கு மனமொழி மெய்கள் அடங்குகை, வரம்பு கடவாதடங்குகை என்று பொருள் கூறுகிறது கழகத்தமிழ்க்கையகராதி. அடக்கம் என்ற குணம் ஒருவரை தெய்வத்துக்கு நிராகப் போற்றச் செய்யும். கண்ணகியையும் தெய்வ நிலைக்கு தன்னடக்கம் உயர்த்தியது.

**ஐம்புலனடக்கம்**

கண்ணகி ஐம்புலனடக்கம் உடையவள். கோவலனின் பிரிவைப் புலனடக்கத்தால் வென்றவள். கற்பெனும் தீ கண்ணகிக்கு உரித்தானதற்கு இவ்வடக்கம் ஆதாரமாகும். கண்ணகியிடம் கோவலன், இறந்த பின் பேசியதும் மதுராபதி தெய்வம் ஏவல் கேட்டு நின்றதும் இவளது கற்பின் திறத்தைச் சுட்டுகின்றன. ஐம்புலனையும் அடக்கியாளும் தன்மை மனிதர்கள் எல்லோருக்கும் வாய்ப்பதில்லை. அவ்வாறு அடக்கியாள்பவர்கள் மகாஞானியாய், தெய்வமாய்ப் போற்றப்படுபவர்கள். அத்தகையவர்களுக்குத் தெய்வங்களும் ஏவல் செய்யும். தன்னளவில் அடங்கிய கண்ணகி தன்னடக்கத்தை அணியாகக் கொண்டவள். எனினும் கோவலனின் இறப்பிற்குப் பின்னும் படிதாண்டாப் பத்தினியாக தன்னடக்கம் உடையவளாய் கண்ணகி இருந்திருப்பாலேயானால்,

பாண்டியனின் அவையில் தன்னடக்கத்தோடு இருந்திருப்பாயேயானால் தெய்வநிலைக்கு உயர்ந்திருத்தல் இயலாது.

**அறம் சார்ந்த கற்புநிலை**

சிலப்பதிகாரக் காப்பியத்தின் தன்னேரில்லாத் தலைவி கண்ணகியாவாள். இவள் மாநாய்கண் மகளாக வணிகக் குடியிலே பிறந்து கோவலன் மனைவியாய் வணிகக் குடிக்குச் சென்றவள். இவளது கற்பு அறஞ்சார்ந்ததாகும். அதனையே பத்தனித்தன்மை என்று குறிப்பிட இயலும். கண்ணகி அறத்தின் மீது காதல் கொண்டாலேயேன்றி கோவலன் மீது காதல் கொள்ளவில்லை. அதற்குப் பல சான்றுகள் உள. அவையாவன,

1. கண்ணகி கோவலன் திருமணம் பெற்றோரால் நடத்தி வைக்கப்பட்டது.
2. கண்ணகியிடம் திருமணத்திற்கு முன்போ பின்போ காதல் மொழிகள் இல்லை.
3. கண்ணகி பிரிவு வருத்தத்தால் மடல் எழுதவில்லை. மாதவியே மடல் எழுதியவள்.
4. தன் துயரைப் பிறருக்குக் கூறவில்லை.
5. கோவலன், மதுரைக்காண்டத்து ஆய்ச்சியர் குரவையில் தன்பிரிவு பற்றி வினவிய போதும் காதல் மொழிகள் இல்லை. அறச் செயல் செய்யாமையே வருத்தம் என்கின்றாள்.
6. பாண்டிய மன்னனிடம் வாதிடும் போதும் காதல் இல்லை. கடமை உணர்வே இருந்தது.
7. மதுரையைத் தீயெறியூட்டியது காதலால் அல்ல. அறம் பிழைத்தமையால் தான்.
8. ‘மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
   காதலாள் புகழ்மன்னுங் கண்ணகியென் பாள்மன்னோ’

இவ்விடத்தும் கண்ணகி நற்குணத்தின் மீது காதல் கொண்டவளாக ஆசிரியர் கூறுகின்றார். இவ்வறக்காதலே பத்தினி நிலைக்கு உயர்த்தியது. கற்புடை பெண் என்பதும், பத்தினி என்பதும் வேறு என்ற துரை.சிங்காரவேலு அவர்களின் கருத்து ஏற்புடையது. “பத்தினி கற்புடைய மகளிரினும் உயர்ந்தவள். பத்தினி வேறு கற்புடைமகள் வேறு என கொள்ளுதலே பொருந்தும்.” [31] கண்ணகி உரைசால் பத்தினியாகப் போற்றப்படுகின்றாள். மிகுதியான சொற்களாலும் விளக்க இயலா கற்புடைய மகளிரினும் உயர்ந்தவள். உரைசால் பத்தினியாவாள். சமணம், ஐம்புலன் அடக்கத்தை உயர்வாகக் கூறுகிறது. துறவறத்தாருக்கு உரிய அறமாகக்கருதப்படும் புலனடக்கத்தை கண்ணகி கையாண்டமையாளும் கற்பு நிலையில் உயர்ந்தமையாலும் பத்தினி தெய்வமாகப் போற்றப்பட்டாள். கண்ணகி அறவழியில் வாழ்ந்து தெய்வமானவள்.

**கோவலன்**

சிலப்பதிகாரத்தின் கதைத் தலைவன் கோவலன் ஆவான். தன்னேரில்லாத் தலைமை அவனிடத்தில் இல்லை. இருப்பினும் பத்தினியின் கணவன் என்பதாலும் இல்லோர்ச் செம்மல், செல்லாச் செல்வன், கருணைமறவன் என்பதாலும் அறமாந்தராகக் கருதத்தக்கவன்.

**கோவலனின் பண்புநலன்**

காப்பியத் தலைவனின் பண்புநலன் பற்றிக் கூறும் போது "அவன் பலதிறப்பட்ட பண்புநலன் உடையவனாக இருத்தல் வேண்டும். அவனது படைப்பு வாசகனுக்கு ஓர் இரக்க உணர்வினை ஊட்டுவதோடு வியப்புணர்வையும் ஊட்டுதல் வேண்டும். அவன் ஒரு சிக்கலான சூழ்நிலையில் புரியாத புதிராக இருக்கக் கூடாது. இயல்பு அல்லாத ஒரு படைப்பாகவும் அறக்கோட்பாடுகளால் உருவாக்கப்பட்ட வனாகவும் அமையக்கூடாது"[32] என்று கூறப்படுகிறது. இவ்வரையறை கோவலனுக்குப் பொருந்துவதாக அமைகிறது. கோவலன், நன்மை – தீமை என்ற இருதரப்பட்ட பண்பு நலன் கொண்டவனாகவும், அவனது படைப்பு இறக்கும் தறுவாயில் இரக்க உணர்வினை ஊட்டுவதாகவும், கோவலன் நல்லவனா? என்ற வியப்புணர்வினையும் ஏற்படுத்துகிறது. மேலும் எந்தவொரு சூழ்நிலையிலும் சிக்கலானவனாக இளங்கோவடிகள், கோவலனைப் படைக்கவில்லை. மனிதன் தவறு செய்யும் இயல்புடையவன். அதனை உணர்த்தும் படைப்பாக இயல்பானவனாக கோவலன் படைக்கப்பட்டுள்ளான்.

**அறமாந்தர் கோவலன்**

கோவலன், அறமும் அறமற்ற செயலும் கலந்த கலவையாகப் படைக்கப்பட்டுள்ளான். "அரிஸ்டாட்டிலின் குறிதவறுதல் என்ற பொருளைத் தரும் ஹமார்ஷியா (Hamertia) என்ற கிரேக்கச் சொல், மிகமிக அறவோனுமாகாது மிகத் தாழ்ந்த பண்புடையவனுமாகாது இடைப்பட்டு நிற்கும் தலைமகன் ஒருவன் இழைக்கும் பிழையைச் சுட்டுகிறது."[33] கோவலனும் அத்தகைய மாந்தர் படைப்பாகக் கருதத்தககவன். இல்லோர் செம்மல், செல்லாச்செல்வன், கருணை மறவன், அன்பான காதலன், பொய்மை இல்லா மாந்தன், சாவகநோன்பி, மான உணர்வு மிக்கவன் என்ற அறக்கூறுகள் இருந்தாலும், சில தவறுகளும் கலந்த கலவையாகக் கோவலன் படைக்கப்பட்டுள்ளான். அவனிடம் காணப்படும் அடிப்படையான நல்லுணர்வின் காரணமாகவும் சமண சமய இல்லற தர்மத்தைக் கடைபிடித்ததன் காரணமாகவும் கோவலனை அற வழியில் வாழ்ந்த மாந்தர் வகையுள் அடக்க இயலும்.

**மாதரி**

மாதரி ஆயர்குலப்பெண் ஆவாள். இவள் குற்றமற்றவள்; முதியவள்; பண்புடையவள்; அருள் உள்ளம் கொண்டவள். பசுக்களைப் பிணி முதலியவற்றின்றும் காப்பாற்றி, அந்த பசுக்கள் தரும் பயனை யாவருக்கும் நல்கும் ஆயர்குல மகளாவாள். இத்தகைய மாதரிப் பற்றிச் சிலப்பதிகாரத்தில் அடைக்கலக் காதை, கொலைக்களக்காதை, ஆய்ச்சியர்குரவை, நீர்ப்படைக்காதை, வாழ்த்துக்காதை ஆகியவிடத்துச் சுட்டப்படுகிறது.

**‘ அறப்புரி நெஞ்சின் அறவோர் பல்கிய**
**புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்**
**பால்மடை கொடுத்துப் பண்பின் பெயர்வோள்**
**ஆயர் முதுமகள் மாதரி என்போள்**
**காவுந்தி ஐயையைக் கண்டுஅடி தொழலும்**
**ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்**
**கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடு இல்லை**
**தீதிலள் முதுமகள் செவ்வியல் அளியள்**
**மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு**
**ஏதம் இன்றென் எண்ணின ளாகி**
**மாதரி கேள்இம் மடந்தை …**
**… … … …**
**இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்’ (சிலம்பு.அடைக்: 115-130)**

ஆயர்குலத்து மாதரி, இயக்கிக்குப் பால்சோறு படைத்து வழிபட்டு வருகையில், அறத்தைப் புரிந்த நெஞ்சினையுடைய அறவோர் பலர் தங்கியிருக்கும் புறமதிற்பள்ளியில் இருந்த கவுந்தியடிகளைக் கண்டு அடிதொழுதாள். பசுக்களைக் காத்தோம்பி அப்பசுவின் பயனை யாவர்க்கும் அளிக்கும் ஆயர்களிடம் ஒரு கொடுமையும் இல்லை. மேலும் மாதவி மனதில் மாசற்ற முதுமகள் ; குற்றமற்றவள் ; கொடை உள்ளம் கொண்டவள் என்று தன் மனதில் எண்ணிய கவுந்தியடிகள் மாதிரியிடம், கண்ணகியை அடைக்கலமாகத் தருகின்றார். கொலைக்களக் காதையில், மாதரி கண்ணகி - கோவலனைப் புதுமனையொன்றில் இருத்தி தன் மகள் ஐயையைக் கண்ணகியின் அடித்தொழிலுக்கு பணித்துத் தேவையான பொருட்களையும் வழங்குகின்றாள்.

ஆய்ச்சியர் குரவையில், தீநிமித்தங்கள் கண்டு ஏதும் தீங்கு நிகழக்கூடாது என்று குரவையாடுகின்றாள். இவள் நம்பிக்கைத் தகர்ந்து கோவலன் இறந்துபடுகின்றான். இதனைக் கேள்வியுற்ற மாதரியின் நெஞ்சு பதைக்கின்றது. நீர்ப்படைக் காதையில், பாண்டியனின் தவறு காரணமாக கோவலன் - கண்ணகி எனும் அடைக்கலப் பொருளை

இழந்தது எண்ணி, மாதரி நள்ளிரவில் எரி மூட்டி அதில் வீழ்ந்து மாண்டுபோகிறாள். வாழ்த்துக் காதையிலும் அடைக்கலப்பொருளை இழந்து இறந்து போன மாதரிப்பற்றி குறிப்பிடப்படுகிறது.

**மாதரியின் மாண்பு**

அடைக்கலக்காதை மாதரியின் மாண்பையேச் சுட்டி நிற்கிறது. கண்ணகி – கோவலனுக்கு வழித்துணையாய் வந்த கவுந்தியடிகள் மாதரியிடம் அவர்களை ஒப்படைகின்றார். மாதரியின் மாண்பை உணர்ந்து, கவுந்திடிகள் அடைக்கலப் படுத்துகின்றார். மாதிரி நம்பிக்கைக்கு உரியவளாய்த் திகழ்கின்றாள். ‘தீதிலள் முதுமகள் செவ்வியள் அளியள்’ என்று மாதரியின் மாண்பை ஆசிரியர் சுட்டுகின்றார். மாதரியை அறிமுகப்படுத்தும் போதும்,

**‘அறம்புரி நெஞ்சின் அறவோர் பல்கிய**
**புறஞ்சிறை மூதூர்ப் பூக்கண் இயக்கிக்குப்**
**பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்**
**ஆயர் முதுமகள் மாதரி என்போள்’ (சிலம்பு . அடைக்கலம் : 115 – 118)**

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். “புறஞ்சிறை என்பது அறவோர்கள் தங்கும் இடம் ஆகும்.”[34] அந்த இடத்தில் வாழும் மாதரி அறமாண்பு உடையவள் என்பதில் ஐயமில்லை. இயக்கி என்னும் தெய்வத்திற்குப் பால் மடை கொடுக்கும் பண்பினள். பால்மடை என்பது தினவழிபாட்டில் தெய்வத்திற்கு பால்சோறு படைத்தலைக் குறிக்கும். தெய்வநம்பிக்கை உடைய, தெய்வத்திற்கு முறைசெய்யும் மாதரி நல்ல பண்பினளாய் இருத்தல் கூடும். இது மட்டுமின்றி கவுந்தியடிகளைக் கண்டவுடன் தொழும் பண்பினையும் மாதரியிடம் காணமுடிகின்றது. இதனால் பெரியோரை மதிக்கும் பண்பு மாதிரியிடம் உண்டு என்பதை அறியமுடிகின்றது. மேலும் திருமாலை வணங்கும் இடையர் குலமக்கள் வைணவமதத்யையே சார்ந்தராவர். மாதரி வைணவ சமயத்தவராக இருந்த போதும் சமணசமயத் துறவியை வணங்குகின்றாள். இதன் மூலம் மாதரியின் **சமயப்பொறையும்** வெளிப்படுகிறது.

ஆயர்குல மக்கள் பசுக்களையும் எருதுகளையும் செல்வமாய்ப் போற்றுபவர்கள். இக்கோவலர்கள் ஐந்தறிவு உடைய ஆடு, மாடு போன்றவற்றைப் பாதுகாக்கின்றனர். இதனால் ஆப்பயனான பால், தயிர், மோர், வெண்ணெய், நெய், எரிபொருள் போன்றவற்றைப் பெறுகின்றனர். அவ்வுயிர்களைத் துன்புறுத்தி இப்பயன்களைப் பெறுதல் இல்லை. எனவே மாதரியிடம் **சீவகாருண்யம்** உண்டு என்பதையும் அறியமுடிகின்றது. இவற்றால் நம்பிக்கை, அறமாண்பு, தெய்வ நம்பிக்கை, பெரியோரை மதித்தல்,

சமயப்பொறை சீவகாருண்யம் ஆகிய குணங்கள் நிரம்பியவராய் மாதிரியின் மாண்புகள் இளங்கோவடிகளால் படைக்கப்பட்டுள்ளது.

**தாயன்பு**

ஒரு தாய் மகளுக்குச் செய்யும் செயல்களான நீராட்டல், அஞ்சனம்தீட்டல், பூச்சூட்டல் போன்றவற்றை கண்ணகியின் தாய், கண்ணகிக்குச் செய்ததாகக் குறிப்பில்லை. கவுந்தியடிகள் 'தாயும் நீயேயாகித் தாங்கு' என்று கூறிய சொல்லுக்காக மாதரி, கண்ணகியின் தாயாக மாறுகின்றாள்.

**'செறிவளை யாய்ச்சியர் சிலருடன் கூடி**

**நறுமலர்க் கோதையை நாணீ ராட்டிக்' (சிலம்பு . கொலை : 8 – 9)**

என்று மாதரி சில ஆய்ச்சியர்களுடன் சேர்ந்து கண்ணகியை நீராட்டிய செய்தி இடம் பெறுகின்றது. இதன்பின் கவுந்தியடிகள் அடைக்கலக்காதையில் கூறியபடி,

**'செங்கயல் நெடுங்கண் அஞ்சனந் தீட்டி**

**தேமென் கூந்தற் சின்மலர் பெய்து**

**தூமடி உடீதுத்' (சிலம்பு . அடைக் : 133 – 135)**

என்கிறாள். இவையனைத்தும் இயல்பாய் நடந்தது. இதனால் மாதரி – கண்ணகிக்குத் தாயாக செயல்பட்டது புலனாகிறது. மேலும் மாதரி கோவலனையும் தன் மகனாகவே எண்ணுகின்றாள்.

**' மாதவத் தாட்டி வழித்துயர் நீக்கி**

**ஏதமில்லா இடந் தலைப் படுத்தினள்**

**நோதக வுண்டோ நும்மக னார்க்கினிச்**

**சாவக நோன்பிக ளடிக ளாதலின்**

**நாத்தூண் நக்கையொடு நாள்வழிப் படூஉம்' (சிலம்பு.கொலைக் : 15 – 19)**

கண்ணகியின் வழித்துயர் கழைய அவளை நீராட வைத்து அலங்கரித்து, இடர்ப்பாடு இல்லா இடத்தில் குடியமர்த்துகிறாள். பின்னர் கோவலனின் நலனை உசாவுகின்றாள். ஏதேனும் குறை இருந்தால் கூறுமாறு வினாவுகின்றாள். தன் மகள் ஐயையை கண்ணகியின் நாத்தனார் என்று சுட்டுகின்றாள். நத்தானார் என்பது கணவனின் தங்கையைச் சுட்டும் உறவுமுறைப் பெயராகும். ஐயையை கோவலனுக்கு தங்கையாக்கி மாதரி கோவலனுக்குச் தாயாகின்றாள். "நங்கை என்பது மகன் மனைவியைக் குறிக்கும்"[35] முறைப்பெயரென்று அடியார்க்கு நல்லார் கூறும் கருத்தால் மாதரி கண்ணகியை நங்கை என்று அழைத்து கோவலனை மகனாக எண்ணி உறவு

கொண்டாடியது மனங்கொள்ளத்தக்கது. மாதரி, யாரென்று அறியா இருவர் மீது மாசில்லா தாயன்பைப் பொழிந்ததை நோக்க அவள் அறமாந்தராக விளங்கியது புலனாகிறது.

**அடைக்கலம் பேணுதல்**

அடைக்கலம் என்பது ஒரு பொருளைத் தீங்கின்றிப் பாதுகாத்துப் போற்றுதல் ஆகும். மாதரியின் நன்மாண்புகளை அறிந்து, தெளிந்து கோவலன் – கண்ணகியை கவுந்தியடிகள் அடைக்கலப்படுத்துகிறார். இவர்களை செல்வப் பெருமக்கள் என்றும், இவர்களை வரவேற்க மதுரை மூதூர் வணிகப் பெருமக்கள் காத்துக்கிடப்பர் என்றும் அடைக்கலப் பொருளின் உயர்வைக் கூறி மாதிரியிடம் அடைக்கலப்படுத்துகின்றார். மாதரி, அடைக்கலத்தை ஏற்க சாயலன் கதையும் கூறப்படுகிறது. சாயலன் மற்றும் அவன் மனைவியிடம் முனிவர் ஒருவர், குரங்கொன்றை அடைக்கலப் படுத்துகிறார். அதனைப் போற்றிப்பாதுகாத்த சாயலன் மனைவி, அக்குரங்கு இறந்த பின்னும், அதன் பாவம் போகத் தானமிடுகின்றாள். அதன் பயனாக அக்குரங்கு மறுபிறவியில் அரசனாகப் பிறக்கிறது. அப்பிறவியில் செய்த தானதவப் பயனால் அடுத்த பிறவியில் குரங்குக்கை வானவனாகத் தோன்றுகிறது.

இக்கதையில் அடைக்கலப்பொருளான குரங்கு பெற்ற உயர்நிலைச் சுட்டப்படுகிறது. அடைக்கலப்பொருளைப் பாதுகாத்து அதன் பெயரால் தானமும் செய்த சாயலன் – அவன் மனைவி ஆகியோர் வீட்டுலகை அடைந்த சிறப்பும் கூறப்படுகிறது. இதனால், மாதரி அடைக்கலப் பொருளைப் பேணுவதால் வீட்டுலகம் அடையலாம் என்பதையும் அடைக்கலப்பொருள் ; ( கோவலன் – கண்ணகி ) உயர்நிலை அடையும் என்ற குறிப்பினையும் பெறுகின்றாள். பெரியோர் சொல் கேட்டல் மற்றும் மாதரியின் நல்லியல்பு ஆகியவையும் வீட்டுலகம் அடைவதே பேரின்பம் என்பதும் மாதரி அடைக்கலத்தை ஏற்கக் காரணமாகின்றன.

மாதிரி, அடைக்கலமாகப் பெற்ற கண்ணகி – கோவலனைத் தாயினும் சாலப்பரிந்து பேணுகின்றாள். கண்ணகியை நீராட்டி, அலங்காரம் புனைகின்றாள். கோவலனின் வழிநடை வருத்தம் தீர்ந்ததா? என வினவுகின்றாள். புதிய குடில், புதிய புழங்கு பொருட்களைக் கொடுத்து தனிக்குடித்தனம் போல அவர்களை இருக்கச் செய்கின்றாள். மாதரி, தன்னிடம் அடைக்கலமாக வந்தவர்களைத் தானே கவனித்து உணவு படைக்காது, தனிக்குடித்தனம் போல் பொருள் கொடுத்து, உணவு சமைக்கச் செய்து, மகள் ஐயையும் உதவிக்கு அனுப்பியதன் காரணம் ஆராயத்தக்கதாகும்.

1. கண்ணகியும் கோவலனும் வணிகர் குலமாதலால் உயர்குடி என்று கருதி ஆயர் குலமகளான மாதரி, அவர்களுக்குப் புதிய புழங்கு பொருட்களைக் கொடுத்திருக்க வேண்டும். இது பழங்காலத்திய சாதிய வேறுபாட்டைச் சுட்டுவதாக உள்ளது.

2. மற்றொரு காரணமாக கோவலன் – கண்ணகியின் இளமைத்தன்மையை கூறமுடியும். அவர்களைத் தனித்து விடவே மாதரி, தனிக் குடிலைக் கொடுத்திருக்க வேண்டும். இது மாதரியின் புரிந்துணர்வைச் சுட்டுகிறது.

புகாரிலிருந்து புறப்பட்டது முதலே கண்ணகியும் கோவலனும் மனம்விட்டு பேசிக்கொள்ள இடமில்லை. கவுந்தியடிகள் உடன்வருவதால் எந்தப் பேச்சும் அவர்களிடம் இல்லை. கோவலன் இறப்பதற்கு முன் அக்குறையைப் போக்க இளங்கோவடிகள் இப்புறஞ்சேரி தனிக்குடிலைப்பயன்படுத்திக்கொண்டார் என்று கருதவும் இடமுண்டு.

3. இறுதியாக கோவலன் சாவக நோன்பி என்ற காரணத்தைக் கூறுமுடியும். சாவக நோன்பிகள் பிறர் சமைத்த உணவை உட்கொள்ளார். மேலும் “கோவலன் சாவக நோன்பியாயிருப்பதால், சூரியன் மறைந்த பின்னர் உணவு கொள்ளானாம். எனவே கண்ணகியும் ஐயையும் உணவு சமைப்பதற்கு காலம் கடத்தாமல் பாத்திரங்களை கொண்டு வரச் சொல்கிறாள் மாதரி”[36] என்ற கருத்தும் தனிக் குடித்தனத்திற்கான காரணத்தைக் கூறுகின்றன. எவ்வாறாயினும் மாதரி அடைக்கலமாக வந்தவர்களை மிக உயரிய முறையில் பேணினாள்.

**விருந்தோம்பல் பண்பு**

விருந்து புறந்தருதல் வேந்தர்க்கு மட்டுமல்ல மக்களுக்கும் உரியது என்பதை மாதரியின் மாந்தர்ப்படைப்பு சுட்டுகிறது.

**‘வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**

**பருவந்து பாழ்படுதல் இன்று’ (குறள் . 83)**

தன்னை நோக்கி வந்த விருந்தை நாள்தோறும் புறந்தருவாரது இவ்வாழ்க்கையில், பொருள் குறைவு இராது. மாதிரியும் தன்னை நோக்கி வந்த விருந்தினரைப் புரந்தாள். கோவலன் சாவக நோன்பி என்பதால் புதுப்புழங்குப் பொருட்களைக் கொடுத்து, புதுமனையில் சமைக்க மாதரி ஏற்பாடு செய்கின்றாள். தன் மகளையும் அடித்தோழியாகக் பணிக்கின்றாள். தன் வீட்டில் விருந்தோம்பலை சில காரணங்காளால் செய்ய இயலாவிடினும் அதனை நிறைவு செய்யும் வகையில் செயலாற்றுகின்றாள்.

**'அடிசி லாக்குதற் கமைந்தநற் கலங்கள்**
**நெடியா தளிமின் நீரெனக் கூற**
**இடைக்குல மடந்தையர் இயல்பிற் குன்றா**
**மடைக்கலந் தன்னோடு மாண்புடை மரபிற்**
**கோல்வளை மாதே கொள்கொனக் கொடுப்ப' (சிலம்பு.கொலைக்:20 – 26)**

சமைப்பதற்கு ஏற்ற நற்கலன்களைக் கொடுக்குமாறு மாதரி பணிக்க, இடைக்குல மடந்தையர் கலன்களைக் கொடுக்கின்றனர். மேலும் மா, பலா, வாழை என்ற முக்கனிகளும் மாதுளங்காய், வெள்ளரிக்காய் ஆகியவையும், செந்நெல் அரிசியும், பால், நெய் போன்ற பால்பொருட்களையும் மாதரி நல்குகின்றாள். இவற்றால் மாதரியின் விருந்தோம்பல் பண்பு சிறக்கக் காணமுடிகின்றது.

**கடமையைச் செய்தல்**

மாதரி, அடைக்கலமாகப் பெற்ற கோவலன் கண்ணகியை போற்றிப் பாதுகாத்தலைக் கடமையாகக் கொண்டாள். அடைக்கலமாக ஒரு பொருளைப் பெறுதல் எளிதே என்றாலும் அதனைக் குறைவறச் செய்து முடித்தல் கடுமையானதாகும். மாதரி அடைக்கலக் கடமையை சரிவர நிறைவு செய்திலள். அடைக்கலப் பொருளை இழந்து விடுகின்றாள்.

**' தாதெரு மன்றத்து மாதரி எழுந்து**
**கோவலன் தீதிலன் கோமகன் பிழைத்தான்**
**அடைக்கலம் இழந்தேன் இடைக்குல மாக்கள்**
**குடையும் கோலும் பிழைத்த வோவென**
**இடையிருள் யாமத் தெரியகம் புட்கதும்' (சிலம்பு . நீர்ப்படை : 74 – 78)**

கோவலன் தவறு செய்திலன்; பாண்டியனே தவறு செய்தான். அதன் பொருட்டு என்னிடம் அடைக்கலமாக வந்த கண்ணகியை இழந்தேன் என்று கூறி மாதரி நடுயாமத்தில் எரி மூட்டி அதில் வீழ்ந்து மாண்டு போகிறாள். இதே செய்தி வாழ்த்து காதையிலும்,

**'ஐயந்தீர் காட்சி அடைக்கலம் காத்தோம்ப**
**வல்லாதேன் பெற்றேன் மயலென்று உயிர்நீத்த' (சிலம்பு . வாழ்த் : 8)**

என்று அடைக்கலப்பொருளைப் பேணிக்காக்க இயலாததால் உயிர் துறந்தவள் மாதரி என்று சுட்டப்படுகிறது. கடமையைச் சரிவரச் செய்து முடிக்க இயலாத போது தன்நிலைக்கு வருந்தி, தன் உயிரை நீத்து மாதரி அறத்தை நிலைநாட்டுகின்றாள். நீதிதவறிய பாண்டிய மன்னன் தன் உயிரைக் கொடுத்து செங்கோலை நிமிர்த்தியதோடு மாதரியின் செயலை

ஒப்புநோக்க இயலும். மாதரி நம்பிக்கைக்கு உரியவள். அறமாண்பு, தெய்வ நம்பிக்கை, பெரியோரை மதித்தல், சமயப்பொறை, தாயன்பு, அடைக்கலத்தைப் பேணுதல், விருந்தோம்பும் பண்பு ஆகிய பல நற்குணங்கள் மாதரியிடம் நிரம்பியிருந்தது. அடைக்கலப்பொருளைக் காத்தல் சமணசமயத்தின் தலை சிறந்த அறமாகும். இதனால் மாதரி அறவழியில் வாழ்ந்த மாந்தராகக் கருதப்படுகின்றாள்.

**சாயலனும் அவர் மனைவியும்**

சாயலனும் அவனது மனைவியும் மதுரைக்காண்டம் அடைக்கலக்காதையில் இடம் பெறுகின்றனர். அடைக்கலத்தின் பெருமையையும் அறத்தன்மையையும் விளக்க இவர்களது படைப்பு இன்றியமையாதது ஆகின்றது. இவர்கள் அறவழியில் வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.

**அடைக்கல அறம்**

சமண சமயத்தின் தலையாய அறம் அடைக்கலம் ஆகும். ஒரு பொருள் அடைக்கலமாக வரும்போது அதனைப் பேணிப் பாதுகாத்தால், வீடு பேற்றை அடைய முடியும் என்பது சமண சமயத்தின் கொள்கையாகும். எட்டி என்னும் பட்டத்தைப் பெற்ற சாயலனது இல்லம் பட்டினி நோன்பிகள் உணவு உண்ண வாய்ப்பாக அமைந்தது. சாயலன் மனைவியும் பட்டினி நோன்பிகளுக்கு விருந்து புரந்தருபவளாக விளங்கினாள். ஒருநாள் உணவு உண்ண வந்த முனிவர் ஒருவர் பசியால் வாடிய குரங்கு ஒன்றை சாயலன் மனைவியிடம் அடைக்கலப்படுத்தி சென்றார். தாயன்பு மிக்க சாயலன் மனைவி அக்குரங்கை தன் குழந்தையாக எண்ணி வளர்த்தாள். அக்குரங்கு இறந்துவிட்டதும் அதன் பெயரால் தானமிட்டு வந்தாள்.

**தானத்தின் பயன்**

சாயலன் மனைவியிட்ட தானத்தின் பயனால் மத்திம தேசத்து வாரணவாசி என்னும் நகரத்தில் உத்தரகௌத்தற்கு மகனாய் அக்குரங்கு பிறந்து செல்வ வளத்தில் மேம்பட்டு விளங்கியது. அப்பிறப்பிலும் இறந்து முற்பிறப்பை மறவாது குரங்குகை வானவனானது.

**அடைக்கலத்தின் பயன்**

அடைக்கலப் பொருளைப் பேணிக்காத்தமையின் சாயலனும் அவன் மனைவியும் முட்டா இன்பத்து முடிவுலகத்தை, அதாவது வீடுபேற்றை அடைந்தனர். இதனை,

‘ இட்ட தானத் தெட்டியும் மனைவியும்

முட்டா இன்பத்து முடிவுல கெய்தினர்’ (சிலம்பு . அடைக் : 196-197)

என்ற அடிகள் விளக்கும். எட்டிசாயலன் அவன் மனைவி மற்றும் குரங்குக் கை வானவன் மூலம் தானத்தின் பயனும் அடைக்கலத்தின் பயனும் உணர்த்தப்பட்டன. தானமும் அடைக்கலமும் தலைசிறந்த அறங்களாகும். இதன் வழி இவர்கள் அறத்தின் வழிவாழ்ந்தவர்கள் ஆகின்றனர்.

சமணம், அரசறத்தை மட்டும் போற்றியமையை மற்றைய காப்பியங்களில் காணமுடிகிறது. சிலப்பதிகாரம் அதிலிருந்து வேறுபட்டு குடிமக்கள் கடைபிடிக்க வேண்டிய அறங்களைச் சுட்டுகிறது. பெண்ணைப் போற்றாத சமணம், ஒரு பெண்ணைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது. எனினும் இக்காப்பியத்திலும் பெண்ணுக்கு வீடுபேறு இல்லை. பெண்துறவி (கவுந்தியடிகள்) என்ற நிலையில் ஒரோவழி வீடுபேறு உண்டு என்று கொண்டாலும், குலமகளிர் கற்புடைமையின் (கண்ணகி) காரணமாக தேவருலகை அடையமுடிந்ததேயன்றி வீடுபேறு அடைய வழிஇல்லை. பெண், தேவநிலையினின்று மனிதகதிக்கு மீண்டும் ஆணாகத் தோன்றி தன் பாவங்களைப் (மதுரையை எரியூட்டல்) போக்கிய பின்பே வீடுபேறு கிட்டும். இதுவே சமணம் வலியுறுத்தும் அறமாகும். சமணம் ஒரு ஆணியச்சமயமாக காலந்தோறும் காட்சியளித்துள்ளது. சமணத்தை ஏற்கும் காலக்கட்டத்தை சிலப்பதிகாரம் விளக்குகிறது. எனவே இதனை, ஏற்பு நிலை என்று கூறயியலும்.

## மணிமேகலை

மணிமேகலை ஒரு பௌத்தக் காப்பியமாகும். இதன் ஆசிரியர் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தானார் ஆவார். கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நூலாகும். இஃது முப்பது காதைகளைக் கொண்டது நிலைமண்டில ஆசிரியப்பாவால் ஆனது. இது கதை அமைப்பில் சிலப்பதிகாரத்தோடு ஒப்பு நோக்கப்படுவதால் இரட்டைக்காப்பியங்கள் என அழைக்கப்படுகின்றது. மணிமேகலைத் துறவு, முதல் சமயக் காப்பியம், அறக்காப்பியம், சீர்திருத்தக் காப்பியம், குறிக்கோள் இலக்கியம், புரட்சிக் காப்பியம், சமயக் கலைச் சொல்லாக்கக் காப்பியம், கதைக் களஞ்சியக் காப்பியம், பசிப்பிணி மருத்துவக் காப்பியம், பசு போற்றும் காப்பியம் ஆகியவை மணிமேகலையின் வேறு பெயர்கள் ஆகும்.

**கதைச்சுருக்கம்**

ஊர் அலர் உரைத்த காதையான இரண்டாம் காதையில் மணிமேகலை அறிமுகமாகின்றாள். தன் தந்தையான கோவலனுக்கு நேர்ந்த துன்பம் கேட்டு இரங்கி கண்ணீர் சொரிய, அது புத்தருக்குத் தொடுத்த மாலையில் விழுகிறது. எனவே புதுமலர் கொய்து மாலை தொடுப்பதற்காக உய்யாவனம் எனும் சோலைக்கு தன் அன்னையின் தோழியான சுதமதியுடன் செல்கின்றாள். மணிமேகலை மலர்கொய்ய சென்ற செய்தி அறிந்து, அவள் மீது மோகம் கொண்ட மன்னன் மகன் உதயகுமாரன் அவளைப் பின்தொடர்கிறான். சுதமதி, மணிமேகலையை உதயகுமாரனின் கண்ணிலிருந்து மறைக்க பளிக்கறையில் இருக்கச் செய்தாள். அன்றிரவு மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிப்பல்லவத்தீவிற்கு எடுத்துச் சென்றது. அங்கு மணிமேகலை பழம் பிறப்பு அறிந்தவோடு ஆபுத்திரனின் அமுதசுரபி பாத்திரத்தையும் பெற்றாள்.

பின்னர் அறவணரைத் தொழுது ஆபுத்திரன் வரலாற்றை கேட்டுணர்ந்தாள். பின்னர் ஆதிரை என்னும் கற்பரசியிடம் முதல் பிச்சையேற்று, காயசண்டிகை எனும் வித்தியாதர பெண்ணின் யானைத்தீ எனும் பெரும் பசிநோயைத் தீர்த்தாள். உலகவறவி சென்று அனைத்து மக்களின் பசிப்பிணியையும் போக்கினாள். உதயகுமாரன் சித்ராபதியின் தூண்டுதலால் பிக்குணி கோலத்து மணிமேகலையை அடைய முயற்சித்தான். அவனுக்கு மணிமேகலை அறவுரை வழங்கினாள். எனினும் அவன் மனம் மாறாததால் காயசண்டிகையின் வடிவில் தன்தொண்டைத் தொடர்ந்தாள். காயசண்டிகையின் கணவன் வித்தியாதரன் அவளைத் தேடிக்கொண்டு வருகையில், காயசண்டிகையின் வடிவில் இருந்த மணிமேகலையைத் தன் மனைவி என்று நினைத்தான். அதனால் மணிமேகலை உதயகுமாரனிடம் பேசியதைக் கண்டு கோபம் கொண்டான். அன்று இரவு உதயகுமாரன் மணிமேகலையை நாடிவர, வித்தியாதரன் அவனை வாளால் வெட்டி வீழ்த்தினான். இதனால் மணிமேகலை சிறையில் அடைக்கப்பட்டாள். இராசமாதேவி சிறையில் இருந்த மணிமேகலையை விடுவித்து, மகன் இறந்தமைக்காக பழிவாங்க எண்ணினாள். பின்னர் மணிமேகலையின் அறவுரைகளால் மனம் திருந்தினாள்.

மணிமேகலை வஞ்சிமாநகர் சென்று தெய்வத் தாயாகிய கண்ணகியைச் சந்தித்தாள். அவளது அறிவுரைப்படி ஆண்வேடம் தரித்து மாதவனாக பல்வேறு சமயக்கருத்துக்களைக் கேட்டாள். அளவைவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசிவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி

ஆகியோருடன் சொற்போர் புரிந்தாள். அவர்களின் கருத்துக்களில் உடன்பாடு இன்மையால் அறவணவடிகளைத் தொழுது பௌத்ததத்துவத்தைக் கற்றுத் தெளிந்தாள்.

**மணிமேகலையில் அறமாந்தர்கள்**

இக்காப்பியத்தில் அறவணவடிகள், மணிமேகலை, சுதமதி, சாதுவன் ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்கள் ஆவர். ஆபுத்திரன், கோதமை, மாதவி ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.

**அறவணவடிகள்**

மணிமேகலை காப்பியத்தில் அறவணவடிகள் மந்திரங்கொடுத்த காதை, பாத்திரம் பெற்ற காதை, அறவணர்த் தொழுதகாதை, ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை, பாத்திர மரபு கூறிய காதை, பாத்திரம் கொண்டு பிச்சை புக்க காதை, ஆபுத்திரன் நாடு அடைந்த காதை, கச்சிமா நகர்புக்க காதை, தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை, பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை ஆகிய காதைகளில் இடம்பெறுகின்றார். அறவணவடிகள் முழுக்க முழுக்க பௌத்த துறவியாக இருந்து பௌத்த மதக் கொள்கைகளை இரண்டு தலைமுறைகளாகப் பரப்புபவராக காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளார். இவரின் மூலம் பௌத்த சமயத் தத்துவங்கள் காப்பியத்தில் கூறப்படுகின்றன. இவர் அறமுரைக்கும் மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளார்.

**அறவணர் வரலாறு**

அறவணர், முற்பிறப்பில் துச்சயமன்னனின் மனைவியாக வாழ்ந்த தாரை (மாதவி), வீரையை (சுதமதி) அறிவார். அவர்களைப் பாதபங்கய மலையை வணங்கச் செய்தார். அதன் பொருட்டே தாரையும் வீரையும் மறுப்பிறப்பினை உணர்ந்தனர். மேலும் ஆபுத்திரனையும் அவனது பாத்திரத்தின் திறத்தையும் அறிந்தவர். மறுபிறவியெடுத்த இலக்குமியான மணிமேகலைக்கு அறம் உரைத்தவர். இவர் வழி பௌத்த அறம் போதிக்கப்படுகிறது. இவரது பெயர் அறத்தை அடிப்படையாகக் கொண்டது ஆகும். அறமுரைக்க தகுதிவாய்ந்தவரும் ஆவார். பௌத்த மதம் பல புத்தர்கள் வாழ்ந்ததாகக்குறிப்பிடுகிறது. இறுதியாகத் தோன்றிய கௌதமபுத்தர் பிறப்பதற்கு முன்னர் மணிமேகலை கதைகளம் அமைக்கப்பட்டுள்ளது. அறவணவடிகள் 1611 ஆம் ஆண்டில் புத்தர் தோன்றி அறம் உரைப்பார் என்றும் அதனைக் கேட்டு யாவரும் அறநெஞ்சினராய் உய்வர் என்றும் அறவணர்த் தொழுத காதையில் குறிப்பிடுகின்றார். அறவணவடிகள் பசிப்பிணி தீர்த்தல் நல்அறம் என்று குறிப்பிடுகின்றார்.

**‘ மக்கள் தேவர் எனவிரு சார்க்கும்**

**ஒத்த முடிவின் ஓர் அறம் உரைக்கேன்**

**பசிப்பிணி தீர்த்தல் என்றே’ (மணி . காதை . 12 : 116 – 118)**

என்பதாக அவ்வடிகள் அமைகின்றன.

**பன்னிரு சார்புகள் (நிதானங்கள்)**

அறவணவடிகள் இராசமாதேவிக்கு அறிவுரை வழங்கி மணிமேகலையைச் சிறைவிடுவிக்கச் செய்கின்றார். பிறந்தவர் மூப்பெய்தி இறப்பதும், பிணியுற்று இறப்பதும் இயற்கை என்கின்றார். மேலும் மனிதர்கள் பன்னிரு இயல்புகளாகிய நிதானங்களையும் (காரணங்கள்) அறிந்து கொள்ள வேண்டும் என்கிறார். அவையாவன,

1. பேதமை – அவிச்சை
2. செய்கை – கருமம்
3. உணர்வு – விஞ்ஞானம்
4. அருவுரு – நாமரூபம்
5. வாயில் – ஐம்பொறிகளும் உள்ளமும்
6. ஊறு – பொறிபுலன்களின் இயக்கம்
7. நுகர்வு – இன்ப துன்ப நுகர்ச்சி
8. வேட்கை – அவா
9. பற்று – புலன்களைப் பற்றிக் கொள்ளுதல்
10. பவம் – கருமம் பயன்தரு முறைப்படி சார்தல்
11. தோற்றம் – வினைகளுக்கேற்ப பிறத்தல்
12. வினைப்பயன் – கருமத்தின் பயன்

ஆகியவை ஆகும். இவற்றை அறிந்தவர்கள் பெரும் பேறாகிய நிருவாணத்தை அடைவர். இவற்றை அறியாராயின் துன்பம் நிறைந்த நரகத்தை அடைவர். பின்னர் பேதமையில் தொடங்கிய பன்னிரு காரணங்கள் பற்றி விரிவாகக் கூறப்படுகிறது. இவை இருபத்து நான்காம் காதையில் இராசமாதேவிக்கு அறிவுரை வழங்கும் போது கூறப்படுவதோடு, முப்பதாவது காதையிலும் மணிமேகலைக்கு அறங்கூறுவதாக இச்செய்திகள் மறுபடியும் இடம்பெறுகின்றன. இஃது மக்கள் மனதில் பௌத்த கருத்தை ஆழப்பதிய வைப்பதற்காக ஆசிரியர் செய்த முயற்சி என்று கொள்ள வேண்டும்மேயன்றி கூறியது கூறல் குற்றம் எனக் கொள்ளக் கூடாது.

**‘பேதமை செய்கை உணர்வே அருவுறு**
**வாயில் ஊறே நுகர்வே வேட்கை**
**பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்**
**இற்றென வகுத்த இயல்பீ ரானும்**
**பிறந்தோர் அறியல் பெரும்பேறு அறிகுவர்**
**அறியார் ஆயின் ஆழ்நர கறிகுவர்’**

**(மணி . காதை . 24 : 105 – 110) (காதை . 30 : 45 – 50)**

பௌத்தமத தத்துவமான பன்னிரு நிதானங்களைப் பன்னிரு சார்பெனத் தமிழ்ப்படுத்துவர். பாலிமொழிச் சொற்களைச் சாத்தனார் அப்படியே தமிழ்ப்படுத்த முயற்சித்துள்ளார். ‘‘பாலிமொழிச் சொற்களை மயிலை சீனி.வேங்கடசாமி அவர்கள் பௌத்தமும் தமிழும் எனும் நூலில் குறித்துள்ளார். அஃது அட்டவணைப் படுத்தப்படுகிறது.’’[37]

| வ.எண். | தமிழ்மொழி | பாலிமொழி |
|---|---|---|
| 1. | பேதமை | அவிஜ்ஜை |
| 2. | செய்கை | ஸங்க்காரம் |
| 3. | உணர்வு | விஞ்ஞானம் |
| 4. | அருவுரு | நாமரூபம் |
| 5. | வாயில் | ஸளாயதனா |
| 6. | ஊரு | பஸ்ஸ |
| 7. | நுகர்வு | வேதனா |
| 8. | வேட்கை | தண்ஹா |
| 9. | பற்று | உபாதானம் |
| 10. | பவம் | பவம் |
| 11. | தோற்றம் | ஜாதி |
| 12. | வினைப்பயன் | ஜாராமரணம் |

பன்னிரு நிதானமும் நிலையில்லாதன, பயனில்லாதன, துன்பம் தருவன என்று அறிந்து இவற்றை நீக்கினால் அழியாத வீடு பேற்றுக்கு உறுதியான நல்ல ஞானம் உண்டாகும்.

**பேதமை**

பேதமை என்பது நால்வகை வாய்மைகளையும் நிதானங்களையும் உணர்ந்து கொள்ளாமல் மயக்கமுற்று காட்சியாலும் கருத்தளவையாலும் அறிந்தவற்றை மறந்து

முயற்குக் கொம்பு உண்டோ இல்லையோ என்பதைப் பிறரைக்கேட்டு உண்டெனின் உண்டெனத் தெளிவதாகும். “தம்மசங்கணி யென்னும் நூல் பேதமையாவது நால்வகை வாய்மைகளையு மறியாமை என்று கூறுகிறது.” [38]

**செய்கை**

- செய்கை என்பது கருமம் அல்லது செய்வினையைக் குறிக்கும். கீழ் உலகம், நடு உலகம், மேல் உலகம் என்று உலகம் மூன்று வகைப்படும். வினை செய்தற்குரியது நடு உலகம், நல்வினைப் பயன் நுகர்தற்குரியது மேல் உலகம், தீவினைப் பயன் நுகர்தற்குரியது கீழ் உலகம். இம்மூவகை உலகங்களிலும் ஆறு வகையான உயிர்கள் உள்ளன. அவை மக்கள், தேவர், பிரமர், நரகர், விலங்கு, பேய் என்ப ஆறு வகை உயிர்கள் ஆகும். நல்வினை, தீவினை என்ற இருவகைச் செய்கைகளால் மக்கள் தேவர் முதலாகச் சொல்லப்பட்ட பிறப்பை உயிர்கள் அடையும். உயிர்கள் கருவில் தோன்றிய போதே வினைகளும் அவற்றோடு இயைந்து தோன்றும். செய்வினைப் பயனாகிய கருமம் தோன்றும் காலத்தில் மனத்தில் இன்பமும் துன்பமும் ஏற்படும். தீவினைகள் மூன்று வகைப்படும். அவை,
    - உடம்பில் உண்டாகும் தீவினைகள்
    - வாக்கில் உண்டாகும் தீவினைகள்
    - மனத்தில் உண்டாகும் தீவினைகள்




கொலை, களவு காமம், பொய், புறங்கூறல், கடுஞ்சொல் கூறல், பயனில் கூறல், பிறர் பொருளைக் கவரநினைத்தல், வெகுளல் குற்றம்பட உணர்த்தல் ஆக பத்தும் தீவினைகள் ஆகும். இத்தீவினைகளைக் கடைபிடித்தால் விலங்கும் பேயும் நரகருமாகித் துன்புறுவர்.

நல்வினை என்பது பத்து வகைத் தீவினைகளையும் அறவே செய்யாது நீங்கி சீலத்தை மேற்கொண்டு தானங்கள் பலவற்றையும் செய்து தூய வாழ்வு வாழ்வது ஆகும்.

நல்வினை செய்தோர், மேற்பிறப்பாகிய மக்கள், தேவர், பிரமர் என்ற பிறப்புகளில் பிறந்து தாம் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்தை நுகர்வர்.

**உணர்வு**

உணர்வு என்று சொல்லப்படும் நிதானமாவது, கண்ணுறங்கும் ஒருவர்பாலுள்ள உணர்வுபோல விளக்கமின்றி செய்கையின்றி உண்மை மாத்திரையாய் இருப்பது ஆகும். இதனை விஞ்ஞானம் என்று பெருவழக்காக கூறுவர். அஜந்தாக் குகையோவியத்தில் ஒரு வாலில்லாக் குரங்கு மரமேறுவது போலக் காணப்படுவது இந்த நிதானத்தைக் குறிப்பதாமெனக் கூறுவர்.

**அருவுரு**

அருவுரு என்னும் நிதானமாவது இவ்வுணர்வோடு கூடிய உயிரும் உடம்பும் என்று கூறப்படும். உயிர் வடிவ மற்றும் உடம்பு வடிவத்துடனும் இருத்தலால் இவ்விரண்டையும் சேரவைத்து அருவுரு என்று வழங்குவர். வடநூல்கள் இதனை நாமரூபமென்று கூறும்.

**வாயில்**

வாயில் எனும் நிதானம் பொறிகள் ஐந்தும் மனமும் சேர்ந்து ஆறு ஆகும். இவ்வாறு வாயில்களும் உள்ளதில் பொருள் உணர்ச்சி எய்திப் பொருந்துதற்கு உரிய இடமாகும். வாயிலை வடநூலார் ஆயதனம் என்பர்.

**ஊறு**

ஊறு எனப்படும் நிதானம் மனமும் பொறிகளும் தமக்குப் புறமான பொருள்களில் பொருந்துவதென்று கூறுவர். இதனை வடமொழியில் பரிசம் என்பர். கண்ணுக்கும் காணப்படும் பொருளுக்கும் உள்ள இயைபும் ஊறு எனப்படும். இனி பொருளை உணர்ந்து கொள்ள மெய்யாகிய பொறி மட்டுமின்றி கண் முதலிய பொறிகளும், மனமும், பொருளை உணர்தற்குள்ள இயைபு ஊறு எனப்படும்.

**நுகர்வு**

நுகர்வு எனப்படும் நிதானம் புலன்களாகிய பொருளை உணர்ந்து அவற்றின் பயனை அடைதல். வடநூல்கள் நுகர்வை வேதனை என்று கூறும்.

**வேட்கை**

வேட்கை என்னும் நிதானம் உணர்வு புலன்களை நுகர்ந்து பயனடைந்தும் அப்பயனை மேன்மேலும் விரும்பிச் செல்லும் ஆசை அடங்காமையாகும். வேட்கையைத் திருஷ்ணை என்று வடநூல்கள் கூறும். வேட்கை, ஐம்புலநுகர்ச்சி வேட்கை, பிறப்பு வேட்கை, பிறவாமை வேட்கை என மூவகைப்படும்.

**பற்று**

பற்று எனப்படும் நிதானமாவது அடங்காதெழுந்த ஆசையால் புலன்கள் பெறும் பயனையே பற்றி நிற்றலைக் குறிக்கும். பற்றினை உபாதானமென்று கூறுவர்.

**பவம்**

பவம் என்று கூறப்படும் நிதானமாவது கருமவினைகளின் கூட்டம் தன்னுடைப் பயனை அளிக்கும் முறைமை இதுவெனக் கருமம் செய்தோர் அக்கருமத்தின் பயனை உடன்பட்டு அதனைக் கொள்வதற்கு அமைவதாகும்.

**வினைப்பயன்**

முன்செய்த கருமவினைகளால் இப்பிறவியில் வரத்தக்க நன்மைதீமைகளை வினைப்பயன் என்பர்.

**தோற்றம்**

இதனைப் பிறப்பு என்னும் நிதானமாகவும் கூறுவர். வினைகளின் தன்மைக்கேற்ப பிற கந்தங்களோடு மிகவும் சேர்ந்திருக்கும் விஞ்ஞானம் முன்னும் பின்னுமாய்ச் சாரும் நிதானங்களுடன் பலவகைப் பிறப்புக்களிலும் காரண காரியமாய் இயையும் உடம்புகளில் தோன்றுவதாகும். பிணியெனப்படுவது தோற்றம் சார்பாக உடம்பினுடைய இயல்பான தன்மை திரிந்து உடம்புக்குத் துன்பம் செய்வதாகும். மூப்பென்று சொல்லப்படுவது முடிவு வரையில் கணத்திற்க்கு கணம் ஏற்படும் நிலையாமையால் உடம்பு தளர்ச்சி அடைவதாகும். இறப்பு எனப்படுவது அருவ வகையில் தன்மம், சித்தம், வேதனை என்பவற்றையும் உருவ வகையில் உடம்பையும் உடைய யாக்கை மேற்றிசையில் விழும் ஞாயிறு போல மறைவதாகும். இப்பன்னிரு சார்புகளும் துன்பத்திற்கு காரணமாகும். இவை ஒன்றையொன்று சார்ந்தவையாகும். இதனை மணிமேகலை,

**‘ பேதமை சார்வா செய்கை ஆகும்**
**செய்கை சார்வா உணர்ச்சி ஆகும்**
**உணர்ச்சி சார்வா அருவிரு ஆகும்**

**அருஉருச் சார்வா வாயில் ஆகும்**

**வாயில் சார்வா ஊறு ஆகும்மே**

**ஊறு சார்ந்து நுகர்ச்சி ஆகும்**

**நுகர்ச்சி சார்ந்து வேட்கை ஆகும்**

**வேட்கை சார்ந்து பற்று ஆகும்மே**

**பற்றின் தோன்றும் கருமத் தொகுதி**

**கருமத் தொகுதி காரணமாக**

**வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்**

**தோற்றம் சார்பின் மூப்பு பிணி சாக்காடு**

**அவலம் அரற்று கவலை கையாறு எனத்**

**தவல்இல் துன்பம் தலைவரும்' (மணி . காதை . 30 : 104 – 117)**

என்று கூறுகிறது.

**துன்பத்திலிருந்து விடுபடல்**

பிறப்பே துன்பத்திற்கு காரணம். அப்பிறப்பு பன்னிரு நிதானங்களால் அமைகிறது. ''பிறவாமையாகிய இன்பத்திற்கு காரணத்தை விநயபிடகம், மகாவக்கம், முதற்காண்டம்,

**'அவிஜ்ஜா யதுவேவ அஸேஸ**

**விராக நிரோதா ஸ்ங்ககார நீரோதோ**

**ஸ ங்க்கார நிரோதா விஞ்ஞான நிரோதா**

**விஞ்ஞான நிரோதா நாமரூப நிரோதா**

**நாமரூப நிரோதா ஸளாயதன நிரோதா**

**ஸளாயதன நிரோதா ப்ஸஸ நிரோதா**

**பஸ்ஸ நிரோதா வேதனா நிரோதோ**

**வேதனா நிரோதா தண்ஹா நிரோதோ**

**தண்ஹா நிரோதா உபாதான நிரோதோ**

**உபாதான நிரோதா பவ நிரோதோ**

**பவ நிரோதா ஜாதி நிரோதோ**

**ஜாதி நிரோதா ஜராமரணம் ஸோக**

**பரிதேவ துக்க தோமஸ்ஸி பாயாஸா நிருஜ்ஜந்தி'**

என்று கூறுகிறது.'' [39] இதனை மொழிபெயர்த்து சாத்தனார் மணிமேகலையில்,

**' பேதமை மீளச் செய்கை மீளும்**

**செய்கை மீள உணர்ச்சி மீளும்**

**உணர்ச்சி மீள அருவுரு மீளும்**

**அருவுரு மீள வாயில் மீளும்**

**வாயில் மீள ஊறும் மீளும்**

**நுகர்ச்சி மீள வேட்கை மீளும்**

**வேட்கை மீள பற்று மீளும்**

**பற்று மீளக் கருமத் தொகுதி**

**மீளும் கருமத் தொகுதி மீளத்**

**தோற்றம் மீளும் தோற்றம் மீளப்**

**பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச்**

**சாக்கா டவலம் அரற்றுக் கவலை**

**கையா றென்றிக் கடையில் துன்பம்**

**எல்லாம மீளும்' (மணி . காதை . 30 : 119 – 113)**

என்று குறிப்பிடுகின்றார்.

**ஊழ் வட்டம்**

இப்பன்னிரு சார்புகளை (நிதானங்களை) ஊழின் வட்டம் அல்லது ஊழ் மண்டிலம் என்பர். இவ்வூழ் வட்டம், கண்டம், சந்தி, பிறப்பு, காலம், ஆன்மா, வாய்மைகள், கந்தங்கள், வழக்கு, நயம், வினாவிடை, பாவனை என்னும் உறுப்புகளையுடையது.

**நால்வகைக் கண்டங்கள்**

பன்னிரு நிதானங்களும் நால்வகை கண்டங்களாகப் பிரிக்கப்படும். இவற்றில் பேதமை செய்கை இரண்டும் பிறசார்புகளின் காரணமாதலால் அவை முதற்கண்டம். உணர்ச்சி, அருவுரு, வாயில், ஊறு, நுகர்ச்சி ஆகியவை இரண்டாம் கண்டத்திலும் வேட்கை மற்றும் கருமம் ஆகியவை மூன்றாம் கண்டத்திலும் பிறப்பு, வினைப்பயன் நான்காம் கண்டத்திலும் அடங்கும். இதனை மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் ஒரு வரைபடத்தின் மூலம் விளக்குவர். அஃது ஒரு தெளிந்த சிந்தனையைத் தருகிறது.

**சந்தி**

சொற்கள் எவ்வாறு தம்மில் கூடி இயங்குமோ அவ்வாறே நான்கு கண்டங்களும் தம்மில் புணரும் இயல்புடையன. அதை சந்தி என்பர். இது முதல் சந்தி, இரண்டாம் சந்தி, மூன்றாம் சந்தி என வகைப்படுத்தப்படுகிறது. முதல் கண்டத்தின் இறுதியும் இரண்டாம் கண்டத்தின் முதலும் சேர்வது முதல் சந்தி. இரண்டாம் கண்டத்தின் இறுதியும் மூன்றாம்

கண்டத்தின் முதலும் சேர்வது இரண்டாவது சந்தி. மூன்றாம் கண்டத்தின் இறுதியும் நான்காம் கண்டத்தின் முதலும் சேர்வது மூன்றாம் சந்தி ஆகும்.

**பிறப்பு**

- அருவப் பிறப்பு – சமாதி ஞானம் பெறல். உணர்வு மட்டும் உடம்பு இல்லை.
- உருவப் பிறப்பு – வீட்டுலகை அடைய உணர்வு உள்ளடங்க உடம்போடு பிறப்பெடுத்தல் (எ.கா.புத்தர்)
- காமப்பிறப்பு – உணர்வும் உருவமும் உடையது. (எ.கா) தெய்வம், மக்கள், விலங்கு.

பௌத்த மதம் தெய்வ நிலையைவிட புத்த நிலை உயர்வுடையது என்கிறது. கண்ணகி, அத்தகைய தெய்வநிலை அடைந்த பெண்ணாக மணிமேகலை உருவகப்படுத்துகிறது. கண்ணகியின் நல்வினைப் பயன் முடிவுற்றபின் மீண்டும் பூமியில் பிறப்பெடுக்க வேண்டும் என்றும் மணிமேகலை காப்பியம் சுட்டுகிறது.

**காலம்**

காலமானது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்று வகைப்படும். இம்மூன்று காலங்களில் சார்புகளும் குற்றம், வினைச்செயல், வினைப்பயன் என்ற மூன்று பிரிவுகளில் அடங்குகின்றன.

**ஆன்மா**

ஆன்மா என்ற ஒன்று இல்லை என்பது பௌத்தர்களின் கருத்தாகும்.

**வாய்மைகள்**

பௌத்த சமயம் வாய்மைகள் நான்கென்கிறது. அவை, துக்கம் (நோய்), துக்கத்தோற்றம், துக்க நீக்கம், துக்க நீக்க நெறி ஆகியவை ஆகும்.

- துக்கத்திற்கான காரணங்கள்

உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, பிறப்பு, பிணி, மூப்பு, சாவு, அவலம், அரற்று, கவலை, கையாறு ஆகியவை துக்கத்திற்கான காரணங்கள் ஆகும்.

- துக்கத் தோற்றத்தின் காரணங்கள்

பேதமை, செய்கை, வேட்கை, பற்று, வினைப்பயன் ஆகியவை துக்கத் தோற்றத்தின் காரணங்கள் ஆகும். துக்க சமுச்சயம் என்றும் இதனைக் கூறுவர்.

❖ துக்க நீக்கம்

துன்பத்திற்கும் பிறப்புக்கும் பற்றுடைமையே காரணம் என அறிதல் துக்க நீக்கம் ஆகும். தக்கநிரோதம் என பாலிமொழி கூறுகிறது.

❖ துக்க நீக்க நெறி

இன்பமும் வீடும் பற்றை ஒழித்தலால் கிடைக்கும் என்பது துக்க நீக்க நெறியாகும். இதனை துக்க மார்க்கமென பௌத்தம் கூறுகிறது.

**ஐவகை கந்தங்கள்**

உருவு, நுகர்ச்சி, குறிப்பு, பாவனை, உணர்ச்சி (விஞ்ஞானம்) என கந்தங்கள் ஐவகையாகும். முதல் நான்கு கந்தங்களும் இணைந்து ஐந்தாவது கந்தமான விஞ்ஞானத்தை உருவாக்குகின்றன.

**அறுவகை வழக்கு**

உண்மை வழக்கு, இன்மை வழக்கு, உள்ளது சார்ந்த உண்மை வழக்கு, இல்லது சார்ந்த உண்மை வழக்கு, உள்ளது சார்ந்த இன்மை வழக்கு, இல்லது சார்ந்த இன்மை வழக்கு என வழக்கு ஆறுவகைப்படும். இவ்வறுவகை வழக்குகளும் தொகை, தொடர்ச்சி, தன்மை மிகுத்துரை, இயைந்துரை என்ற நால்வகையோடு இணைந்து (6x4=24 ) இருபத்து நான்கு வழக்குகளாகும்.

❖ தொகை

தொகு பொருட்களின் கூட்டம் தொகையாகும். உடம்பு, நீர், காடு ஆகியவை தொகையாகும். பல்வேறு தாதுக்களின் கூட்டம் உடம்பு. பலசிறு துளிகளில் கூட்டம் நீர். பல ஊர்களின் கூட்டம் நாடு.

❖ தொடர்ச்சி

நெல்வித்திலிருந்து முளையும், முளையிலிருந்து தாளும், தாளிலிருந்து நெல்லும் தோன்றும் தொடர் நிகழ்ச்சியை நெல் என்று கூறுவது தொடர்ச்சியாகும்.

❖ தன்மை மிகுத்துரை

ஒரு பொருளின் ஒரு தன்மையை மட்டும் மிகுத்துரைப்பது. ஒரு பொருள் அழிந்தது, பிறந்தது, முதிர்ச்சியுற்றது என்று கூறப்படுவதில் ஒன்றின்தன்மையை மட்டும் மிகுத்துக் கூறுவது.

❖ இயைந்துரை

வரையறுக்கப்பட்ட பல பொருள் தொகுதி இயைந்துரையாகும். பல நாட்கள் கூடிய ஒருகால எல்லையை வரையறுத்து திங்கள் என்று கூறுவதாகும். வரையறுக்கப்படா பல பொருள் தொகுதியே தொகை என்று முதலில் கூறப்பட்டது. இவையனைத்தும் மனித வாழ்விற்கான வரையறைகள் ஆகும். இவ்வுலகையும் மொழியையும் கடவுள் படைக்கவில்லை. மனிதனே அவற்றினை உணர்ந்து தெளிதல் வேண்டும் என்பது பௌத்த தத்துவம் ஆகும்.

**நான்கு நயம்**

ஒற்றுமை, வேற்றுமை, பிரிவின்மை, இயல்பு என நயம் நான்கு வகைப்படும்.

❖ ஒற்றுமை நயம் – காரண காரியத்தை ஒன்றுபட உணர்தல்.(அரிசி = சோறு)

❖ வேற்றுமை நயம் – காரண காரியத்தை வேறுபட உணர்தல். (அரிசி + நீர் + நெருப்பு = சோறு)

❖ பிரிவின்மை நயம் – விளங்காமை (வெற்றிலை + பாக்கு + சுண்ணாம்பு = சிவப்புநிறம்)

❖ இயல்பு நயம் – இயல்பாய் இருப்பது (நெல் → நெல் முளைதோன்றல்)

நயம் என்பது தனிப்பொருள் அன்று. ஒன்றோடொன்று காரண காரியத் தொடர்புடையது. எனவே எதன் மீதும் பற்றுவைக்கக் கூடாது என்பது நயம் உணர்த்தும் கருத்தாகும்.

**வினாவிடை**

துணிந்து சொல்லல், கூறிட்டுமொழிதல், வினாவினை விடுத்தல், வாய்வாளாமை ஆகிய நான்கும் வினாவிடையாகும்.

❖ துணிந்து சொல்லல் – ஒரு தலையாய் துணிந்து கூறல்

❖ கூறிட்டு மொழிதல் – பல கூறுகளாக்கி ஒவ்வொன்றையும் கூறல்

❖ வினாவினைவகுத்தல் – வினாவிற்கு எதிர்வினா வினாவுதல்

❖ வாய்வாளமை – பேசாதிருத்தல்

இவ்வினாவிடை முறையானது வாதம் புரிந்தற்கு ஏற்றதாகும். இதனை பௌத்தமதம் ஆதரிக்கின்றது. ஆனால் ஜென்மதம் நிராகரிக்கிறது. ‘‘வாழ்க்கையை நேரடியாகப் பாருங்கள். நேரடியாக உணருங்கள். மொழி அநாவசயம். இதுதான் ஜென் தத்துவம் ஆகும். ’’[40]

**பாவனை**

பிணிப்பால் ஏற்படும் கட்டும், பற்றின்மையால் ஏற்படும் வீட்டுலகமும் அவரவரால் ஏற்படுத்திக் கொள்ளப்படுவதாகும். இதற்கு பிறர் காரணமாகார். இதனைப் பாவனை என்பர். பாவனை,

❖ அசுப பாவனை – காமத்தை நீக்கல்

❖ மைத்திர் பாவனை – அனைத்துயிரும் துன்பம், பிணியின்றி இருக்க நினைத்தல்

❖ கருணைப் பாவனை – பிற உயிர்க்கு உண்டாகும் துன்பம் கண்டு இரங்குதல்

❖ முதிதைப் பாவனை – பிறஉயிர்களைக் கண்டு மகிழ்தல்

என நான்கு வகைப்படும். இவற்றில் மைத்தரி, கருணை, முதிதைப்பாவனைகளால் வெகுளி நீங்கும். மேற்குறிப்பிட்ட அறிவுரைகளை அறவணடிகள் கூற, மணிமேகலை கேட்டு, கேட்டதைச் சிந்தித்து, சிந்தித்தவாறு நடந்து, உண்மை தெளிந்தாள். இவ்வறவுரைகள் மணிமேகலை ஆசிரியரால் தமிழ்மொழி மக்களுக்கும் தெளிவாக எடுத்துரைக்கபட்டன. பௌத்த தத்துவம் பரவ இம்மணிமேகலை காப்பியம் வழிகோலியது.

அறவணவடிகள் பௌத்த அறக்கருத்துக்களை எடுத்துக் கூறுவதால் அறமுரைக்கும் மாந்தர் ஆகின்றார். இவரது படைப்பின் மூலம் பௌத்த மதம் பற்றி முழுமையும் அறிய முடிகின்றது. மேலும் அறவணவடிகள் மகாயானப் பிரிவை சார்ந்தவர் என்றும் கூறஇடமுள்ளது. முற்பிறப்பு கொள்கைகள் பற்றி மகாயானப்பிரிவு எடுத்துரைக்கிறது. அறவணவடிகளும் பலரின் முற்பிறப்பைக் கூறுபவராகப் படைக்கப்பட்டுள்ளார். ஒரு வயதான பிக்குவின் தோற்றத்தோடு, கரணம் தொடங்கி பாவனை வரையான கருத்துக்களையும் பன்னிரு சார்புகளை அடிப்படையாகக் கொண்டு எடுத்துரைப்பது ஏற்புடையதாக உள்ளது. மறுபிறப்பு கொள்கைகள் ஏற்றுக் கொள்ளத்தக்கதாய் இல்லையென்றாலும் கதையோட்டத்திற்கும் பௌத்த கொள்கையைப் பரப்புவதற்காகவும் பயன்படுத்தப் பட்டுள்ளன. பல மனிதர்களை அறிந்தவராய் அறவணவடிகள் படைக்கப்பட்டாலும் அவரது முற்பிறப்பு பற்றி கூறாது மற்றவர்களையும் தன் இளமைப் பருவத்திலும் முதுமைப் பருவத்திலும் அறிவதால் மட்டுமே மறுப்பிறப்பு உண்டென மொழிவது இடர்பாடுடையது ஆகும். மணிமேகலை, ஆபுத்திரன், மாதவி, சுதமதி, உதயகுமாரன் போன்றோர் மறபிறப்பு எய்தியதாக மணிமேகலை காப்பியம் சுட்டுவது மகாயானக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டதாக வலியுறுத்துகிறது. அறவணவடிகள் அக்கருத்துக்களை ஏற்றுக் கொள்பவராகவும், அதனைப் பிறருக்கு எடுத்துரைப்பவராகவும் படைக்கப்பட்டுள்ளார்.

**சுதமதி**

மணிமேகலை காப்பியத்தில் சுதமதி, மலர் வனம் புக்ககாதை, பளிக்கறை புக்க காதை, மணிமேகலை தெய்வம் வந்து தோன்றிய காதை, சக்கரவாளக் கோட்ட முரைத்த காதை, துயிலெழுப்பிய காதை ஆகியவற்றில் இடம்பெறுகின்றாள். இவள் அறமுரைக்கும் மாந்தராவாள்.

**சுதமதி வரலாறு**

சுதமதி தன்னைப் பற்றிக் கூறுவதன் மூலம் மலர்வனம் புக்க காதையில் அறிமுகமாகின்றாள். சண்பகாபுரியில் வசித்த கௌசிகன் என்னும் அந்தணனின் ஒரே மகளான சுதமதி சீரோடும் சிறப்போடும் வளர்க்கப்பெற்றாள். எதற்கும் அஞ்சாதவள். தனியாகச் சென்று பூக்கொய்யுமிடத்து, மாருதவேகன் என்னும் வித்தியாதரன் சுதமதியை தன்வயப்படுத்தி பிழைமணம் புரிந்தான். பின்னர் சுதமதியைத் தனியாகக் காவிரிபூம்பட்டினத்தில் விடுத்துச் சென்றான். சுதமதி தன் ஆராயாத துணிச்சலின் மூலம் வாழ்க்கையை இழந்தாள். பின்னர் சமணப்பள்ளி ஒன்றில் அடைக்கலம் புகுந்தாள். சுதமதியின் தந்தையாகிய கௌசிகன் மகளைத் தேடி அலைந்து, காவிரிபூம்பட்டினத்தில் சந்தித்தான். பின்னர் இருவரும் இரந்துண்டு வாழ்கையில், ஒரு பசு கௌசிகனின் வயிற்றைக் குத்திக் கிழித்தது. குடல் சரிய கிடந்தவரை சமணர்கள் காக்க முன்வரவில்லை. சங்க தருமன் என்ற புத்த பிக்குவே அவரது துன்பம் நீக்கினான். பின்னர் பௌத்த சமயப் பெருமையை அறிந்து சுதமதியும் கௌசிகனும் பௌத்தமத்தைச் சார்ந்தனர்.

**உலக அறிவு**

பண்டைக்காலத்தில் பெண்கள் தன் இல்லத்தையும் அதைச் சார்ந்த பகுதிகளையுமே அறிவர். அத்தகைய பெண்ணாக சுதமதியும் இருந்தாள். மாருதவேகனால் ஏமாற்றப்பட்ட பின் அவளது இடமும் பார்வையும் விரிந்து பரந்தது. அவர் காவிரி பூம்பட்டினத்தை முழுமையாக அறிந்து வைத்திருந்தாள். அதனாலேயே மணிமேகலை பூப்பறிக்க உவவனமே சிறந்தது என்றாள். இலவந்தி என்னும் சோலை அரசனுக்கும் அவனைச் சார்ந்தோருக்கும் உரியது. உய்யான வனமலர்களை மனிதர்கள் பறிக்கமாட்டார்கள். சம்பாபதிவனமும், கவேர வனமும் செல்லத்தக்கவை அல்ல. புத்த பீடிகை அமைந்த உவவனம் மலர் கொய்யச் சிறந்தது என்று கூறுவதனால் அவளது உலக அறிவு வெளிப்படும். காமனே வருந்தும் இளமையோளான மணிமேகலை தனியே செல்வது ஆபத்தானது என்பதையும் பட்டறிவால் உணர்த்துகின்றாள்.

**பௌத்த தத்துவம்**

சுதமதி புத்த பீடிகை பற்றிக் கூறுமிடத்து பௌத்ததத்துவமாக,

**'சிந்தை இன்றியும் செய்வினை உறும் எனும்**

**வெந்திறல் நோன்பிகள் விழுமம் கொள்ளவும்**

**செய்வினை சிந்தை இன்று எனின் யாவதும்**

**எய்தாது'** **(மணி. மலர்வனம் புக்ககாதை : 72 – 75)**

என்று கூறப்படுகிறது .மனதோடு பொருந்தாது செய்த முன்வினையும் பின்வந்து பயன் தரும் என்பது மற்ற சமயங்களின் கொள்கை. ஆனால் புத்த மதம் மனதோடு பொருந்தாது முன்செய்த வினை பின்வந்து சிறிதும் பயன்தராது என்கிறது. அதாவது மனம்பொருந்தாது செய்த அறம், பின்னர் அறப்பயனைத் தராது என்கிறது.புத்த பீடிகையில் தூயமனதோடு வைக்கப்பட்ட மலர்கள் அவ்விடத்திலே நிலைக்கும் இயல்பு இத்தத்துவத்திற்கானது ஆகும்.மேலும்,

**'எம்கோன் இயல்குணன் ஏதம்இல் குணப்பொருள்**

**உலக நோன்பின் பலகதி உணர்ந்து**

**தனக்கு என வாழாய் பிறர்க்கு உரியாளன்**

**… … … …**

**காமற் கடந்த வாமன் – பாதம்**

**தகைபா ராட்டுதல் அல்லது யாவதும்**

**மிகைநா இல்லேன்'** **(மணி. காதை . 5 : 71 –80)**

என்றெல்லாம் சுதமதி புத்தரின் பெருமையைப் போற்றுகின்றாள். தன் இறைவன், நற்குணன், நற்சீலன், துன்பத்தின் காரணத்தை உணர்ந்தவன், அதைப் போக்க வழி கூறியவன், தனக்கென வாழாதவன், பிறருக்கென வாழ்பவன், அறநெறியை வலியுறுத்துபவன், மன்மதனை வென்றவன் என்று புத்தரைப் போற்றுகின்றாள். மேலும் கவுந்தியடிகளைப் போன்று புத்தரைத் தவிர வேறு ஒருவரையும் தன்நாப் புகழாது என்பது அவளது தூய்தன்மையையும் மதச்சார்பையும் சுட்டுகிறது.

**யாக்கை நிலையாமை**

சுதமதி அரசனின் மகளாகிய உதயகுமாரனுக்கு யாக்கை நிலையாமை பற்றி அறிவுரை வழங்குகின்றாள். சுதமதியை, அரசமகனுக்கு அறிவுரை வழங்குமளவு உயர் எண்ணமும் கொள்கையும் கொண்டவளாக ஆசிரியர் படைத்துள்ளார். 'மனித உடம்பானது கருமத்தால் உண்டாவது. கருமத்திற்கு விளைநிலைமாக உள்ளது.

அணியப்படுவனவாகிய மலர், சந்தனம் முதலிய மணப்பொருட்கள் நீக்கப்பட்டால் புலால் நாற்றம் வெளிக்காட்டுவது; முதுமை அடைந்து சாகுந்தன்மையது; கொடிய இடமாயிருப்பது ; குற்றங்களைக் கொண்ட கலமாக இருப்பது ; பாம்பு வாழும் புற்றைப் போலச் சினமும் சீற்றமும் தங்குமிடமாய் உள்ளது ; அவலம், கவலை, கையறுநிலை, அழுங்கல் ஆகிய நான்கு நீங்காத நெஞ்சத்தை தன்னிடம் உடையது. அறிவிற் சிறந்தோனே ! மக்கள் உடம்பு இத்தகைய இயல்புடையது என்பதை அறிந்து வெளிப்புற அழகை வியந்து பாராட்டாமல் உடம்பை உள்ளீடாக பார்ப்பாயாக' என்று சுதமதி அறிவுரை கூறினாள். இஃது யாக்கை நிலையாமை பற்றிய முழுமைக் கருத்தாகும். சுதமதி மாதவிக்கு தோழி ஆவாள். இதனால் மணிமேகலை சுதமதியை **அன்னாய்** என்று விளிக்கின்றாள். எனினும் மணிமேகலைக்கும் தோழியாகவே விளங்குன்றாள். மேலும் காம எண்ணத்தோடு வந்த உதய குமாரனுக்கு யாக்கை நிலையாமை பற்றி அறிவுரை வழங்கும் அளவு அறிவும் உடையவள் சுதமதியாவாள்.

சுதமதி, முற்பிறப்பில் வீரை எனும் பெயருடன் மாதவி, மணிமேகலைக்கு சகோதரியாகப் பிறந்தவள். இரவிவர்மன் – அமுதபதியின் புதல்வியாக துச்சய மன்னனின் மனைவியாக வாழ்ந்தவள். மதுவெறியால் யானைக்காலில்பட்டு இறந்தவள். மது அருந்திய தீவினையே இப்பிறப்பில் இவள் அடைந்த துன்பங்களுக்கு காரணமாயிற்று. மது விலக்கப்படவேண்டியது என்பது பௌத்தசமயக் கொள்கையாகும். சுதமதியின் உலகஅறிவும், புத்த மதச்சார்பும் யாக்கை நிலையாமைப் பற்றிய கருத்துக்களும் சிறப்பு வாய்ந்தது. சுதமதி எனும் மாந்தர் படைப்பின் வழி யாக்கை நிலையாமை, மதுவிலக்கு போன்ற அறக்கருத்துக்கள் எடுத்துரைக்கப்பட்டன.

**சாதுவன்**

ஆதிரை பிச்சையிட்ட காதையில் சாதுவன் என்ற மாந்தர் படைப்பு இடம்பெறுகிறது. ஆதிரையின் கணவனான சாதுவன் கற்பில் திரிந்தவன். பரத்தமை ஒழுக்கம் பூண்டவன். இவனது செல்வம் வற்றிய பின், கணிகை அவனை விரட்ட, பொருள் தேடி மரக்கலத்தில் சென்றான். கடலில் மரக்கலம் உடைந்து நாகர்கள் வாழும் பூமியை அடைந்தான். நக்க சாரணர்கள் என்று அழைக்கப்படும் நாகர்கள் மனித ஊன் உண்ணும் கொடியவர்கள். அவர்கள் மொழியில் பேசி, அவர்களுக்கு அறிவுரையும் வழங்குகின்றான். எனவே சாதுவன் அறமுரைக்கும் மாந்தனாகின்றான்.

**நாகர்களுக்கு அறிவுரை**

**'மயக்கும் கள்ளும் மன்உயிர் குறலும்**
**கயக்குஅறு மாக்கள் கடிந்தனர் கேளாய்**
**பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்**
**உறங்காலும் விழித்தலும் போன்றது உண்மையின்**
**நல்அறம் செய்வோர் நல்உலகு அடைதலும்**
**அல்அறம் செய்வோர் அருநரகு அடைதலும்**
**உண்டு என உணர்தலின் உரவோர் களைந்தனர்'(மணி.காதை.16:84-90)**

என்று சாதுவன் அறமற்ற நாகர்களுக்கு அறிவுரை வழங்குகின்றான். அறிவை மயக்கும் கள்ளையும் ஊனுக்காக உயிரைக் கொலை செய்தலையும் அறிஞர்கள் விலக்கினர். உலகில் பிறந்தவர்கள் சாவர். இறந்தவர்கள் மீண்டும் பிறப்பர். இஃது உறங்குவதும் உறங்கி விழிப்பதும் போன்ற உண்மை நிகழ்ச்சியாகும். நல்ல அறங்களைச் செய்வோர் பேரின்பம் தரும் வீட்டுலகம் செல்வர். தீய வினைகளைச் செய்வோர் பொறுத்தற்கரிய துன்பம் தரும் நரகம் செல்வர் என்று சாதுவன் அறம் கூறி நாகர்களை நல்வழிப்படுத்துகின்றான்.

**ஊன் உண்ணுதல்**

ஊன் உண்ணுதல் அறவே கூடாது என்பது பௌத்த சமயக் கொள்கையல்ல.தீமை பயக்கா வண்ணம் ஊன் உண்ணுதல் தீமையல்ல என்று பௌத்த சமயம் கூறுகிறது. "காணாதது, கேட்காதது சந்தேகப்படாதது என்ற மூவகையில் மீனோ புலாலோ உண்பதில் குற்றமில்லை"[41] என்று கூறப்படுகிறது. புத்தர் பன்றிக்கறி உண்டதாகக் கூறப்படுகிறது. "உ.வே.சாமிநாத ஐயர் போன்றவர், புத்தர் உண்டது பன்றிக்கறியில்லை, ஒருவகை நாய்க்குடை (காளான்) என்று எழுதியுள்ளனர்."[42] ஆனால் பௌத்த தத்துவம் ஊன் உண்ணுதலை ஏற்கச் செய்கிறது என்பதற்கு சாதுவனின் அறவுரை அடிப்படைச் சான்றாகும்.

**'மூத்துவிளி மாஒளித்து எவ்வுயிர் மாட்டும்**
**தீத்திறம் ஒழிக' (மணி. காதை. 16 : 116 – 117)**

என்று சாதுவன் நாகர்க்கு கூறிய அறிவுரையானது மூத்த, இறந்த ஊன்களை உண்டல் தவறில்லை என்பதாகும். எனவே ஊண் அறநெறிப்படி உண்பது தவறில்லை என்றாகிறது.

**மதுவொழிப்பு**

மணிமேகலையின் மற்றொரு அறக்கருத்தான மதுவொழிப்பும் சாதுவன் படைப்பின் மூலம் வலியுறுத்தப்படுகிறது. நாகர்களுக்கு மது அருந்துவது அறிவை மயக்கும் என்று அறிவுரை கூறுவதன் மூலம் மதுவொழிப்புப் பற்றிப் பேசப்படுகிறது. சாதுவன், ஊன் உண்ணுதலின் அறமுறை பற்றியும், மதுவொழிப்பு பற்றியும், நிலையாமை பற்றியும் நாகர் இனத்துக்கு எடுத்துக்கூறி ஓர் இனத்தை உய்விக்கின்றான். ஒருகாலத்தில் தீயொழுக்கம் மேற்கொண்டாலும் தன் மனம் திருந்தி, ஓர் இனம் நல்வழிப்பட உதவியமையின் அவன் அறம் உணர்த்தும் மாந்தனாவான்.

**மணிமேகலை**

முதல் மற்றும் துயிலெழுப்பிய காதை தவிர்ந்து மற்ற அனைத்துக் காதைகளிலும் மணிமேகலை எனும் மாந்தர் படைப்பு இடம்பெறுகிறது. கதைத்தலைவி என்பதனால் காப்பியம் முழுவதிலும் இடம்பெறுகின்றாள். இவள் அறம் எடுத்துரைக்கும் மாந்தராகவும் அறவழி வாழ்ந்த மாந்தராகவும் படைக்கப்பட்டுள்ளாள். மணிமேகலை காப்பியத்தில் மணிமேகலை, மாபெரும் பத்தினி கண்ணகியின் மகளாக அறிமுகப்படுத்தப்படுகின்றாள். இதனை,

**‘மாபெரும் பத்தினிமகள் மணிமேகலை**
**அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்**
**திருந்தாச் செய்கைத் தீத்தொழில் படாஅள்’(மணி.காதை.2 : 55-57)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. மணிமேகலை தவநெறிக்கு உரியவளாக மாதவி குறிப்பிடுகின்றாள்.மணிமேகலையும் தவக்கோலம் பூண்டு அந்நெறி வழி ஒழுகினள்.

**சாதியொழிப்பு**

சாத்தனார் சாதியொழிப்பிற்காக மணிமேகலை எனும் மாந்தர்படைப்பை பயன்படுத்தியுள்ளார். பரத்தையர் என்ற சாதியை ஒழிக்க இரண்டு வழிகள் உண்டு. அவை, 1.குலமகளிராதல், 2.துறவியாதல். குலமகளிராதலில் சில நடைமுறைச் சிக்கல்கள் உண்டு. மணிமேகலையின் தாயான மாதவி குலமகளாக முயற்சித்தவள். ஆனால் அதில் தோல்வியுற்றவள். மணிமேகலையும் உதயகுமாரன் மீது விருப்புற்ற மனதினளாகவே இருந்தாள். ஆனால் அரசகுமாரனான உதயகுமாரன் ஒரு பரத்தையர் குலத்தவளை அரசியாக மாற்றுவது சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ள இயலாத காரியம் ஆகும். எனவே மணிமேகலை குலமகளிராகவில்லை. துறவியாதல் சிறப்புக்குரிய செயலாகும். மேலும்

மனதை அடக்கிய உன்னத நிலையும், பிறருக்காக வாழும் வாழ்க்கையையும் பெறமுடியும். இதனால் புகழ் அடைவதோடு சாதியும் அழியும். இதனாலேயே சாத்தனார் மணிமேகலையை துறவியாக்குவதன் மூலம் சாதியொழிப்பைக் கற்பித்தார் என்று கொள்ள இடமுண்டு.

பௌத்தமதத்தில் எம்மதத்தவரானாலும் சமமாகப் பார்க்கப்பட்டனர். எனவேதான் அரசகுடும்பம் முதல் அடிநிலை மக்கள் வரை பௌத்த மதத்தைச் சார்ந்தனர். "மக்களை ஆரியர்கள் சாதி வழியில் பிரித்ததை மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. பல்லாயிரம் ஆண்டுகளாக ஒற்றுமையாயிருந்த மக்களை ஆரியம் பிரித்துப் பார்த்தது. ஆனால் புத்தர் இவைகளையெல்லம் கண்டித்தார். மக்கள் அனைவரும் ஒரு குலமேயென்றும், உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்றவாறு மக்களில் எவரும் இல்லையென்றும் எடுத்துரைத்தார்."[43] மணிமேகலை ஆசிரியரும் இக்கருத்தை மாந்தர் படைப்பின்வழி எடுத்துரைக்கின்றார். மணிமேகலை – மாதவி ஆகியோர் பரத்தை இனத்தவர். சுதமதி அந்தணர் குலத்தவள். இராசமாதேவி அரசகுலத்தவள். எனினும் பௌத்தமதத்தில் இவர்கள் அனைவரும் ஒக்கவே நோக்கப்படுவர். பௌத்தமதம் அடிப்படையில் சாதியொழிப்பு எனும் ஏற்றத்தாழ்வினைக் களையும் அறத்தையும் போதிக்கிறது.

**பசிப்பிணி போக்கல்**

பசிப்பிணி போக்கல் பேரறம் என்று மணிமேகலை என்ற மாந்தர் படைப்பின் மூலம் சாத்தனார் நிறுவுகின்றார். பசிப்பிணி போக்கல் உயர்ந்த அறம் என்பதை சங்க இலக்கியமும் காட்டியுள்ளது. பசிப்பிணியைத் தீர்த்து சிறுகுடி கிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவன் **பசிப்பிணி மருத்துவன்** என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கின்றார். புறநானூற்றில்,

**'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய**

**.... .... ....**

**பசிப்பிணி மருத்துவன் இல்லம்**

**அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே'** **(புறம் : 173)**

என்ற பாடல் பசிப்பிணி தீர்த்தல் பற்றிக் குறிப்பிடுகிறது. சிற்றரசனாகிய பண்ணனை பேரரசனாகிய கிள்ளிவளவன் புகழ்தற்கு காரணம், பசி எனும் பிணி தீர்த்தமையாகும். பசிப்பிணி தீர்த்தல் உயரிய அறம் என்று சங்ககாலம் முதல் இக்காலம் வரை போற்றப்படுகிறது. சாத்தனார்,

**'குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்**

**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்**

**நாண்அணி களையும் மாண்எழில் சிதைக்கும்**

**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்**

**பசிப்பிணி என்னும் பாவி' (மணி . காதை. 11 : 76 – 80)**

என்று பசியைப் பிணி எனவும் பாவி எனவும் விளித்து அதன் இழிநிலை சுட்டுகின்றார். உயர்ந்த குடிப்பிறப்பை அழிக்கும், ஒழுக்கத்தைக் கொல்லும், கல்வி அறிவினை உதறச்செய்யும், நாணத்தை களையும், எழிலைச் சிதைக்கும், மனைவியோடும் மக்களோடும் நடுத்தெருவில் நிறுத்தும் என்று பசியின் கொடுமையை ஆசிரியர் வருணிக்கின்றார். இத்தகைய பசிப்பிணியை நீக்குவோரை வாழ்த்த இவ்வுலகத்தில் வார்த்தைகள் இல்லை என்று ஆசிரியர் கூறுவதன் மூலம் பசிப்பிணி தீர்த்தல் பேரறமாக வற்புறத்தப்படுவதை அறியமுடிகிறது.

மணிமேகலை அத்தகைய பசிப்பிணி நீக்கும் மருத்துவராய் மாறி அறம்புரிந்தனள். மணிப்பல்லவத் தீவிலுள்ள கோமுகி பொய்கையின்று ஆபுத்திரனின் கையிலிருந்த அமுதசுரபி பாத்திரம் மணிமேகலை வசம் வந்தது. அதில் முதல் பிச்சையாக ஆதிரை எனும் கற்புடைப் பெண்ணிடம் உணவு பெற்றாள். அதன் பின் அவள் பாத்திரம் அள்ள அள்ளக் குறையாத உணவை வழங்கியது. முதலில் காயசண்டிகையின் யானைத்தீ எனும் பெரும் பசியைப் (பஸ்மக வியாதி போக்கினாள். பின்னர் உலகவறவியை அடைந்து அங்கு பசியால் வாடியோருக்கும் ஆதரவற்றோர்களுக்கும் நோயாளிகளுக்கும் உணவை வழங்கலானாள். மணிமேகலை,

**'ஆபுத்திரன் கை அமுதசுரபி இஃது**

**யாவரும் வருக ஏற்போர் தாம்' (மணி . காதை. 17 : 95 – 96)**

என்று கூவியழைத்து உணவை வாரிவாரி வழங்கினாள். பசி தீர்க்கும் அறத்தை இனிதே செய்துவந்தாள். 'தானத்தில் சிறந்தது அன்னதானம்' என்பதற்கிணங்க 'எல்லோருக்கும் கொடுமதி' என்று உணவை வாரி வழங்கினாள். கச்சிமாநகர் புக்க காதையிலும் பசிப்பிணி நீக்கிய செய்தி இடம் பெறுகிறது.

**'காணார் கேளார் கால்முடம் ஆனோர்**

**பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்**

**படிவ நோன்பியர் பசிநோய் உற்றோர்**

**மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்**

**பல்நூ றாயிரம் விலங்கின் தொகுதியும்**

**மன்உயிர் அடங்கலும் வந்து ஒருங்கு ஈண்டி' (மணி.காதை.20:222–227)**

**அறச்சாலையாக்கல்**

மணிமேகலை உதயகுமாரனுக்குப் பயந்து காயசண்டிகையின் உருவில் பசிப்பிணி தீர்த்து வந்தாள். ஒரு நாள் அரசனின் சிறைச்சாலை சென்று அங்கு பசியால் வாடியோருக்கு அவர்கள் கைவலிக்கும் அளவுக்கு உணவு வழங்கிக் கொண்டே இருந்தாள். அள்ளஅள்ளக் குறையாத அமுதசுரபியின் இயல்பைக் கண்ட சிறைக்காவலர் அரசனாகிய மாவண்கிள்ளியிடம் சென்று கூறினர் அரசன் உடனே மணிமேகலையைச் சந்தித்து, நீ செய்யும் அறத்திற்கு யான் என்ன பரிசு தர? என வினவினன். மணிமேகலை,

**'சிறையோர் கோட்டம் சீத்து அருள் நெஞ்சத்து**

**அறவோர்க்கு ஆக்கு மது' (மணி . காதை. 19 : 157 – 158)**

என்றாள். அரசனும் சிறைச்சாலையை அறச்சாலையாக மாற்றினான். மணிமேகலை உணவு அளிக்கும் அறத்தோடு அறவோரை உருவாக்கும் அறத்தையும் அறச்சாலைகளை ஏற்படுத்தவும் முனைந்த பெருமைக்குரியவள்.

**நிலையாமையறம்**

மணிமேகலை நிலையாமைத் தத்துவத்தை உணர்ந்ததால் துறவு மேற்கொண்டாள். இதனை சாத்தனார் பலவிடங்களில் குறிப்பிடுகின்றார். மணிமேகலை,

**'பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட்டு இரங்கலும்**

**இறத்தலும் உடையது இடும்பைக் கொள்கலம்**

**மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து**

**மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்' (மணி.காதை. 18: 136 – 139)**

என்று தான் துறவியானதற்கான காரணத்தை உதயகுமாரனிடம் கூறும்போது நிலையாமை பற்றிப் பேசுகின்றாள். உதயகுமாரன் இறந்தவிடத்தும் இக்கருத்தை கூறி அழுகின்றாள். மேலும் உதயகுமாரனுக்கு அறவுரை வழங்குமிடத்தும் நிலையாமை கருத்துக்களைக் குறிப்பிடுகின்றாள். நரைமுடி மூதாட்டியை காட்டி, இவளது இளமை, அழகு, நிறம் முதலியவை போயின. தோள் சுருங்கிற்று ; தலை நரைத்தது ; வேல் போன்ற புருவம் இறால்மீன் வற்றல் போல மாறியது. கண்கள் குழிந்தன ; மூக்கு சீழ் வடிகிறது ; முத்துப் பற்கள் முறை இழந்தன ; இதழ்கள் நாற்றம் மிகுந்தன ; காதுகள் வாடித் தொங்குகின்றன ; கொங்கைகள் பைபோல மாறின ; தோள்கள் தென்னை மடல்போல உள்ளன ; வாழைத்தண்டு தொடைகள் தாழைத்தண்டாய் மாறின ; கால்கள் எலும்பும் தோலுமாய் உள்ளன. மேலும்,

**‘பூவினும் சாந்தினும் புலால்மறைந்து யாத்துத்**

**தூசினும் அணியினும் தொல்லோர் வகுத்த**

**வஞ்சம் தெரியாய்’ (மணி. காதை. 26 : 17 – 69)**

என்று நிலையாமை பற்றிக் குறிப்பிடுகின்றாள். இக்கருத்துக்கள் மணிமேகலை தன்நிலையை உணர்ந்தமையையும் உதயகுமாரனையும் உய்விக்கும் பொருட்டும் அமைந்துள்ளது. பொய்யான காயத்தையும் காற்றடைந்த பையையும் அறிவுக்கண் கொண்டு பார்க்கச் செய்கின்றாள்.

**அன்புடைமை**

எல்லா உயிர்களையும் தம்முயிர் போலப் பேணல் அறமென மணிமேகலை இராசமாதேவிக்கு அறிவுரை கூறுமித்து வற்புறுத்துகின்றாள். மகனின் இறப்புக்காக அழும் இராசமாதேவியை நோக்கி ‘முற்பிறப்பில் உன் மகன் என் கணவனாக இருந்த போது திட்டிவிடம் எனும் பாம்பு தீண்டி இறந்தான். அப்பிறப்பில் அவள் இறந்ததற்காய் நீ எங்கிருந்து அழுதாய். இப்போதும் அவன் உடலுக்காக அழுகின்றாயா? உயிருக்காக அழுகின்றாயா? உடல் வெந்து சாம்பலாகுமாறு நீங்கள் தான் எரித்தீர்கள். உயிரோ வினைவழி சேருமிடம் சென்றிருக்கும். உன் மகன் மீது கொண்ட அன்பை எல்லா உயிர்களிடத்தும் செலுத்து’ என்று கூறுகின்றாள். தன்பெண்டு தன்பிள்ளை என்று இராமல் எல்லா உயிரையும் நேசித்தல் அறமெனக் குறிப்பிடப்படுகிறது.

**தீயறங்கள்**

மணிமேகலை, தீயறங்களைப் பற்றியும் இராசமாதேவிக்கு அறிவுரை வழங்குகின்றாள். காமம், கொலை, கள், பொய், களவு ஆகிய ஐந்தும் தீயறமாக மணிமேகலை சுட்டுகிறது. இல்லறப் பெண்ணான காருகமடந்தை நாடு வளந்திரிந்ததன் காரணமாகப் பொருட்பெண்டிராய் மாறினாள். அவளது மகன் ஓர் அந்தணனால் வளர்க்கப்பட்டான். அவன் பருவம் அடைந்ததும் தன் தாயென அறியாது காருகமடந்தையுடன் கூடினான். பின்னர் உண்மை அறிந்து இறந்துபட்டான். காமம் இத்தகைய இழிநிலைக்கு கொண்டு செல்லும். காமத்தை கைவிடல் அறமாகும். வேடன் ஒருவன், மானை அம்பெய்து வீழ்த்தினான். மானின் வயிற்றினுள் இருந்த மான் குட்டியின் மீது அம்பு பட்டு ,அது வெளியே வந்து இறந்தது .அதனைக் கண்ட வேடன் வருந்தி உயிர் துறந்தான். கொலை தீயறம் என இதன் மூலம் வலியுறுத்தப்படுகிறது. கள்ளை விரும்பி உண்போர் மதியிழந்து யானையின் காலடியில் வீழ்ந்து இறப்பர். இதனை,

**‘கடாஅ யானைமுன் கள்கா முற்றோர்**

**விடாஅது சென்று அதன்வெண்கோட்டு வீழ்வது**

**உண்ட கள்ளின் உறுசெருக்கு’ (மணி. காதை. 23 : 120 – 122)**

என்று மணிமேகலை குறிப்பிடுகிறது. இதனை வலியுறுத்தவே இப்பிறப்பு சுதமதியும் முற்பிறப்பு வீரையுமானவள் கள்ளுண்டு யானைகால்பட்டு இறந்தமை குறிப்பிடப்பட்டுள்ளது. கள்ளானது அறிவை மயக்கி மற்ற எல்லாப் பாவங்களுக்கும் அடித்தளமிட்டு விடும். எனவே கள்ளை அருந்தாமை அறமாகும். பொய்யும் நன்மை தருமெனில் சரியென வள்ளுவர் குறிப்பிட்டாலும் பொய்மை தீமையை அளிக்கும். எனவே பொய்மையைத் தவிர்த்து வாய்மையை மேற்கொள்ளுவது சிறந்த அறமாகும். களவும் எத்தகைய தீமையையும் கொண்டு சேர்க்கும். பிறர் பொருளை விரும்பாமை களவு செய்யாமைக்கான வழியாகும். களவின் தீமையைப் பௌத்த காப்பியமான குண்டலகேசியும் வலியுறுத்துகிறது. சினமும் தீயறமாகும். சினம், தான் சேர்ந்தாரை அழித்துவிடும் தன்மையுடையது. சினம் உள்ளத்தில் தோன்றாமல் அடக்குவர் முற்றும் உணர்ந்த அறிவுடையோர் ஆவர்.

‘‘கருத்துடைமையே நித்தியமான நிருவாண மோட்சத்திற்கு வழி. மடிமையே மரணத்திற்கு வழி கருத்துடையவர் இறப்பதில்லை. மடியையுடையவர் இருக்கும் போதே இறந்தவராவர்’’[44] என்பது மடியை – வறுமையைப் பற்றிய புத்தரின் போதனையாகும். வறுமையுற்றவர்க்கு வேண்டுவன வழங்குவோர் இப்பேருலகில் வாழத் தகுதியுடையோர் ஆவார். சாதியொழிப்பு, சிறையொழிப்பு, பசியொழிப்பு, அன்புடைமை, காமம், கொலை, கள், பொய், களவு போன்ற தீயறங்களை நீக்கல், சினம் நீக்கல், வறுமையொழிப்பு போன்ற அறங்கள் மணிமேகலை மூலம் வலியுறுத்தப்பட்ட அறக்கருத்துக்கள் ஆகும். பௌத்த சமயம் உண்டி கொடுத்தலைப் பேரறமாகக் கருதுகிறது. எனவேதான் புத்தரும் உணவைப் பிச்சையேற்று உண்டார்.

**‘மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே’ (மணி . காதை. 11 : 95 – 96)**

என்ற கருத்து மணிமேகலையின் அடிநாதமாக விளங்குகிறது.

**பௌத்த தத்துவங்கள்**

**‘தானம் தாங்கி சீலம் தலைநின்று**

**போன பிறப்பில் புகுந்ததை உணர்ந்தோள்**

**புத்த தன்ம சங்கம் என்னும்**

**முத்திற மணியை மும்மையின் வணங்கிச்**

**சரணா கதியாய் சரண் சென்று அடைந்த’ (மணி. காதை. 30 : 1 – 5)**

மேற்கூறிய அடிகள் மணிமேகலை முற்பிறப்பு அறிந்து அறவணவடிகளை வணங்கியபோது கூறப்பட்டவையாகும். இவ்விடத்து ஆசிரியர் கூற்றாகத் தானம், சீலம், முத்திறமணி ஆகிய பௌத்த தத்துவங்கள் விளக்கப்படுகின்றன.

**தானம்**

தானம் இரண்டு வகைப்படும். அவை பொருள்களைத் தானம் அளிப்பது (திரவியதானம்), அறத்தினை தானம் அளிப்பது (தருமதானம்) ஆகும். இவற்றில் அறதானம் சிறந்ததாகக் கருதப்படுகிறது. ''தானம் செய்பவன் உள்ளக்களிப்புடன் அமைதி பெறுகிறான். அவனுக்கு கவலையுமில்லை. சஞ்சலமுமில்லை''[45] என்பது புத்தரின் போதனையாகும்.

**சீலம்**

சீலம் என்பது ஒழுக்கத்தைக் குறிக்கிறது. இது ஐந்தொழுக்கங்கள் (பஞ்ச சீலம்), எட்டொழுக்கங்கள் (அஷ்டாங்க சீலம்), பத்தொழுக்கங்கள் (தச சீலம்) என மூன்று வகையாகப் பகுக்கப்படுகின்றன.

1. ''ஓருயிரையும் கொல்லாமலும் தீங்கு செய்யாமலும் இருத்தலோடு அவற்றினிடம் அன்பாக இருத்தல்.
2. பிறர் பொருளை இச்சிக்காமலும் களவு செய்யாமலும் இருத்தல்
3. கற்புநெறியில் சிற்றின்பம் துய்த்தல். அஃதாவது முறைதவறிய சிற்றின்பத்தை நீக்குதல்.
4. உண்மை பேசுதல். பொய் பேசாதிருத்தல்.
5. மயக்கத்தையும் சோம்பலையும் உண்டாக்கும் மதுபானங்களை உட்கொள்ளாமை. இந்தப் பஞ்ச சீலங்கள் இல்லறத்தாருக்கு உரியன.
6. இரவில் தூய்மையான உணவை மிதமாக உண்ணல்.
7. பூ, சந்தனம், வாசனைச் சுண்ணம் , என்ணெய் முதலிய நறுமணங்களை நுகராமை.
8. பஞ்சணை முதலியவற்றை நீக்கித்தரையில் பாய்மேல் படுத்து உறங்குதல். இவை அஷ்டசீலம் என்பர்.
9. இசைப்பாட்டு, கூத்து, நாடகம் முதலிய காட்சிகளைக் காணாதிருத்தல்
10. பொன், வெள்ளி முதலியவற்றைத் தொடாதிருத்தல். இவை தசசீலம் எனப்படும். தசசீலத்தில் ஒழுகும் துறவி சிற்றின்பத்தை அறவே ஒழிக்க வேண்டும்.''[46]

**மும்மணிகள்**

புத்தம் சரணம் கச்சாமி

சங்கம் சரணம் கச்சாமி

தம்மம் சரணம் கச்சாமி

என்பது மும்மணிகள் ஆகும். இதன் பொருளாவது,

புத்தத்தைச் சரண் அடைகிறேன்

சங்கத்தைச் சரண் அடைகிறேன்

தர்மத்தைச் சரண அடைகிறேன்

என்பதாகும். இவையே பௌத்த மதத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஆகும்.

**பௌத்தமதமும் பெண்களும்**

பௌத்தமதம் தொடக்கத்தில் பெண்களை இணைத்துக்கொள்ளவில்லை காலப்போக்கில் பௌத்தமதப்பெண் துறவிகளான பிக்குணிகளுக்கு சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு புத்த மதத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டனர். பிக்குணிகளுக்கான எட்டு விதிகளாவன,

1. ‘‘ஒரு பிக்குணி (பெண்துறவி) ஆண்துறவி பிக்குவிடம் நூறு வயதான வளாயினும் பணிவுடன் வரவேற்று வணங்கி, சேர்ந்து ஒரு நாளே ஆனவராயினும் மதித்து நடக்க வேண்டும்.
2. ஒரு பிக்குணி, துறவிகள் இல்லாத வசிப்பிடத்தில் மழைக்காலத்தைக் கழிக்கக் கூடாது.
3. ஒவ்வொரு 15 நாளுக்கு ஒருமுறை துறவிகளின் குழுவிடம் உண்ணா நோன்பு நாள் உபதேசத்தைப் பெறவேண்டும்.
4. வசிக்கும் காலத்தைக் கழித்த பிறகு, இருமடங்குக் குழுத்துறவிகளிடமிருந்து பார்த்த,கேட்ட, சந்தேகப்பட்ட விஷயங்களின் தெளிவைப் பெறவேண்டும்
5. மதத்தொடர்பான குற்றத்தை எங்கே ஒரு பிக்குணி செய்தாளோ, பதினான்கு நாட்களுக்குரிய தவமுறை பிராயச்சித்தத்தை பிக்கு குழுவிடமிருந்து அறிந்து செய்ய வேண்டும்.
6. இரு ஆண்களுக்கு ஆறு அறிவுகளைப் பெறும் பயிற்சியை ஒரு பிக்குணி முடித்தபோது, அவள் இருமடங்கு பிக்குகளிடமிருந்து உயர் உபதேசத்தைப் பெற வேண்டும்.
7. ஒரு பிக்குணி எக்காரணத்தாலும் எச்சூழ்நிலையிலும் ஒரு பிக்குவை திட்டவோ கோபிக்கவோ கூடாது. பிக்குணிகளை பிக்கு எதிர்த்துப்பேச உரிமை உண்டு.’’[47]

இவ்விதிகள் மணிமேகலைக்கும் உரியதாகும். எனவே தான் சமயக் கணக்கர்களின் திறம் கேட்டு ஆண் உருவான மாதவன் வடிவம் தாங்கிச் செல்கின்றாள். மணிமேகலை ஆசிரியர் சாத்தனார் பெண்நிலை தாழ்ந்திருந்த காலத்துப் பெண்ணை மையமாக வைத்து காப்பியம் படைத்தது புரட்சிக்குரியதாகும். சாதியொழிப்பு, சிறையொழிப்பு, பசியொழிப்போடு பெண்ணிய விடுதலையையும் மணிமேகலை பேசுகின்றது.

மணிமேகலை, சமுதாயம் ஏற்கத்தக்க ஒரு ஒழுங்குமுறை வாழ்க்கையை வாழ விரும்பினாள். துறவு என்பது ஐம்புலனும் அடங்குவதைக் குறிக்கும். அத்தகைய துறவினை மணிமேகலையின் உள்மனம் விரும்பவில்லை. ஒருவரின் இறப்புக்காக அழுவது ஒரு துறவியின் இயல்பு அல்ல. ஆனால் மணிமேகலை தந்தையின் இறப்புக்காகவும் உதயகுமாரனின் இறப்பிற்காகவும் அழுகின்றாள். இறப்பு என்பது மனித வாழ்க்கையில் மாற்ற இயலா இயல்பு என்பது பௌத்த கொள்கை. இதனைவலியுறுத்த கோதமை எனும் மாந்தர் படைப்பு  மணிமேகலையில் இடம்பெறுகிறது. மணிமேகலை இதனையறியாப் பருவத்தினளாகப் படைக்கப்பட்டுள்ளாள். மேலும் அவள் மனம், அவளையும் அறியாது உதய குமாரனிடம் செல்லும் இயல்புடையதாக உள்ளது. இதனை,

**‘கற்புத் தான்இலள் நல்தவ உணர்வு இலள்**
**வருணக் காப்புஇலள் பொருள் விலையாட்டி என்று**
**இகழ்ந்தனன் ஆகி, நயந்தோன் என்னாது**
**புதுவோன் பின்றைப் போனது என் நெஞ்சம்**
**இதுவோ அன்னாய் காமத்து இணுற்கை’ (மணி. காதை. 5 : 86 – 96)**

என்ற மணிமேகலையின் வாக்கு உணர்த்துகிறது.மேலும் உதயக்குமாரன் காஞ்சனன் வாளுக்கு இரையான போது, தான் துறவி என்பதையும் மறந்து அவன் மீது கொண்ட அன்பு வெளிப்படும்படி புலம்புகின்றாள். இவை அனைத்தும் மணிமேகலையின் குற்றங்கள் ஆகும். ஆயினும் இவை விதிஎனும் பெயரால் அஃதுதாவது முற்பிறப்பின் எச்சமாகக்  கருதப்படுகிறது. உதயகுமாரன் மீது மணிமேகலையின் உள்ளம் நிலைத்து விடாமல் தடுக்க மணிமேலா தெய்வம், அவளை மணிப்பல்லவத்தீவிற்கு அழைத்துச் சென்றது. இக்குற்றத்தைத் தவிர்த்து மணிமேகலையின் அனைத்துச் செயல்களும் அறவயப்பட்டவை ஆகும்.

“பவுத்தத்தின் முக்கிய அடையாளம் தாமரை. தாமரை அழகிய மலர். ஆனால், சேற்றில், கலங்கிய குட்டையில், அசுத்தமான நீரில் முளைக்கும் மலர். கலங்கிய நீரிலிருந்து அழகு வெளிப்படும். கம்பீரம் வெளிப்படும். தூய்மை வெளிப்படும்.”[48] மணிமேகலையும் அத்தகைய தாமரைமலர் போன்றவள். உண்மையான நிலையை அடைய விரும்புபவர்களுக்குப் புறச்சூழல் முக்கியம் அல்ல. எங்கே இருக்கிறோம், எப்படி

இருக்கிறோம், என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பது முக்கியமல்ல. மணிமேகலையின் படைப்பும் அத்தகையது ஆகும். இவள் அறங்கூறும் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள். மேலும் சிறைச்சாலையை அறச்சாலையாக மாற்றுமிடத்தும் உதயணனுக்கு அறம் உரைக்குமிடத்தும் அறங்கூறும் மாந்தராகின்றாள்.

**ஆபுத்திரன்**

ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை, பாத்திரமரபு கூறிய காதை, ஆபுத்திரன் நாடு அடைந்த காதை, ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்த காதை ஆகியவற்றில் ஆபுத்திரன் என்ற அறவழி வாழ்ந்த மாந்தர் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஆபுத்திரன், சாலி என்ற அந்தணப்பெண் முறைதவறியதால் பிறந்தவன். நடுக்காட்டில் குழந்தையைப் பெற்றுத் தனியே விட்டுச் சென்றாள். ஒரு ஆ அக்குழந்தையைக் காப்பாற்றியதால் ஆபுத்திரன் எனப்பெயர் பெற்றான். இளம்பூதி என்ற அந்தணன் அக்குழந்தையை வளர்த்து வந்தான். ஒரு நாள் அந்தணர்கள் பூசைக்காக ஆவைப் பலியிட எண்ணினர். ஆபுத்திரன் அப்பசுவைக் காப்பாற்றினான். அதனால் ஊரார் ஆல் வெறுக்கப்பட்டு வளர்ப்புத் தந்தையாலும் துரத்தப்பட்டான். பின்னர் பிச்சையேற்று இயலாதவர்களுக்கு கொடுத்துத் தானும் உண்டு வாழ்ந்தவனுக்குச் சிந்தாதேவி தெய்வம் அமுதசுரபி பாத்திரத்தைக் கொடுத்து வறியோர்க்கு உதவச் செய்தது. இந்திரன் மழை பொழியவைத்து நாடு வளம்பெறச்செய்ததால் அமுதசுரபி பயனற்றுப்போயிற்று. இதனால் சாவக நாட்டிற்கு அமுதசுரபி தேவை எனக் கேள்விப்பட்டு, மரக்கலத்தில் புறப்பட்ட ஆபுத்திரன் ஆளற்ற மணிப்பல்லவத்தீவில் தங்கும்படி ஆயிற்று. அப்பாத்திரம் யாருக்கும் பயன்படாமல் போனதைக் கண்டு மனம் வருந்தி மணிப்பல்லவத்தீவில் உயிர் துறந்தான். மறுபிறப்பில் புண்ணியராசனாய் பூமிச்சந்திர மன்னனுக்கு மகனாய்ப் பிறந்து நாடாண்டு வந்தான். மணிமேகலை அவனின் முற்பிறப்பைப் அறியச் செய்தாள்.

**ஆபுத்திரனும் அறமும்**

**‘அறம் எனப்படுவது யாதுஎனக் கேட்பின்**
**மறவாது இதுகேள் மன் உயிர்க்கு எல்லாம்**
**உண்டியும் உடையும் உறையுளும் அல்லது**
**கண்டது இல்’ (மணி. காதை. 25 : 228 – 231)**

என்ற அடிகள் ஆபுத்திரனுக்கு மணிமேகலை உரைத்தவை. மனிதனுக்கு அடிப்படைத் தேவைகளாக உணவு, உடை, உறையுள் உள்ளது. அதனை மனிதர்கள் எல்லோரும் பெறும்படி செய்வது அறம் என்று கூறப்படுகிறது. ஆபுத்திரன் முற்பிறப்பில் உணவினை

வரையாது வழங்கினான். இப்பிறப்பில் அரசனாக இருப்பதால் உணவு மட்டுமின்றி உடையும் உறைவிடமும் மக்களுக்கு அவனால் வழங்க இயலும். மேலும் ஆபுத்திரன், மணிப்பல்லவத்தீவு சென்று துறவியாக மாற ஆசைகொண்டபோது, ‘‘துயரடையும் நிலையில் உள்ள நாட்டைப் பாதுகாவாமல் நீ உயர்நிலை உலகமான வீட்டுலகத்தை விரும்பிச் சென்றால் உயிர்கள் எல்லாம் துன்புற்று மரணம் அடையும். உனக்கு மட்டும் பேறு தரக்கூடிய நிருவாணத்தை நீ விரும்பினாய். அது புத்த தேவனின் அறம் அன்று. தன்னுடைய உயிர் துன்புற்று வருந்துவதற்கு இரங்காமல் பிற உயிர்களின் துன்பத்தை நீக்கிப் பாதுகாப்பதே புத்த தேவனின் அருளறம்’’[49] என்று அமைச்சர் சனமித்திரன் புண்ணியராசனுக்கு அறம் பற்றி எடுத்து கூறுகின்றார். துறவு என்பது தான், வீடுபேறு அடைய உதவும் கருவி மட்டுமே. ஆனால் மக்களுக்கு ஆற்றும் தொண்டே சிறந்த வீடுபேறு நல்கும் என்று வலியுறுத்தப்படுகிறது.

**வேள்வி எதிர்ப்பு**

ஆபுத்திரன் பசுவை பலியிடும் முறையை எதிர்த்துப் போராடுவதாகப் படைக்கப்பட்டுள்ளான். அஃது பௌத்தசமயத் தத்துவத்தை வலியுறுத்தவும் இந்து மதத்தின் வேள்விகளை எதிர்ப்பதற்காகவும் படைக்கப்பட்டதாகும். இந்து சமய வழிபாடுகள் மிகுந்த பொருட்செலவிலும் இரக்கமற்றதாகவும் காணப்பட்டன. மன்னர்கள் தங்கள் நலனுக்காகவும் குருமார்களின் தூண்டுதலுக்காகவும் பெரிய வேள்விகளை அடிக்கடி செய்தனர். இவற்றில் ஏராளமான உயிரினங்கள் பலியிடப்பட்டன. பெரும் பொருட் செலவுடன் இவை செய்யப்பட்டன. இப்பொருளாதாரச் சுமையை மக்களே தாங்கிக் கொள்ளவேண்டியதாயிற்று. இவற்றையொல்லாம் கவனத்தில் கொண்டால் வேள்வி எதிர்ப்பு, முறையானது என்று கொள்ளக் கூடும். மிருகங்களைக் கொன்று பலியிட்டு யாகம் செய்தால் நரகம் கிட்டும் என்றும் நல்வாழ்க்கை என்பதும் மிருகபலி இல்லாமையே என்றும் பௌத்தமதம் வலியுறுத்துகிறது. இக்கருத்து ஆபுத்திரன் எனும் மாந்தர் படைப்பால் ஆசிரியர் சுட்டுகின்றார்.

**சாதிப்புறக்கணிப்பு**

ஆபுத்திரன் பிறப்பு இழிநிலையுடையது. சாலி என்ற அந்தணப் பெண் ஆபுத்திரனின் தாயாவாள். அவள் முறைதவறியதால் ஆபுத்திரன் பிறந்தான். எனவே அவனது இழிபிறப்பைச் சுட்டியே மக்கள் பழித்தனர். ஆனால் பௌத்தமதம்,

**‘‘பிறப்பால் ஒருவர் தீண்டாப்பாதவர் ஆவதில்லை**

**பிறப்பால் ஒருவர் பிராமணர் ஆவதுமில்லை ’’**[50]

என்ற கருத்தை வலியுறுத்துகிறது. ஆபுத்திரனின் பிறப்பையும் தாயையும் பார்ப்பனன் ஒருவன் ‘புலைமகன் இவன்’ எனப்பழித்துக் கூறினான். இதைக்கேட்ட ஆபுத்திரன், பார்ப்பன குலத்தின் ஆதி தந்தையான வசிட்டனும் அகத்தியனும் பிரமனுக்கும் தேவபரத்தை திலோத்தமைக்கும் பிறந்தவர்கள் என்று கூறி நகைத்தான். “ஜாதியைக் கேட்காதீர். குணம், நடத்தையைக் கேளும். விறகிலிருந்து அக்கினி உண்டாகும். உயர்ந்த பிறப்போ தாழ்ந்த பிறப்போ ஒருவர் அறிவோடிருந்தால் ஒழுக்கத் தோடிருந்தால் அவனே உயர்ந்த ஜாதி”[51] என்பது புத்தர் வாக்காகும். அதன் அடிப்படையில் ஆபுத்திரனும் இழிபிறப்பால் இழிசாதியாயினும் உயர்ந்த குணத்தால் ஒழுக்கத்தால் உயர்பிறப்பைப் பெறுவதாக ஆசிரியர் படைத்துள்ளார்.

- ❖ பசிப்பிணி போக்கல்
- ❖ உடையும் உறையுளும் அளித்தல்
- ❖ தன்நலம் தவிர்த்து பிறர்நலம் பேணல்
- ❖ வேள்வி பலி எதிர்ப்பு
- ❖ சாதிப்புறக்கணிப்பு

ஆகிய அறங்கள் ஆபுத்திரன் படைப்பின் மூலம் வலியுறுத்தப்பட்டுள்ளன. இவற்றைக் கடைபிடித்து வாழ்ந்தமையின் ஆபுத்திரன் அறவழி வாழ்ந்த மாந்தர் ஆவான்.

**கோதமை**

சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதையில் கோதமை எனும் பத்தினிப்பெண் இடம்பெறுகினறாள். சார்ங்கலன் என்னும் சிறுவனின் தாயும் கண் தெரியாத ஒருவனின் மனைவியும் ஆவாள். சார்ங்கலனைப் பேய் ஒன்று தாக்கிக் கொல்கிறது. சம்பாபதி தெய்வத்திடம் தன் மகனின் உயிரைத் திருப்பித்தரும்படி கேட்கிறாள். தெய்வம் தன்னால் அது இயலாது என்பதையும் மற்ற தெய்வங்களாலும் அது இயலாது என்பதையும் கூறுகிறது. பின்னர் கோதமை மனம் தெளிந்து தன் மகனின் இறுதிச் சடங்குகளைச் செய்வதோடு தன் உயிரையும் போக்கிக் கொள்கின்றாள். கோதமையின் வரலாறு மணிமேகலா தெய்வத்தால் மணிமேகலைக்கு நிலையாமையை உணர்த்தக் கூறப்பட்டதாகும்.

இம்மாந்தர் படைப்பு பௌத்தகொள்கையைப் பரப்புவதற்காகப் படைக்கப்பட்டுள்ளது. ஒரு பெண் இறந்த குழந்தையை புத்தரிடம் கொண்டு சென்று உயிர்ப்பிக்குமாறு கூற, அவர் இறவா வீட்டிலிருந்து கடுகு பெற்று வந்தால், உயிர்ப்பிக்குமாறு கூறிய புத்த சாதகக் கதையை நினைவுறுத்துகிறது. இறப்பு என்பது மாற்றஇயலாத நிலை என்பதைப் பௌத்த தத்துவம் கூறுகிறது. “நூறு பிரியமானவரைக் கொண்டவர்கள் நூறு துயரங்களை

அனுபவிக்கின்றனர். ஒரே ஒருவரைப் பிரியமானவராகக் கொண்டவர் ஒரே ஒரு துக்கமே கொண்டார். யாருமே பிரியத்திற்குகந்தவராக இல்லாதோர்க்குத் துக்கமே இல்லை. அவர்கள் துன்பம் சிரமத்திலிருந்து விடுபட்டவராக அமைதியுடன் இருப்பர். ஆசாபாசம், அதற்குரியவர் இல்லாது இருப்போரே நிம்மதியானவர்.''[52] கோதமை இத்தகைய பௌத்ததத்துவத்தைக் கடைபிடித்த பெண்மணி ஆவாள். பற்றற்று இருந்தால் இறப்பிற்காய் வருந்த வேண்டியதில்லை. பற்றற்று இருத்தலும் அறவயப்பட்டதாகும். எனவே கோதமை அறவழியில் வாழ்ந்த மாந்தராகின்றாள்.

**மாதவி**

ஊர் அலர் உரைத்த காதை, மலர் வனம் புக்க பாதை, பாத்திரம் பெற்ற காதை, அறவணர்த் தொழுத காதை, ஆபுத்திரன் நாடு அடைந்த காதை ஆகியவற்றில் மாதவி எனும் மாந்தர் படைப்பு இடம்பெறுகிறது. மாதவி அறத்தின் வழி நடக்கும் மாந்தர் ஆவார். மணிமேகலையின் தாய் மாதவி என்பதைத் தவிர மணிமேகலைக் காப்பியத்தில் மாதவிக்கு முக்கியத்துவம் இல்லை. சாத்தனார் சாதியொழிப்பிற்காக மாதவி எனும் மாந்தரைப் படைத்தார். சாதியப்பகுப்பை பௌத்தமதம் கடிகிறது. எனவே மாதவி அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள். மாதவி பரத்தையர் எனும் இழிசாதியிலிருந்து குடும்பப் பெண்ணாக உயர்ந்தாள். எனினும் குடும்ப வாழ்வு அவளை முழுவதுமாக ஏற்றுக்கொள்ளவில்லை. ஒருவனுக்கு ஒருத்தியாக கோவலனோடு வாழ்ந்தாள். எனினும் அவளது கலையார்வம் அவளை மேடையில் ஏற்றச் செய்தது. மாதவி,

**'வேத்தியல் பொதுவியல் என்று இரு திறத்துக்**
**கூத்தும் பாட்டும் தூக்கும் துணிவும்**
**பண்யாழ்க் கரணமும் பாடைப் பாடலும்**
**தண்ணுமைக் கருவியும் தாழ்தீம் குழலும்**
**கந்துகக் கருத்தும் மடைநூல் செய்தியும்**
**சுந்தரச் சுண்ணமும், தூநீர் ஆடலும்**
**பாயல் பள்ளியும் பருவத்து ஒழுக்கமும்**
**காயக் கரணமும் கண்ணியது உணர்தலும்**
**கட்டுரை வகையும் கரந்துரை கணக்கும்**
**வட்டிகைச் செய்தியும் மலர்ஆய்ந்து தொடுத்தலும்**
**கோலம் கோடலும் கோவையின் கோப்பும்**
**காலக் கணிதமும் கலைகளின் துணிவும்**
**நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த**
**ஓவியச் செந்நூல் உரைநூல் கிடக்கையும்'** **(மணி. காதை. 2 : 18: 31)**

ஆகிய அனைத்து கலைகளையும் கற்றுத்துறைபோகியவள்.எனவே தான் அவள் கோவலனோடு வாழ்ந்த காலத்தும் இந்திரவிழாக்களில் கலை நிகழ்ச்சிகளை நிகழ்த்தியுள்ளாள். இதனை,

**'காவல் தெவதம் தேவர்கோற்கு எடுத்த**

**தீவகச் சாந்தி செய்தரு நல்நாள்**

**மணிமேகலை யோடு மாதவி வாராத்**

**தனியாத் துன்பம் தலைத்தலை மேல்வர' (மணி.காதை. 2: 2 – 5)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. மாதவி மணிமேகலையோடு நாட்டிய நிகழ்ச்சி நடத்த வராததால் ஊரார் அலர் தூற்றினர் என்பது மேற்கூறிய அடிகளுக்குப் பொருளாகும். இதில் இதுவரை ஆடிய மாதவி, தறபோது பெண்ணோடு சேர்ந்து ஆடவேண்டியவள் வரவில்லையே என்ற ஆதங்கம் புலப்படுகிறது. சிலப்பதிகாரத்தும் ஓர் இடத்தில் மாதவி ஊர் மன்றத்தில் நடனமாடியதற்காக கோவலன் ஊடல் கொண்டதாகவும், மாதவி அவ்வூடலைப் போக்கியதாகவும் செய்தி இடம்பெறுகிறது. இதனை நோக்க கோவலனோடு மாதவி வாழ்ந்த காலத்தும் தன் கலையையும் அவள் போற்றி வளர்த்தாள் என்று எண்ணுவதற்கு இடமுள்ளது. இக்கலையால் தான் கோவலனை மாதவி பிரிந்தாள் என்பதும் சிலப்பதிகார கதை. எனவே மாதவியால் கண்ணகியைப்போல குலமகளாய் மட்டுமே வாழ இயலவில்லை. மாதவியின் இத்தோல்வி வாழ்க்கை மணிமேகலையை துறவியாக்குவதற்குத் தூண்டியது. தன்னை மட்டுமின்றி தன் குழந்தையையும் சாதி எனும் சேற்றிலிருந்து காப்பாற்றிய அறமாந்தர் மாதவி ஆவாள்.

பௌத்த காப்பியங்களில் முழுமையாகக் கிடைப்பது மணிமேகலை ஒன்றேயாகும். இஃது முழுமையாக பௌத்த சமயத்தையும் அதன் தத்துவத்தையும் எடுத்துக் கூறுகிறது. பெண்ணுக்கு ஒரளவு உரிமை அளித்த சமயம் பௌத்தம் ஆகும். ஆனாலும் ஆண் வேடம் பூண்டு பெண், சமயத்தைப் பரப்புவதாகப் படைத்து, பெண்ணுக்குரிய எல்லைக்கோட்டை பௌத்தமும் காட்டவே செய்கிறது. மணிமேகலை பல சமுதாயப் புரட்சிகளைச் செய்துள்ளது. சிறையொழிப்பு, சாதியொழிப்பு மட்டுமின்றி பசிப்பிணியொழிப்பு பேசப்பட்டுள்ளது. 'தனிஒருவனுக்கு உணவின்றேல் இச்சகத்தினை அளித்திடுவோம்' என்ற பாரதியின் முழக்கத்தை முன்னதாகவே மணிமேகலையில் காணமுடிகிறது. அறங்களுக்கெல்லாம் தலையாயதாக பசிப்பிணி போக்கல் எனும் அறம் வலியுறுத்தப்படுகிறது.

தொல்காப்பியர் காலத்திலிருந்து போற்றப்பட்ட இந்திர வழிபாடு பக்தி இலக்கிய காலத்தில், தடைசெய்யப்பட்டது என்பர். அதற்கு உதாரணமாக திருமால் கோவர்த்தன கிரியை குடையாகப் பிடித்து இந்திர வழிபாட்டைத்தடுத்தமையைக் குறிப்பிடஇயலும்.

இந்திரன் – அகலிகை கதை மூலமும் இந்திரன் தவறுடையவனாகச் சித்தரிக்கப்பட்டு இந்திர விழா தடை செய்யப்பட்டது. அதேபோல பழமைமிக்க இந்திர வழிபாடு மணிமேகலை காப்பியத்தினாலும் மறைக்கப்பட்டது. இந்திரன் பசிப்பிணி தீர்க்கும் அறச்செயல் செய்பவனை (ஆபுத்திரன்) தடுக்கும் தெய்வமாகவும், வழிபட மறந்தமையின் ஊரையே கடல் கொள்ளச்செய்த அழிவு தெய்வமாகவும் படைக்கப்பட்டுள்ளான். இஃது பௌத்தம் வைதீக சமயங்களை எதிர்த்தமையைக் காட்டுகிறது. சமணத்திலும் வைதீக சமயங்கள் அதிக காழ்புணர்வுக்குரியதாக பௌத்தத்தால் கருதப்பட்டன. பௌத்தத்தை பரப்புதல் என்ற நோக்கம் மணிமேகலையின் பின்புலமாக அமைகிறது. இஃது சமணத்தினை எதிர்க்கும் காலகட்டமாகையால், இதனை எதிர்நிலை என்று குறிப்பிட இயலும்.

## சீவகசிந்தாமணி

சீவகசிந்தாமணி திருத்தக்கத்தேவரால் இயற்றப்பட்ட சுவைமிக்க காப்பியப் படைப்பாகும். திருத்தக்கத் தேவர் இளங்கோவடிகளைப் போன்று இளமையில் சமண சமயத்தைத் தழுவியவர். இவ்வொப்புமை நூற்பகுதிக்குள்ளும் காணக்கிடைக்கின்றன. பதுமையார் இலம்பகத்தில் இடம்பெறும் வழிபற்றிய குறிப்புகளும் நலம்பாராட்டல் நிலையும் சிலப்பதிகாரத்தோடு ஒப்புநோக்கத்தக்கவை. பதுமையார் இலப்பகத்தில் உள்ள மூன்று மந்திரங்கள் என்பது மணிமேகலையோடு ஒப்புநோக்கத்தக்கது. கி.பி.9 ஆம் நூற்றண்டைச்சார்ந்தது. சீவகசிந்தாமணி முதல்நூல் அல்லவென்றும் வடமொழிக் கதையைத் தழுவிய வழி நூல் எனவும் கூறப்படுகிறது. ‘‘வடமொழியில் க்ஷத்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஜீவந்தர நாடகம், ஜீவந்தரசம்பு என நான்கு நுல்கள் உள்ளன. அவைகளெல்லாம் இச்சீவகன் சரிதமே கூறுகின்றன. மஹா புராணத்தின் ஒரு பாகத்தும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீ புராணத்தின் ஒரு பாகத்தும் இச்சரிதம் கூறப்பட்டள்ளது’’[53] என உ.வே.சா. அவர்கள் தமது சீவகசிந்தாமணி முதற்பதிப்பின் முகவுரையில் குறிப்பிட்டுள்ளாா்.

‘‘சீவகசிந்தாமணி தமிழ் இலக்கியங்களில் தலைசிறந்தது. உலகமகா காவியங்களில் இலியாத், ஒடிஸியா என்னும் பிரசித்திப் பெற்றக் கிரீக் நாட்டுக் காவியங்களுக்கு இணையான தமிழ்க் காவியம்’’[54]என ஜி.யு.போப் குறிப்பிடுவார். ஆனால் இலியட், ஒடிஸி ஆகியவை முழுமையான போர்க்காப்பியங்கள். சிந்தாமணியோ **போர்க்காப்பியம்** என்பதை விட **இன்பக்காப்பியம்** என்பது பொருந்தும். இராமாயணம் முழுமையாக இலியட்டை ஒத்து இருக்கின்றது. சீவகசிந்தாமணியின் உட்பகுப்புகளாகிய இலம்பகங்கள் பெண்ணியத் தலைப்புகளாக மரியாதைப் பண்புடையனவாக திருத்தக்கத்

தேவரால் அமைக்கப்பட்டுள்ளன. கோவிந்தை**யார்** இலம்பகம்,காந்தருவதத்தை**யார்** இலம்பகம் என்பதாக அமைகிறது. இதில் நிலைமொழி ஈறு **ஆர்** எனும் விகுதியால் உயர்வு செப்பியது. பெண்மைக்கான உயர்வாக இப்பெயரமைப்பு முறை கருதப்பட்டாலும் நூலின் செய்திகளில் பெண்கள் வெறும் போகப்பொருள்களாகப் படைத்துக் காட்டப்பட்டுள்ளனர்.

சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையார் இலம்பகம், குணமாலையார் இலம்பகம், பதுமையார் இலம்பகம், கேமசேரியார் இலம்பகம், கனகமாலையார் இலம்பகம், விமலையார் இலம்பகம், சுரமஞ்சரியார் இலம்பகம், இலக்கணையார் இலம்பகம், கோவிந்தையார் இலம்பகம், நாமகள் இலம்பகம், மண்மகள் இலம்பகம், பூமகள் இலம்பகம், முக்தி இலம்பகம் எனும் பதிமூன்று இலம்பகங்களைக் கொண்டு மணநூல் எனவும் அழைக்கப்படுகிறது. இதன் ஆசிரியரான திருத்தக்கத் தேவரை, தேவர் திருத்தகு முனிவர், திருத்தகு மகாமுனிவர், திருத்தக்க மகாமுனிகள் என்றும் அழைப்பர்.

**கதைச் சுருக்கம்**

ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தன், அரசி விசயை மீது கொண்ட காமத்தால், அமைச்சன் கட்டியங்காரனின் சூழ்ச்சிக்கு ஆட்பட்டு இறந்தனன். அரசி விசயை மயிற்பொறியில் ஏறி தப்பித்தாள். அவளுக்கு சீவகன் எனும் மகன் தோன்றி கந்துக்கடன்-சுநந்தை எனும் வணிகப்பெருமக்களால் வளர்க்கப்பட்டான். பின்னர் மகளிர் பலரை மணந்து அன்னை விசயையையும் கண்டறிகிறான். விசயை துறவியாக வாழ்கின்றாள். சீவகனும் துறவு பூணுகின்றான். சீவகனின் மனைவியரும் நந்தட்டன் உள்ளிட்ட நண்பர்களும் துறவு பூணுகின்றனர். சீவகன் வீடுபேறு அடைகின்றான்.

**சீவகசிந்தாமணியில் அறமாந்தர்கள்**

சுதன்மர்(அ)கணதரர், சாரணர் ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்களாகவும் சீவகன்,விசயை,சச்சந்தன்,சுரமஞ்சரி ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.

**சுதன்மர் (அ) கணதரர்**

சீவகன் வீடுபேறு அடைதலை சிரேணிக மன்னனுக்கு கூறும் போது சமண அறங்களை சுதன்மர் (அ) கணதரர் கூறுகின்றார். கேவலோற்பத்தி, பரிநிர்வாணம் பற்றிக் குறிப்பிடுகின்றார். கேவலோற்பத்தி என்பது துறவறத்தையும் பரிநிர்வாணம் என்பது முத்தி நிலையையும் குறிப்பதாகும்.

**துறவறம் (கேவலோற்பத்தி,கேவலஞானம்)**

நீக்கவேண்டியவற்றை நீக்கி, கைக்கொள்ள வேண்டியவற்றை கைக்கொண்டு தவம் மேற்கொள்வது துறவறம் என்றும் கேவலோற்பத்தி என்றும் கூறப்படுகிறது. ‘‘சாது தர்மத்தினின்றும் சிறிதும் பிறழாது உபவாசம், பிரார்த்தனை முதலியவற்றையும் உக்கிரமான கடுந்தவங்களையும் மேற்கொள்வார். சுக்கிலத்தியானம் என்னும் கூரிய வாளால் ஞானாவரணீயம், தர்சனாவரணீயம் அந்தராயம், மோகனீயம் என்னும் கொடிய காதி கர்மங்களை அழித்து கடையிலா ஞானம், கடையிலாக் காட்சி, கடையிலா வீர்யம், கடையிலா இன்பம் ஆகிய நால்வகைக் குணங்களைப் பெறுவார். இதுவே கேவல ஞானமாகும்.’’[55] இதனை சீவகசிந்தாமணி,

**‘தெளிவறுத் தெழுவர் பட்டா ரீரெண்மர் திளைத்து வீழ்ந்தார்**
**களிறுகா லுதைப்ப வெண்மர் கவிழ்ந்தனர் களத்தினுள்ளே**
**பிளிறிவீழ் பேடி பெண்ணோ யறுவகைத் துவர்ப்பும் பேசின்**
**அளிபடு சிந்தை யென்னு மாழிவாய் வீழ்ந்த வன்றே’ (சீவக. முக்தி. 3076)**

என்று குறிப்பிடுகிறது. 1. எழுவர்,2. பதினறுவர்,3. எண்மர், 4. நபுஞ்சக வேதம், 5. ஸ்திரீ வேதம், 6.அறு வகைத் துவர்ப்பு ஆகியவை நீக்க வேண்டியவையாகும். இவை நீங்கி வாழ்பவர்கள் கேவல ஞானத்தை அடைவர்.

**1.எழுவர்**

மித்யாத்வம், சம்யக் மித்யாத்வம், சம்யக்த்வ பிரக்கிருதி, அனுந்தானுபந்தி குரோதம், அனுந்தானுபந்தி மானம், அனுந்தானுபந்தி மாயம், அனுந்தானுபந்தி லோபம் ஆகிய எழுவரையும் நீக்கல் வேண்டும்.

- ‘‘மித்யாத்வம் – அருக பகவானின் போதனைகளை நம்பாததாகிய தீக்காட்சிக்குக் காரணமானது. இது அழிந்த பிறகே சம்யக்துவம் தோன்றும்.
- சம்யக் மித்யாத்வம் – நற்காட்சியின் தன்மையும் தீக்காட்சியின் தன்மையும் ஒன்றாகச் சேர்வதற்குக் காரணமாவது. இஃது இனிப்பும், புளிப்பும் சேர்ந்து வேறொரு வகைச் சுவையாவது போன்றது.
- சம்யக்த்வ பிரக்கிருதி – சம்யக்த்வத்தினை அடியோடு கொடுக்கும் தன்மையின்றிச் சில சலனங்களைக் குற்றங்களைத் தோற்றுவிப்பது.
- அனுந்தானுபந்தி குரோதம்
- அனுந்தானுபந்தி மானம்
- அனுந்தானுபந்தி மாயம்

- அனுந்தானுபந்தி லோபம்

இவை நான்கும் மெய்க்காட்சியைக் கெடுக்கும். இவைகளே எழுவர் எனச் சுட்டப்பட்டுள்ளன.

**2.பதினறுவர்**

இருகதி, நாற்சாதி, இருஆநுபூர்வி, வெயில், விளக்கு, பொதுவுடம்பு , நிற்றல், நுணுகல், மூன்று நித்தாதி ஆகிய பதினாறும் நீக்கப்படவேண்டியவை.

**இருகதி :**

இருகதியாவது நரககதி , விலங்குகதியாகும். நரக கதியை நரகாயுள் கர்மம் என்றும் விலங்கு கதியை திர்யக்காயுள் கர்மம் என்றும் கூறுவர்.

**நாற்சாதி :**

1. ஏகோந்திரிய ஜாதிநாமகர்மம் – உயிர் ஓரறிவுடைய இனத்தில் பிறப்பதற்குக் காரணமாவது.

2. த்வீந்திரியஜாதி நாமகர்மம் – உயிர் ஈரறிவுடை இனத்தில் பிறப்பதற்குக் காரணமாவது.

3. திரீந்திரிய ஜாதி நாமகர்மம் – உயிர் மூவறிவுடைய இனத்தில் பிறப்பதற்குக் காரணமாவது.

4. சதுரிந்திரிய ஜாதி நாமகர்மம் - உயிர் நாலறிவுடைய இனத்தில் பிறப்பதற்குக் காரணமாவது.

**இரு அநுபூர்வி**

1. நரககதி அனுபூர்வி நாமகர்மம் – மனித வடிவைத் தரித்த உயிர் நரகத்திற்குச் செல்லும் வழியிலும் மனித உருவமாகவே இருத்தற்குக் காரணமாவது.

2.திர்கதி அனுபூர்வி நாமகர்மம் – விலங்கு கதியில் பிறக்கச் செல்லும் மனித உயிரானது வழியிலும் மனித உருவமாகவே இருத்தற்குக் காரணமாவது.

**வெயில்**

ஆதபநாம நாம கர்மம் – உடல் மிக உஷ்ணமாக இருப்பதற்குக் காரணமாவது. (எ.கா.சூரியன்)

**விளக்கு**

உத்யோத நாம கர்மம் – உடலில் ஒளி தோன்றக் காரணமாவது (எ.கா. மின்மினிப்பூச்சி)

**நிற்றல்**

ஸ்தாவர நாமகர்மம் – ஓரறிவு உயிராகப் பிறப்பதற்குக் காரணமாவது.

**நுணுகல்**

சூட்சும சரீர நாம கர்மம் – கண்ணுக்குத் தெரியாத மிகவும் நுண்ணுடலைப் பெறவதற்குக் காரணமாவது.

**பொதுவுடம்பு**

சாதாரண நாம கர்மம் – ஓர் உடலில் பல உயிர்கள் அனுபவிக்க காரணமாவது இந்தக் கர்மம். அதாவது ஒரே உடலில் பல உயிர்கள் சேர்ந்து இருக்கும். வனஸ்பதி காயமாகிய வாழை, முருங்கை முதலிய மரங்களில் பல உயிர்கள் கூடி அந்த வாழை, முருங்கை முதலானவற்றிலேயே இருக்கும். அந்த மரத்திற்குரிய உயிர் இறக்கும்போது அந்தப் பல உயிர்களும் இறக்கும். அது பிறக்கும் இடத்தில் அந்தப்பல உயிர்களும் பிறக்கும்.

**மூன்று நிந்தாதி**

1. நித்திரா நித்திரை – அதிகத் தூக்கம் வரக்காரணமாயிருப்பது.
2. பிரசலாபிரசலை – உட்கார்ந்து கொண்டே தூங்குதல்,வாயிலிருந்து நீர் வடிதல், உடல் நடுங்குதல் முதலியவற்றிற்கு காரணமானது.
3. ஸ்த்யான க்ருந்தி – தூக்கத்தில் வேலை செய்தல், நடத்தல், வாய் பிதற்றுதல் முதலியவற்றிற்கு காரணமாவது.

**பதினறுவர் தொகுப்பு**

- இருகதி – நரகாயுள் கர்மம் (நரககதி),
  திர்யக்காயுள் கர்மம் (விலங்குகதி)
- நாற்சாதி - ஏகேந்திரிய ஜாதிநாம கர்மம் (one sensed )
  த்வீந்திரிய ஜாதி நாம கர்மம் (two sensed )

திரீந்திரிய ஜாதி நாம கர்மம்(three sensed )

சதுரிந்திரிய ஜாதி நாம கர்மம்(four sensed )

- இருஅநுபூர்வி - நரககதி அனுபூர்வி நாம கர்மம்
  திர்யக்கதி அனுபூர்வி நாமகர்மம்
- வெயில் - ஆதபநாமகருமம்
- விளக்கு - உத்தியோத நாமம்
- நிற்றல் - ஸ்தாவரநாமகருமம்
- நுணுகல் - சூக்குமநாம கருமம்
- பொதுவுடம்பு - சாதாரண நாம கர்மம்
- நிந்தாதி மூன்று - நித்திரா நித்திரை
  பிரசலா பிரசலை
  ஸ்த்யான க்ருந்தி

**3.எண்மர்:**

- அப்ரத்யாக்யான குரோதம்
- அப்ரத்யாக்யான மானம்
- அப்ரத்யாக்யான மாயம்
- அப்ரத்யாக்யான லோபம்
- பிரத்யாக்யான குரோதம்
- பிரத்யாக்யான மானம்
- பிரத்யாக்யான மாயம்
- பிரத்யாக்யான லோபம்

இவையே எண்மர் எனக் குறிப்பிடப்படுகிறது. முதல் நான்கும் இல்லற நெறியைக் கொடுக்கும். அடுத்த நான்கும் துறவற நெறியைக் கொடுக்கும்.

4. **நபுஞ்சவேதம்** எனப்படும் பேடியாலும் கேவலஞானம் கெடும்
5. **ஸ்திரீ வேதம்** எனப்படும் பெண்ணாலும் கேவலஞானம் கெடும்
6. **அறுவகைத்துவர்ப்பு**

- ஹாஸ்யம் – சிரித்து ஏளனம் செய்தலுக்கு காரணமாவது.
- ரதி – உறவினரிடம் விருப்பத்தை உண்டாக்குவது
- அரதி – உறவினரிடம் வெறுப்பை உண்டாக்குவது

- சோகம்– பொருள் இழப்பினால் தோன்றும் துயர மனநிலையைத் தோற்றுவிப்பது.
- பயம் – அச்சம் தோன்றக் காரணமாவது.
- ஜுகுப்சை – அருவருப்புக்கு காரணமாவது.”[56]

இவையே 1.எழுவர், 2.பதினறுவர், 3.எண்மர் 4.நபுஞ்சக வேதம், 5.ஸ்திரிவேதம், 6. அறுவகைத் துவர்ப்பாகக் கணதரர் குறிப்பிடுகின்றார். மேலும்,

**‘புணிரிபோற் சிறுபுன் கேள்விப்படையொடு புகைந்து பொங்கி**
**உணர்வொடு காட்சிபேறென் றிடையுறு கோக்க ளேற்றார்**
**இணரெரி முழங்க மன்ன சுக்கிலத் தியான மென்னும்**
**கணையெந் துகைப்ப வீழ்ந்து காற்படை சூழப்பட்டார்’(சீவக. முத்தி: 3081)**

என்று குறிப்பிடுகின்றார். அஃதாவது, உணர்வு, காட்சி, பேறு என்னும் தீயவைகளை அழிக்க தியானம் உதவும் என்று அறிவுறுத்துகின்றார்.

**உணர்வு**

ஞானாவரணீய கர்மத்தின் உட்பிவுகள் ஐந்தும் உணர்வு எனக் குறிப்பிடப்படுகின்றன.

- ‘‘மதிஞானாவரணீயம் – இயல்பாக அறியும் அறிவை மறைப்பது.
- சுருதஞானாவரணீயம் – நூல் அறிவைப் பெறமுடியாதவாறு தடுப்பது.
- அவதி ஞானாவரணீயம் – முற்பிறப்பை அறியும் அறிவை மறைப்பது.
- மனப்பர்யாய ஞானாவரணீயம் – பிறருடைய மனத்திலுள்ளவற்றை அறியமுடியாதவாறு தடுப்பது.
- கேவலஞானவரணீயம் – உலகில் உள்ள எல்லாவற்றையும் மூன்று கால ஞானத்தையும் அறிய முடியாதவாறு மறைப்பது.

**காட்சி**

தர்சனாவரணீய கர்மத்தின் உட்பிரிவுகளில் நான்கு, காட்சி எனப்படுகிறது.

- சக்சு தர்சனாவரணீயம் – கண்களால் காணும் காட்சியை மறைப்பது
- அசக்சு தர்சனாவரணீயம் – மெய், வாய், மூக்கு, செவி ஆகியவற்றால் அறிதலை மறைத்தல்.
- அவதி தங்சனாவரணீயம் – அவதி ஞானத்தால் காணும் காட்சியைத்தடுப்பது.
- கேவல தர்சானவரணீயம் – கேவல ஞானத்தால் காணும் காட்சியைத் தடுப்பது.

**பேறு**

இன்பம் அனுபவிக்கவொட்டாது தடுக்கும் அந்தராய கர்மம் ஐவகைப்படும். இஃது பேறு எனப்படும்.

- தானாந்தராயம் – தானம் கொடுக்க விரும்பினாலும் தடுக்கும் தன்மையது
- லாபாந்தராயம் – தொழிலில் லாபம் கிடைக்காமல் தடுப்பது.
- போகாந்தராயம் – உணவு, வெற்றிலை முதலியவற்றை உண்டு அனுபவிப்பதைத் தடுப்பது.
- உபபோகாந்தராயம் – மனைவி, வீடு முதலியவற்றை அனுபவிக்கவிடாது தடுப்பது
- வீர்யாந்தரயாம் – உடல் சக்தி குறைவாக இருப்பதற்கு காரணமாவது."[57]

இத்தகைய உணர்ச்சி, காட்சி, பேறு அகியவற்றையும் நீக்கினால் (கேவலோற்பத்தியை) சிறந்த துறவு நிலையை அடைய இயலும்.

**பரிநிர்வாணம் (முக்தி நிலை)**

முக்திநிலை எனப்படும் பரிநிர்வாணத்தை அடைய மேற்குறிப்பிட்ட துறவு நெறிகளில் சிறந்து விளங்க வேண்டும். அவ்வாறு கேவல ஞானத்தைப் பெற்றால் நரககதி, விலங்குகதி மக்கட்கதி, தேவகதி எனும் நாற்கதிகளைத் தவிர்த்து வீட்டுலகை அடைய இயலும் என செய்யுள்கள் 3101 – 3118 வரையில் உள்ளவற்றில் சாரணர் எடுத்துரைக்கின்றார். துறவுநிலை, முக்திநிலை பற்றி எடுத்துரைப்பதால் சுதன்மர் (அ) கணதரர் அறமுறைக்கும் மாந்தராவார். மேலும் நந்தட்டன், தோழன்மார், சீவகனின் தேவியர் வீடுபேறு அடைதலை செய்யுள்கள் 3119 முதல் 3134 வரை கூறுகின்றன. செய்யுள்கள் 3135 – 3142 வரையும் தேவருலகச் சிறப்புக் கூறப்படுகிறது.

**சாரணர்**

சாரணர் சீவகனுக்கு முற்பிறப்பை அறிவுறுத்தி அறமும் உரைக்கின்றார். பிறப்பின் அருமை, நிலையாமை, நரககதி – விலங்குகதி – மக்கட்கதி – தேவகதி துன்பங்கள் , நற்காட்சி, சீலம், தானம், தானப்பயன், சீலப்பயன், காட்சிப்பயன் பற்றிக் கூறுகின்றார். இவையாவும் சமண அறங்களாகும்.

**பிறப்பின் அருமை**

மனித உயிராய்ப் பிறத்தல் அரிது. அதனினும் ஊனமின்றி பிறத்தல் அரிது என்பதாகப் பிறப்பின் அருமை கூறப்படுகிறது. திரிகடுகம்,

**‘பெய்ப் பிறப்பிற் பெரும்பசியும் பாஅய்**
**விலங்கின் பிறப்பின் வெருவும் – புலம்தெரியா**
**மக்கள் பிறப்பின் நிரப்பிடும்பை இம்மூன்றும்**
**துக்கப் பிறப்பாய் விடும்’ (திரிகடுகம். 60)**

என்று கூறுகிறது. பேய்ப்பிறப்பு பசியாலும், விலங்கு பிறப்பு அச்சத்தாலும், மனிதப்பிறப்பு வறுமையாலும் கொடுமையுடையது எனக் கூறப்படுகிறது ஆனால் சமண சமயச் சாரணர் பிறப்பு அருமையானது என்று கூறுகின்றார். மனிதப் பிறவியின் அருமை குறித்து,

**‘பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட்**
**டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி**
**அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதால்**
**பெரிய யோனிகள் பிழைத்திவன் மானிடம் பெறலே’ (சீவக. முக்தி: 2749)**

என்று சாரணர் குறிப்பிடுகின்றார். தென்கடலில் போட்ட கழி வடகடலில் உள்ள நுகத்தடியில் சேருவது போல அருமை வாய்ந்தது பிறப்பு என்கின்றார். மேலும் நன்னாட்டிலும், நல்ல குலத்திலும், உறுப்புக் குறைதலின்றியும், இறைவனாகிய அருகனைத் துதிக்கும்படி பிறத்தலே நற்பிறப்பு (செய்: 2749-2753) என்றும் கூறுகின்றார்.

**நிலையாமை**

மனித உடல், கரு உருவாதல் முதல் முதுமை காலம் வரை எப்போது வேண்டுமானாலும் அழியும் இயல்புடையது. இதனை,

**‘இன்ன தன்மையி னருமையி னெய்திய பொழுதே**
**பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென வயிற்றகம் பொருந்தி**
**மின்னு மொக்குளு மெனநனி வீயினும் வீயும்**
**பின்னை வெண் ணெயிற் றிரண்டபின் பிழைக்கவும் பெறும்’(சீவக.முக்தி:2754)**

என்று சாரணர் குறிப்பிடுகின்றார். அஃதாவது கரு உருவாகும் போதே இறத்தலை இச்செய்யுள் குறித்தது. கரு உருவாகி இடையில் இறத்தலும், பிறந்து இறந்தாலும், பெயரிடும்போது இறந்தலும், விளையாடும் பருவத்தில் இறந்தலும், கல்விகற்கும் பருவத்தில் இறத்தலும் காளைப் பருவத்தில் இறந்தலும், போகனுகர்ச்சி காலத்தில் இறத்தலும், புதல்வரைக் கண்டு இறத்தலும், குதிர்ந்து இறத்தலும் (செய்.2754 - 2761) உண்டு என உடலின் நிலையமையைச் சாரணர் கூறுகின்றார்.

**நாற்கதி**

நரககதி விலங்கு கதி, மக்கட்கதி, தேவகதி எனும் நாற்கதியுள்ளும் துன்பம் நிறைந்துள்ளது. இதனையே நீலகேசியில் அறமுரைக்கும் மாந்தரான முனிச்சந்திரரும் கூறுகின்றார். சீவகசிந்தாமணியில் நரககதி துன்பம் பற்றி 2762 – 2676 வரையிலான செய்யுள்களும், விலங்கு கதிதுன்பம் பற்றி 2777 – 2789 வரையிலான செய்யுள்களும், மக்கட்கதி துன்பம் பற்றி 2790 – 2799 வரையிலான செய்யுள்களும் தேவகதி துன்பம் பற்றி 2800 – 2811 வரையிலான செய்யுள்களும் எடுத்துரைக்கின்றன. இவற்றைச் சாரணர் கூறுவதாக உள்ளது.

**நற்காட்சி**

அருகனின் அடியேத்தினால் ஐந்தும், ஆறும் ஒன்பதுமாகி பொருள்கள் தெளியும் என்பதை,

**'மன்ற னாறு மணிமுடியேன் மலிந்த சூளா மணி போலும்**
**வென்றோர் பெருமா னறவாழி வேந்தன் விரிபூந் தாமரைமேற்**
**சென்ற திருவா ரடியேத்தித் தெளியும் பொருள்க ளோரைந்தும்**
**அன்றி யாறு மொன்பானு மாகு மென்பா ரறவோரே' (சீவக.முக்தி : 2814)**

என்ற செய்யுள் வழி சாரணர் கூறுகின்றார். இதுவே நற்காட்சியாகும். ''ஒன்பது பொருள்களின் உண்மையை அறிந்து கொள்வது நன்ஞானம் என்றும் இவற்றின் தன்மையை ஐயப் பாடின்றி உணர்ந்து கொள்வது நற்காட்சி என்றும், நற்ஞானம், நற்காட்சி இரண்டையும் ஒரு தன்மைத்தாக மனத்திற் கொண்டு ஒழுகுவது நல்லொழுக்கம் என்றும் கூறப்படும்.''[58] இதனை சீவகசிந்தாமணி,

**'மெய்வகை தெரிதல் ஞானம் விளங்கிய பொருள்கள் தம்மை**
**பொய்வகை இன்றி தேறல் காட்சி ஐம்பொறியும் வாட்டி**
**உய்வகை உயிரைத் தேயா தொழுதல் ஒழுக்கம் முன்றும்**
**இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியும் என்றான்'**

(சீவக.கேமசேரி:1436) என்று கூறுகிறது. ஐந்து, ஆறு, ஒன்பது பொருள்களைப் பற்றி ''ஐந்தினைப் பஞ்சாஸ்திகாயமென்றும், ஆறினை ஷட் திரவிய மென்றும், ஒன்பதினை நவபதார்த்த மென்றும் கூறுவர் வடநூலார்.''[59]

**ஐந்து (பஞ்சாஸ்திகாயம்)**

1. உயிர் (ஜீவன்) – உயிர் பகுப்பு, நாற்கதி அடைதல் பற்றியது.
2. உயிரல்லது (அஜீவன்) – புத்கலம், தர்மம், அதர்மம், காலம்,ஆகாயம் ஆகியவை உயிரல்லது.

3. புத்கலம் – ஐம்புலனும் அதனால் அறியப்படுதலும்
4. தர்மம்
5. அதர்மம்

**ஆறு (ஷட்திரவியம்)**

1. உயிர்
2. உயிரல்லது
3. புத்கலம்
4. தர்மம்
5. அதர்மம்
6. காலம்

**ஒன்பது (நவபதார்த்தம்)**

1. உயிர் (ஜீவன்)
2. உயிரல்லது (ஆஜீவன்)
3. புண்ணியம்
4. பாவம்
5. ஊற்று (ஆஸ்ரவம்)
6. செறிப்பு (ஸம்வரை)
7. உதிர்ப்பு (நிர்ஜரை)
8. கட்டு (பந்தம்)
9. வீடு (மோக்ஷம்)

இவை தெளிதல் நற்காட்சியாகும் என சாரணர் கூறுகின்றார்.

**சீலம்**

ஒழுக்கம், உணர்வு கெடுதலும், கள்ளுண்ணல், தேனுண்ணல், ஊன் உண்ணல் ஆகிவற்றை தவிர்த்தலும் சீலமாகும். இதனை,

**'ஒழுக்கமே யன்றித் தங்க ளுள்ளுணர் வழிக்கு மட்டும்**
**புழுப்பயி றேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி**
**விழுப்பய னிழக்கு மாந்தர் வெறிவிலங்கென்று மிக்கார்**
**பழித்தனது வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் சென்றான்'(சீவக.முத்தி:2822)**

என்று சாரணர் கூறுகின்றார். தானம் (செய். 2823 - 2828) , தானப்பயன் (செய்.2829 - 2842), சீலப்பயன், காட்சிப்பயன் (செய்.2843) ஆகியவையும் சாரணரால் எடுத்துரைக்கப்பட்டது.

**வீடுபேறு**

> **‘உன்பொரு ளிதுவென உணர்தன் ஞானமாம்**
> **தெள்ளிதி னப்பொரு டெளிதல் காட்சியாம்**
> **விள்ளற விருமையும் விளங்கத் தன்னுளே**
> **ஒள்ளிதிற் றரித்தலை யொழுக்க மென்பவே’ (சீவக.முக்தி: 2845)**

என்று ஞானம், காட்சி, ஒழுக்கம் முடையார் வீடுபேறு அடைவர் என்று சாரணர் கூறுகின்றார்.சமணசமயத்தின் வழி பிறப்பின் அருமையையும் நிலையாமையறத்தையும் நாற்கதி துன்பங்களையும், நற்காட்சி, சீலம், தானம், தானப்பயன், சீலப்பயன், காட்சிப்பயன், வீடுபேறு ஆகியவற்றைப் பற்றி எடுத்துரைத்ததால் சாரணர் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.

**சீவகன்**

சீவகன், சச்சந்தன் - விசயை என்போருக்கு மகனாக அரசர்குலத்தில் பிறந்து ஊழ்வினையால் கந்துக்கடன் எனும் வணிகனின் மகனாக வளர்ந்து, தனது வீரத்தால் நாட்டைப் பெற்று, ஞானம் கேட்டு துறவு மேற்கொண்டு தேவருலகையடைந்து பின்னர் வீடுபேறு எய்தினான். இவன் அறவழியில் வாழ்ந்த மாந்தராவான்.

**சீவகனின் பண்புநலன்கள்**

சீவகன், கண்ணனோடு ஒப்பிடத்தக்கவனாகவும், பசிப்பிணி தீர்ப்பவனாகவும், கடமையுணர்வு மிக்கவனாகவும், கருணை மறவனாகவும், ஆராயும் அறிவு மிக்கவனாகவும், பல்கலை வல்லுநனாகவும், கல்வி, வீரம், வெற்றியில் சிறந்தவனாகவும், சிறந்த அரசனாகவும், முழுமையான மனிதனாகவும் திருத்தக்கத்தேவரால் படைக்கப்பட்டுள்ளான்.

> **‘அருள்வலி யாண்மை கல்வி யழகறி விளமை யூக்கம்**
> **திருமலி யீகை போகந் திண்புகழ் நண்பு சுற்றம்**
> **ஒருவரிவ் வுலகில் யாரே சீவக னொக்கு நீரார்’ (சீவக. குணமாலை: 1165)**

என்ற அடிகள் சீவகனின் பண்புநலன்களைச் சுட்டுவதாக அமைகின்றன.

**பசிப்பிணி தீர்த்தல்**

உலோகமாலன், சீவகனின் ஆசிரியர் ஆவார். இவர் வாரணாசிஅரசர் ஆவார். உரியகாலத்து மகனிடம் நாட்டை ஒப்படைத்து விட்டு துறவறம் பூண்டவர். தீவினையின் காரணமாக யானைத்தீ எனும் நோய் அவரைத் தீண்ட, அந்நோயை சீவகனின் வளர்ப்புத் தந்தை கந்துக்கடன் பசிநீங்க உணவிட்டுப் போக்கினார். இதனால் பசிப்பிணித்தீர்த்தவர் கந்துக்கடனேயாகின்றார். ஆனால் இப்பகுதிக்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர், "வேழவெந்தீயின் நீங்கி என்றும் (401) யானைத்தீ வட்க என்றும் (403) இருமுறை வருவதலால், இவனிருக்கின்ற மனையாதலின் இவனைக் காண்பதற்கு முன்னே குறைந்து, இவனைக் கண்டபின் பொன்றக்கெட்டது"[60] என்கின்றார். இதில் **இவன்** என்றது சீவகனைக் குறித்தது. எனவே பசிப்பிணி தீர்த்தவன் சீவகனாகின்றான். **பஸ்மகவியாதி** என்று ஸ்ரீபுராணம் குறிப்பிடும் யானைத்தீ, எனும் நோயைப் பற்றி மணிமேகலையும் குறித்துள்ளது.

**கருணைமறவன்**

கோவலர்களின் ஆக்கவர்ந்த வேடர்களைக் கொல்லாது ஆனிரை மீட்ட கருணை மறவனாக சீவகன் திகழ்ந்தான். அந்தணர்களின் வீட்டில் உள்ள கலத்தின்கண் இருந்த உணவை நாயொன்று உண்டமையின், அந்தணர்களால் அந்நாய் அடிக்கப்பட்டு குறையுயிராக வீழ்த்தப்பட்டது. அந்நாயின் காதுகளில் இப்பிறவியின் துன்பம் நீங்கி மறுபிறப்பு எய்த மந்திரம் ஓதினான். இதனால் அந்நாய் சுதஞ்சனன் எனும் தேவனாக வெள்ளிமலையில் பிறப்பெடுத்தது. சீவகன் எவ்வுயிருக்கும் இரங்கும் கருணை மறவனாகத் திகழ்ந்ததை இந்நிகழ்வுகள் கொண்டு அறியமுடிகிறது. சமணம் எவ்வுயிருக்கும் அன்பு காட்டவேண்டுமென்று கூறுகின்றது.

**கல்வியறிவு**

சீவகன் பல்கலையறிவு மிக்கவனாகத் திருத்தக்கத்தேவரால் படைக்கப்பட்டுள்ளான் கல்வி, கேள்வி, வீரம், போர்முறைகள், இசையறிவு, ஆராய்ந்து தெளிதல், பாம்பிலக்கணம் அறிதல், யானையிலக்கணம் அறிதல் போன்ற பல்கலையிலும் சீவகன் மிக்கோனாய்த் திகழ்ந்தான். இதில் கல்வியறிவு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். சமணம், கல்வியைக் கற்றுக்கொடுப்பதையும் கல்வி கற்பதையும் **ஸ்வாத்யாம்** எனும் அகத்தவமாகப் போற்றுகிறது. சீவகன், உலோகமாபாலனிடம் கல்வி கற்றதை நாமகள் இலம்பகம் கூறுகிறது. கல்விக்கு தெய்வமாக சரசுவதியைக் குறிப்பர். சரசுவதியை சமணர்கள் **சுருதிதேவி** என்றும் **வாக்தேவி** என்றும் குறிப்பிடுகின்றனர். மேலும் "அவர்கள்

கலைமகளை ஜின ஐஸ்வர்யா என்றும் ஜினவாணி என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். சமஸ்த வித்யா தேவியாருடனாய மகா சரஸ்வதி என்று ஒரு சமணச் சிற்பத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அச்சிற்பத்தில் கலைமகன் பதினாறு பரிவார தேவியருடன் காட்சியளிக்கிறாள். நடுவில் இருக்கும் கலைமகளை மகா சரவஸ்வதி என்பர். பக்கத்துக்கு எட்டுபேர் வீதம் இருபக்கத்திலுமாக 16 வித்யா தேவிகளுடன் அன்னை காட்சியளிப்பதையே மேற்கண்டவாறு கூறுகின்றன.''[61] சீவகன் அத்தகைய வித்யாசரசுவதியை மணந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. அஃ;தாவது கல்வியறிவில் நிறைந்தவனாக ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ளான்.

**போரியல் அறிவு**

சீவகன், படைக்கலன்களைக் கையாள்வதில் சிறந்த தேர்ச்சி பெற்ற வீரனாகத் திகழ்ந்தான். சீதையின் பொருட்டு வில்லைமுறித்த, ஏழுமராமரங்களைத் துளைக்கும் வில்வித்தை வல்லவனான இராமனை நிகர்த்தவனாகச் சீவகன் படைக்கப்பட்டுள்ளான். மாமரத்து கனியைப் பறித்துக் கொண்டு வில்லினின்று புறப்பட்ட அம்பு மீண்டும் சீவகன் கையை அடைந்தது என்று கூறுவதன் மூலம் சீவகனின் வில்வித்தைத்திறம் போற்றப்படுகிறது. போர் முறைகளை விசயன் உள்ளிட்டோருக்கு கற்பிக்கும் அளவு அதில் தேர்ச்சியுள்ளவனாக சீவகன் திகழ்கின்றான். போர்த்தொழிலில் பஞ்சகிருத்தியம் இன்றியமையாததாகக் கூறப்படுகிறது. அதனை அறிந்தவனாகவும் சீவகன் இருந்தான். பஞ்சகிருத்தியம் என்பது வினை என்பதன் வடமொழியாக்கமாகவும் "தொடையும் விலக்குஞ் செலவுஞ் சேமமும் தவிர்த்து வினை செயலு மெனவை வினையாம்''[62] என்பதாகக் கூறப்படுகிறது.

1. தொடை – எதிர்வரும் பாணத்தைத் தவிர்த்தல்.
2. விலக்குதல் – எதிர்வரும் பாணத்தை வெட்டுதல்.
3. செலவு – பாணம் எய்தல்.
4. சேமம் – பாணத்திடமிருந்து தன்னைக்காத்தல்.
5. தவிர்து வினைசெயல் – எதிர்பாணம் தொடுத்தல்.

இந்நிலை எல்லா போர்க்கருவிகளுக்கும் உரியதாகக் கூறப்படுகிறது. போர், அறசறமாகும். இதைத் தவிர்க்கும்படி சமணம் கூறுகிறது.

**நிலையாமை**

சீவகன், நிலையாமை பற்றிக் கூறுவதாக 1097, 1574 – 1578, 1583 – 1585 ஆகிய செய்யுள்கள் அமைகின்றன.

**'கட்டுயி லனந்தா போலக் கதிகளுட் டோன்று மாறும்**

**விட்டுயிர் போகு மாறும் வீடுபெற் றுயரு மாறு**

**முட்பட வுணர்ந்த யானே புள்குழைந் துருகல் செல்லே**

**எனப்பக வனைத்து மார்வ மேதமே யிரங்கல் ' (சீவக.குணமாலை:1097)**

இவ்வாறு உறக்கமும் சாக்காடும் ஒக்க நோக்கப்படுதலை வள்ளுவரும்,

**'உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி**

**விழிப்பது போலும் பிறப்பு' (குறள். 339)**

என்கிறார். மேலும்,

**'என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சிமெத்திப்**

**புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேயந்திட்**

**டொன்பது வாயி லாக்கி யூன்பயில் குரம்பை செய்தான்**

**மன்பெருந் தச்ச னல்லன் மயங்கினார் மருளவென்றான்' (சீவக.கனக:1577)**

என்றும் நிலையாமைப் பற்றி சீவகன் குறிப்பிடுகின்றான். இதன் பொருளாவது, ''தச்சன் உதிரத்தைத் தோய்த்து நரம்பாலே என்பினைக் கட்டித் தசையை அப்பி பின்புற மறையத் தோலைப் போர்த்து அப்புறம் பொலிவுபெறும்படி மயிராலே வேய்ந்து ஒன்பது வாயிலாக்கி நன்றென்று மயங்கினார் மருளக் குரம்பைச் செய்தான். ஆதலால் மிகவும் நல்லனாயிருந்தான்''[63] என்பதாகும். உடம்பானது உதிரம், நரம்பு, எலும்பு, தசைத் தோல் போர்த்தது. இதில் ஒன்பது வாயில்கள் உண்டு. மயிர்க்கால்கள் உண்டு. அதனால் அழகாகக் காட்சியளிக்கிறது என்று உடலின் நிலையாமைத் தன்மை அழகின்மைத் தன்மைக் கூறப்பட்டது. 'மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்'(செய்.2932) உடையது உடம்பு என்றும் ஆண், பெண் இருவருடைய உடல்களும் தளர்ந்து போகும் என்றும் (செய். 2933,2934,2940,2941) நிலையாமைப் பற்றி சீவகன் எடுத்துரைக்கின்றான்.

**உயிர்களைக் கொல்லாமை**

''அஹிம்சா பரமோ தர்ம- அகிம்சையை விட சிறந்த தர்மம் வேறில்லை. சமண மதத்தில் அகிம்சைக்கு அனைத்திலும் உயர்ந்த இடம் அளிக்கப்படிருக்கிறது.''[64]அகிம்சை எனும் அறம் உயிர்களைக் கொல்லாமையையும் துன்புறுத்தாமையையும்

வலியுறுத்துகிறது. பதுமையார் இலம்பகத்தில் சீவகன், வேடன் ஒருவனுக்கு பிறஊன் தின்று தன் ஊன் பெருக்குதல் தவறு என்பதை எடுத்துரைக்கின்றான். ஆண் பன்றியையும் முள்ளம் பன்றியையும் சேர்த்து சமைத்த ஊன் உணவோடு நெய்யும் தேனும் சேர்த்து கள்ளோடு உண்ணுதல் சாலச் சிறந்தது எனும் எண்ணம் கொண்ட வேடனை நோக்கி,

**'ஊன் சுவைத்து உடம்பு வீங்கி நரகத்தில் உறைதல் நன்றோ**

**வூன்றினால் உடம்பு வாட்டித் தேவராய் உறைதல் நன்றோ' (சீவக.பதுமை:1235)**

என்ற வினாவைச் சீவகன் எழுப்பி, வேடனது மனதை மாற்றி உயிர்க் கொல்லாமையறத்தை வலியுறுத்துகின்றான்.

**அரசறம் காத்தல்**

சீவகன், கந்துக்கடனை வென்று நாட்டைக் கைப்பற்றி சக்கரவர்த்தியாக வாழ்ந்தான். சக்கரவர்த்தி என்பது உலகம் முழுதாலும் பார்வேந்தனைக் குறித்தது. அரசர்கள் அவர்கள் பெறும் வருவாயின் அளவைப் பொறுத்து வகைப்படுத்தப் படுகின்றனர். கருடம் என்பது அளவுப் பெயர். ஒரு கருடம், பத்து மாடத்திற்கு இணையாகவும், ஒரு மாடம் என்பது பத்துகுன்றிமணி அளவு எனவும் குறிக்கப்படுகிறது. 1 கருடம் = 10 மாடம், 1 மாடம் = 10 குன்றிமணி.

"சாமந்தன் – ஆண்டிற்கு ஒரு இலக்கம் கருடம் பொற் காசுகளை வருவாயாக உடையவன்

நிருபன் – மூன்றிலக்க கருடம் வருவாய் உடையவன்

மாண்டலிகன் – பத்திலக்க கருடம் வருவாய் உடையவன்

அரசன் – இருபது இலக்க கருடம் வருவாய் உடையவன்

பேரரசன் – ஐம்பது இலக்க கருடம் வருவாய் உடையவன்

சுராட்டு – ஒருகோடி கருடம் வருவாய் உடையவன்

சம்மிராட்டு (சாம்ராட்) – 1 கோடி முதல் 10 கோடி கருடம் வருவாய் உடையவன்

விராட்டு – 10 கோடி முதல் 50 கோடி கருடம் வருவாய் உடையவன்

சார்வபௌமன் (சக்கரவர்த்தி) – ஏழு தீவங்களையுடைய நிலமுழுவதையும் தன்வயப் படுத்துபவன்."[65]

சீவகன் ஏழுதீவங்களையுடைய நிலமுழுவதையும் தன்வயப்படுத்தி சக்கரவர்த்தியாக வாழ்ந்தான். சீவகன் தன் நாட்டு மக்களுக்கு பதினாறு ஆண்டுகள் வரிவிலக்கு அளிக்கின்றான். மேலும் சீவகன், நன்றிமறவாது வளர்ப்புத் தந்தையாகிய கந்துக்கடனுக்கு நாட்டின் சில பகுதிகளை அளித்து அரசனாக்கியதோடு வளர்ப்புதாய் சுநந்தைக்கும் பெருந்தேவி பட்டம் அளித்துச் சிறப்பித்தான். மேலும் வள்ளல் தன்மை மிக்கவனாகவும்

விளங்குகின்றான். அருகனை வணங்குவதிலும், துறவு மனம் கொண்டு தாய் விசயைத் தொடர்ந்து துறவறம் ஏற்பதிலும் சீவகன் மனிதனாக முழுமையடையகிறான்.

**சீவகன் துறவு உணர்த்தல்**

சீவகன் சாரணரைச் சந்தித்து தன் முற்பிறவியை அறிந்தான். தாதகி நாட்டின் பூமிமாதிலக மென்னும் நகரில் அரசன் பவணமாதேவனுக்கும் – சயமதிக்கும் அசோதரன் மகனாகத் தோன்றினான். அசோதரன் தன் தேவியரோடு நீர்விளையாடுகையில் அன்னக்குஞ்சுகளைக் கண்டு, அதனை எடுத்து வந்து வளர்த்தான். இவ்வசோதரனே இப்பிறவியில் சீவகனாகப் பிறந்து, அன்னக் குஞ்சுகளைப் பிரித்த பாவத்திற்காய் தன் தாய், தந்தையரைப் பிரிந்து வாழ்ந்தான். இதனைக் கேட்ட சீவகன், சாரணரிடம் உற்றார் உறவினரிடம் அறிவிக்கும் பொருட்டு அவன் கூறியகருத்துக்கள், தானத்தின் பயனையும் தானம் செய்யாமையின் விளைவையும் அறம் மறவாமையும் நிலையாமையையும் விளக்குகிறது.

**தானத்தின் பயன்**

வலம்புரிச் சங்கு கடலில் பிறக்குமேயன்றி குளத்தில் பிறக்காது. அதுபோல தானமும் செல்வர்களையன்றி வறியோர் செய்ய இயலாது. எனினும் வறியோர்கள் தன்னால் இயன்றளவு வறியோர்க்கு தானம் செய்வார்களேயானால் அது இமயமலை அளவு அவர்களுக்கு உதவும். உணவைத்தானம் செய்தல் துறக்கத்திற்கு வழியாம். கொலை, தேன், ஊன் ஆகியவற்றைத் தவிர்த்தல் அறமெனக் குறிப்பிடப்படுகிறது. இதனை சீவகசிந்தாமணி 2924 முதல் 2927 வரையிலான செய்யுள்கள் உணர்த்துகின்றன.

**தானம் செய்யாமையின் விளைவு**

முற்பிறப்பில் தானம் செய்யாதார் இப்பிறப்பில் ஒட்டுப்போட்ட ஆடையை அணிந்து, பிச்சையெடுப்பர் என்பதை,

**‘மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின்**
**ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்**
**பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்**
**கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்’ (சீவக .முத்தி :2929)**

என்ற செய்யுள் விளக்குகிறது. இஃது தானம் செய்யாமையின் விளைவாகும்.

**அறம் மறவாமை**

அறம் செய்தலை என்றும் மறவாமை வேண்டும். அவ்வறம் வீடு பேற்றுடன் பொருளையும் போகத்தையும் கூடக் கொடுக்கும் (செய்: 2935) எனச் சீவகன் வலியுறுத்துகின்றான்.

**துறவின் மேன்மை**

சீவகன் துறவின் மேன்மையைக் குறிப்பதாக முக்தியிலம்பகத்தில் 2983- 2987 வரையிலான செய்யுள்கள் அமைந்துள்ளன. ஞானம் வேண்டுமென்றால் தவம் வேண்டும். அப்போது தான் திருமகள் நம்மை நீங்காது இருப்பாள் என்றும் யாளி, யானையை உணவாகக் கொள்ளுமேயன்றி எலியை உணவாகக் கொள்ளாதது போல உயர்ந்தோர் வீட்டின்பமாகிய அமுதத்தையன்றி, செல்வமென்னும் நஞ்சினை உண்ணார் என்றும் சீவகன் துறவின் மேன்மையை சுட்டுகின்றான்.

**துறவு**

சமணத்தின் உயர்ந்த நிலையாகும். சீவகன் தானத்தின் பெருமையையும் துறவின் அருமையையும் அறிந்திருந்தான். எனவே துறவின் மேன்மையைத் தன் சுற்றத்தாருக்கு வலியுறுத்தி மனைவியரையும் நண்பர்களையும் கூடத் துறவு ஏற்கச் செய்தான்.துறவு பற்றி,

**'இல்லம் இளமை எழில்வனப்பு மீக்கூற்றம்**
**செல்வம் வலிஎன் றிவையெல்லாம் - மெல்ல**
**நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்**
**தலையாயர் தாம்உய்யக் கொண்டு' (நாலடியார்.53)**

என்று நாலடியார் கூறுகின்றது. இல்லற வாழ்வு, இளமை, மிக்க அழகு, செல்வாக்கு, செல்வம், வலிமை இவற்றின் நிலையில்லாமையை உணர்ந்து சான்றோர்கள் பற்றுக்களைத் துறந்து துறவு பூணுவர். சீவகனும் அத்தகையத் துறவை ஏற்றான். சீவகன் துறவியாகும்முன் தன்னிடமுள்ள சங்கநிதி, பதுமநிதிகளைத் (செய்.2995 - 2996 ) தானம் செய்தான். மேலும் ஆடைகளையும் தானம் செய்தான். பின்னர் துறவியானபோது துகிலைத் துறந்தான் (செய்.3928). அணிகள், மாலைகளைத் துறந்தான் (செய்.3029) ; மயிர் துறந்தான் (செய்.3030). பின்னர் வர்த்தமானரை (செய்.3040)அடைந்து துறவியாக வாழ்ந்தான்.

**அருகனை வணங்குதல்**

சமணத்தில் ஆறு கொள்கைகளில் ஒன்றான வணக்கம் என்பது ‘‘அருகன், சித்தர், தீர்த்தங்கரர் முதலியவர்களின் திருவுருவங்களையும், சாத்திரங்களைக் கற்ற தபசிகளையும் தீட்க்ஷை கொடுத்த குருக்களையும், பெரியோர்களையும் மனம்வாக்கு காயங்களினால் வணங்குதல்’’[66] என்றும் குறிப்பிடப்படுகிறது. சீவகன், அருகனை வணங்குவதாகச் சீவகசிந்தாமணி குறிப்பிடுகிறது.

**‘சேடார் செய்பொற் றிருமணி வைரத்தொத்தணிந் துலகோம்பும்**
**வாடா மாலை வார்தளிர்ப் பிண்டி வாமநின் குண நாளும்**
**பாடா தாரைப் பாடா துலகம் பண்ணவர் நின்னடிப்பூச்**
**சூடா தார்தாள் சூடார் மாலைச் சுடர்மணி நெடுமுடியே’(சீவக. முக்தி : 3018)**

என்று பிண்டியின் கீழுள்ள அருகனைப் பாடாதார் தேவருலகை அடையார் என்றும், உலகோர் ஏத்த சிங்கக் கட்டிலில் அமர்ந்தோன் வினைகளைத் தீர்க்கக் கூடியவன் என்றும் இருவினைகளைத் தீர்க்க அறங்கூறியவன் என்றும் பிறவிக்கடலை தனக்கு அற்றுப்போகச் செய்தவன் என்றும் வாழ்த்துகின்றான். மேலும்,

**‘நிலவிலகி யுயிரோம்பி நிமிர்ந்தொளிர்ந்து பசிப்பகை நோய்**
**உலகமிருள் கெடவிழிக்கு மொண்மணி யறவாழி’(சீவக. முத்தி :3023)**

என்று பசி, பகை, நோய், இருள், நீக்கிய அறவாழி என்றும் கூறி சீவகன் அருகனை வணங்குகின்றான்.

**சீவகன் வீடுபேறடைதல்**

சமணம் வீடுபேற்றை அனைவருக்கும் நல்குவதில்லை.

**‘மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற**
**ஐவாய வேட்கை அவாவினைக் – கைவாய்**
**கலங்காமற் காத்துய்க்கும் ஆற்ற லுடையான்**
**விலங்காது வீடு பெறும்’ (நாலடியார். 59)**

என்று புலனடக்கம் உடையவர்க்கு வீடுபேறு என்பதை நாலடியாரும் சுட்டுகிறது. சீவகசிந்தாமணியில் சீவகன் மட்டும் அவ்வீடுபேற்றை அடைகின்றான். இதனை, ‘முடிதவக் கடலை நீந்தி யின்னண முற்றினானே’ (செய்.3073) என்னும் சீவகசிந்தாமணி அடி உணர்த்துகின்றது. சீவகனின் மனைவி மற்றும் நந்தட்டன் உள்ளிட்ட நண்பர்கள் தேவருலகை அடைகின்றனர். தேவருலக இன்பங்களை அடைய அவர்களது தவம்

உதவியது எனினும் மீண்டும் ஆணாகப் பிறந்து தவம் மேற்கொண்டு, பாவம் செய்யாது இருப்பின், அவர்களும் வீடுபேற்றை அடைவர் என்பது சமணசமயக் கொள்கையாகும். சீவகன், பசிப்பிணி தீர்த்தல், உயிர்க்கொல்லாமை, அரசறம் காத்தல், தானம் அளித்தல், தவம் மேற்கொள்ளுதல், வீடுபேறு அடைதல் என்ற நிலைகளில் அறவழி வாழ்ந்த மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளான்.

**விசயை**

விசயை, ஏமாங்கத நாட்டு அரசியாவாள். சச்சந்தனின் மனைவியும் சீவகனின் தாயும் ஆவாள். இவளது இயல்பாக அமைந்த அன்பும் அழகுமே இவள் கீழ் நிலையடையவும் காரணமாக இருந்தது. 'சுடச்சுடச் பொன் ஒளிரும்' என்பது போல விசயையின் துன்பங்கள் அவளைத் துறவு எனும் உயர் நெறிக்கு அழைத்துச் சென்றது. விசயை, சச்சந்தனின் மனைவியாக அரசியாக இருந்தவள். கட்டியங்காரனின் சூழ்ச்சியால் கணவனை இழந்தாள். மயிற்பொறியில் தப்பிச் சென்று சீவகனை ஈன்றனள். சீவகனை கந்துக்கடனிடம் சேர்க்க அவளுக்கு தெய்வம் உதவியது. அவளைத் துறவுக்குடிலில் சேர்க்கவும் தெய்வமே உதவியது. இறுதியில் தன் மகனைச் சந்திக்கும் பேறு பெற்றுத் துறவுநிலையில் உறுதியாக நின்றனள். இவள் அறவழியில் வாழ்ந்த மாந்தராவாள்.

**மகவிழா அறங்கள் (செல்வ நிலையாமை)**

- ❖ பன்னிரு ஆண்டுகள் இறைப்பொருள் (வரி) நீக்குதல்
- ❖ அறச்சலைகளையும் கோயில்களையும் இயற்றுதல்
- ❖ சிறைச்சாலையை அகற்றுதல்
- ❖ பொருள் தானம் செய்தல்
- ❖ ஏழுநாள் கருவூலத்தை திறந்து விட்டு மக்கள் பயன் பெற செய்தல்
- ❖ அரசன் விரும்பியோர்க்கு மூன்றரைக்கோடி பொன் தானம் அளித்தல்
- ❖ கவிகளுக்கு யானையும் பொருளும் கொடுத்துச் சிறப்பித்தல்.

இவையாவும் மகவிழா அறங்களாக சீவகன் பிறந்தவுடன் கடை பிடிக்க வேண்டிய செயல்களாக விசயை எண்ணுகின்றாள். உண்மையில் சுடுகாட்டில் பிறந்த குழந்தைக்கு இவற்றையெல்லாம் செய்ய வேண்டும் என்று எண்ணுவது செல்வ நிலையாமையைக் குறித்தது.

**அடைக்கலம்**

சமண அறங்களில் அடைக்கலமும் ஒன்றாகும். விசயை, கூனி வடிவில் வந்த தெய்வத்தால் மலர்க்காவில் உள்ள பள்ளி ஒன்றில் அடைக்கலமாகக் கொடுக்கப்பட்டாள். இதனை,

**‘பெண்மை நாண் வனப்புச் சாயல்**
**பெருமட மாது பேசி**
**னொண்மையி னொருங்கு கூடி**
**யுருவுகொண் டனைய நங்கை**
**நண்ணிய நுங்கட் கெல்லா**
**மடைக்கல மென்று நாடுங்**
**கண்ணிய குலனுந் தெய்வங்**
**கரந்துரைத் தெழுந்த தன்றே’ (சீவக. 356)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

**அறிவுரை**

கனகமாலையார் இலம்பகத்தில் விசயையைச் சீவகன் சந்திக்கின்றான். அவன் எடுத்துக்கொண்ட காரியம் வெற்றி பெற வாழ்த்துவதோடு அமையாது அன்னையாக அறிவுரையும் வழங்குகின்றாள். எல்லோரையும் தேர்ந்து அறிய வேண்டும். அறியாத பேதையருடனும் பெண்களுடனும் பேசுவதைத் தவித்தல் வேண்டும் ; பாம்பும் பகைநெஞ்சும் ஒன்றாதலால் மனதை ஒழுங்கு படுத்த வேண்டும் (செய். 1815, 1816) என்றனைய அறிவுரைகள் வழங்கப்பட்டன.

**பெருந்தன்மை**

சீவகன், தன் மகன் என அறிந்த விசயை பெரிதும் அகமகிழ்ந்தாள். இருப்பினும் பெருந்தன்மையோடு வளர்ப்பு பெற்றோரான சுநந்தையும் கந்துக்கடனுமே சீவகனுக்கு தாய் தந்தையர் என்கின்றாள். அவர்களின் மகனாகிய நந்தட்டனையே தன் மகனாக எண்ணி மகிழ்ந்து அவனுக்கு விருந்து படைக்கின்றாள். இஃது விசயையின் பெருந்தன்மையைக் குறித்தது.

**அரசியலறம்**

விசயை அரசியாக இருந்து துறவியானமையால் அரசியலறத்தை அறிந்தனள். ஆயினும் இவை சச்சந்தனுக்கு பயன்பட்டிருப்பின் நன்மை விளைந்திருக்கும். விசயை, சீவகனுக்கு அரசியலறம் கூறுகின்றாள்.

- ❖ குறுநில மன்னர் மகளை மணத்தல்
- ❖ வலிய அரசர் துணை கோடல்
- ❖ பொருளீட்டல்
- ❖ தொன்றுதொட்டு வரும் பகையை மனதில் நிறுத்தல்
- ❖ முள்ளை முள்ளால் எடுப்பது போல பகையை பகையால் வெல்லல்
- ❖ பிரித்தாளும் சூழ்ச்சி
- ❖ ஒற்றாராய்தல்
- ❖ நீதிநூல் வல்ல அமைச்சர்களைக் கோடல்
- ❖ மந்திரி, தந்திரிகளின் தகுதி அறிந்திருத்தல்
- ❖ மதிப்பையுண்டாக்கல்
- ❖ கல்வியும், அழகும் பெற்றிருத்தல்
- ❖ ஒரு காக்கை, ஆந்தைக் கூட்டத்தையே அழித்தது போன்ற சூழ்ச்சித்திறன்.

இவையாவும் அரசியலறங்களாக (செய் .1919-1924) விசயையால் கூறப்பட்டன. காக்கை ஆந்தைகளைக் கொல்லல், நரி சிங்கத்தை வெல்லல் போன்ற பஞ்ச தந்திரக் கதை (செய்.1927, 1928) களும் கூறப்பட்டுள்ளன.

**நன்றிக்கடன்**

விசயை, சீவகனை வளர்த்தமைக்காக சுநந்தை - கந்துக்கடனுக்கு நன்றிக்கடன் செலுத்த விளைந்தாள். அவள் துறவியாதலால் தன்னிடம் உள்ள தவப்பயனையெல்லாம் நீர்வார்த்துக் கொடுத்தாள். சீவகன் பிறக்கவும், தன்னைத் தவப்பள்ளியில் சேர்க்கவும் காரணமாயிருந்த தெய்வத்திற்கு கோயிலும் மயிற்பொறிக்கு சிலையும் வடித்தாள். மேலும் சீவகன் பிறந்த சுடுகாட்டை நல்வனமாக மாற்றி அங்கு 545 குழந்தைகளுக்கு பாலண்ணம் தினமும் தர ஆணையிட்டாள். இவையாவும் விசயையின் நன்றிக்கடனாகச் செய்யப்பட்டவையாகும். விசயை, சமணம் கூறும் துறவு நெறியைக் கைகொண்டமையின், அவள் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள்.

**சச்சந்தன்**

சச்சந்தன், விசயையின் கணவனாகவும், சீவகனின் தந்தையாகவும் படைக்கப்பட்ட மாந்தர் படைப்பாகும். இயல்பிலேயே வீரமும் அன்பும் மிகுந்தவனாகப் படைக்கப்பட்டுள்ளான். அன்பு வீரத்தை அடிமைப்படுத்தியதன் விளைவாக

அறிவையிழந்து கடமைமறந்து தன் நாட்டையும் மனைவியையும் ஆபத்தில் சிக்க வைத்த அறிவிலியாவான். எனினும் அறமாந்தர் ஆகின்றான்.

**சச்சந்தன் இயல்பு**

சச்சந்தன், ஏமாங்கத நாட்டு மன்னன் ஆவான். மன்னனுக்குரிய வளையாத செங்கோல், தன்னளியுடைய வெண்குடை, புறங்கொடா நால்வகைப் படையையும் உடையவன்.

**‘வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்**
**கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை**
**உள்ள மில்லவர்க் கூர்தொறு முய்ந்துராய்**
**வெள்ள நாடு மடுத்து விரைந்ததே’ (சீவக. 36)**

என்ற நாட்டுவளப்பாடல் உண்மையில் சச்சந்தனின் இயல்பைக் குறிக்கிறது. பல நாடுகளிலும் போரிட்டு வென்று கொணர்ந்த செல்வத்தை சச்சந்தன் தன் ஊர்தோறும் வாரி இறைத்த வள்ளன்மையை இப்பாடல் பேசுகிறது. சச்சந்தன் தண்ணளியால் அறக்கடவுளையும், கொடையால் வருணனையும், பகை முடித்தலில் கூற்றுவனையும் அழகின் நலத்தால் காமனையும் ஒத்தவன். இதனை,

**‘தருமன் றண்ணளி யாற்றன தீகையால்**
**வருணன் கூற்றயிர் மாற்றலின் வாமனே**
**யருமை யாலழ கிற்கணை யைந்துடைந்**
**திரும கன்றிரு மாநில மன்னனே’ (சீவக. 160)**

என்ற அடிகள் மூலமும் திருத்தக்கத்தேவர் தெளிவுறுத்துகிறார்.

**நாட்டுச் சிறப்பில் அறம்**

‘மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி’ என்பதற்கேற்ப நாட்டு மன்னனைப் போன்று மக்களும் வாழ்ந்தனர். நாட்டுச் சிறப்பில் கூறப்படும் அறங்கள் மன்னனின் மக்களின் அறங்கள் ஆகும். சச்சந்த மன்னனின் மக்கள் வாழ்ந்த முறைகள் மன்னன் வாழ்ந்த முறையைக் காட்டுவதாக அமைகின்றது. செல்வமாந்தர்கள் உடல்காயங்களைப் பெரிதாகக் கருதாது மீண்டும் மீண்டும் போரிடுவர். அவ்வெற்றியைக் கொண்டாட கோழி, ஆடு போன்றவற்றின் இறைச்சிகளை உண்டு ஆரவாரிப்பர். இத்தகைய ஒலிகளே அந்நாட்டில் மிகுந்திருந்தன என்று கூறுவதால் வீரம் பேசுப்படுகிறது. நாட்டில் உள்ள ஊர்கள் தோறும் உண்டிசாலையும் தண்ணீர் பந்தலும் அமைத்தல் அரசறமாகும். சச்சந்தன் அவ்வறங்களைச் (செய்.75) செவ்வனேச் செய்தனன்.

**நிலையாமை**

அரசனின் தலையாய அறம் நாட்டைக்காத்தல் ஆகும். அரசனின் ஆறு அங்கங்களாக அமைச்சு, அரண், படை, பொருள், நட்பு , தூது ஆகியவற்றைக் குறிப்பர். இவற்றில் படையே அரசனுக்கு இன்றியமையா அங்கமாகும். சச்சந்தன் அப்படைப் பொறுப்பினை கட்டியங்காரனுக்கு வழங்கி தவறுகின்றான். 'கண்கெட்ட பிறகு சூரிய வணக்கம்' என்பது போன்றது சச்சந்தன் நிலையாமை பற்றிப் பேசுவது. சாதலும் பிறத்தலும் ஆதலும் அழிவும் வினைப்பயனால் உருவாவது. சாதலுக்கும் அழிவுக்கும் வருந்துவதும் பிறத்தலுக்கும் ஆதலுக்கும் அவாவுவது அறிவுடைமை என தன் மனைவி விசயைக்கு அறிவுறுத்துகின்றான். இவை,

**'தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தணிதலும் அவற்றோரன்ன**
**சாதல் புதுவதன்றே வாழ்தல்**
**இனிதென மகிழ்தலும் இலமே**
**முனிவின் இன்னா தென்றலும் இலமே' (புறம்.192)**

என்ற கணியன் பூங்குன்றனார் பாடலை நினைவுறுத்துவதாக அமைகிறது. முற்பிறப்பிலும் பிற்பிறப்புகளிலும் இணையவில்லை. இப்பிறவியில் மட்டுமே இணைந்து வாழ்ந்தோம்.எனவே இப்பிரிவு பெரிதில்லை எனக்கூறும் சச்சந்தன் இதை முன்பே உணர்ந்திருந்தால் அரசாட்சி அவன் வசமே இருந்திருக்கக் கூடும். விசையையும் மகன் சீவகனையும் பிரிந்திருக்கவும் வேண்டியதில்லை. சச்சந்தனின் உயிர் போயிருக்கவும் வேண்டியதில்லை. சச்சந்தன் கட்டியங்காரனிடம் போரிட்ட வீரம் பெருமைமிகுந்ததாகும். ஆயினும் பெண் வழிச்சேறல் எனும் குற்றத்தினால் நாடு, உயிர், மனை, மக்கள் அனைத்தையும் இழந்தனன். சச்சந்தன் அரசனாக அன்றி சாதாரண குடிமகனாக இருந்து தன் மனைவி மீது இதே அன்பை பொலிந்திருப்பானேயேனால் ஒரு சிறந்த இல்லறத்தானாக விளங்கியிருப்பான். வள்ளன்மை, அன்பு காரணமாக மட்டுமே சச்சந்தன் அறவழி வாழ்ந்த மாந்தனாகக் கருதப்படுகிறான்.

**சுரமஞ்சரி**

சுரமஞ்சரி இளமை நிலையாமையைப் பற்றிப் பேசுபவளாகவும், பசிப்பிணி போக்குபவளாகவும், தொல்காப்பியர் குறிப்பிடும் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப் பாடு, சூளுரைத்தல், அறத்தோடு நிற்றல், பரிசம், ஊடல், பிரிவு அனைத்து நிலைகளையும் உடையவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். சுரமஞ்சரி, சீவகனை மணக்க இயலா நிலையில் இளமை நிலையாமையைக் கூறுகின்றாள். கன்னிமாடத்தில் வசித்த சுரமஞ்சரியை சீவகன்

சந்திக்க கிழவன் வேடம் பூண்டு பசிப்பிணியோடு சென்றமையின், அவனது பசிப்பிணி போக்க முனைந்தாள். சீவகனுடனான இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும், சீவகனையே மணப்பேன் என சூளுரைத்தலும், இயற்கைப் புணர்ச்சிக்குபின் அறத்தோடு நிற்றலும் பரிசப் பொருள் கொடுத்து மணத்தலும் மணத்தின் பின் ஊடலும் பின் கூடலும் அதன்பின் சீவகன் பிரிவுமாக அமைகிறது. பசிப்பிணி தீர்த்தல் எனும் அறத்தையும் நிலையாமையையும் அறிந்து வாழ்ந்ததால் இவள் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள்.

**பிறமாந்தர்கள்**

காந்தருவதத்தை தேவருலகப் பெண்ணாக, சீவகனின் முதல் மனைவியாகப் படைக்கப்பட்டுள்ளாள். நந்தட்டனை தன் மந்திர வலிமையால் சீவகன் இருக்குமிடத்திற்கு அனுப்பி வைக்கின்றாள். இசை வல்லவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். காந்தவருவ தத்தையின் வளர்ப்புத் தந்தையான சீதத்தன் பொருளின் இன்றியமையாமை (செய்.475-498) பற்றிப் பேசுபவராகவும் அருகனை வணங்கும் தெய்வபக்தி (செய்.509-511) உடையவராகவும் படைக்கப்பட்டுள்ளார். காந்தருவதத்தையின் தந்தையான கமுலவேகன் அறமுரைப்பவராகப் படைக்கப்பட்டுள்ளார். குணமாலையின் தோழி மாலை நல்லியல்பு (செய்.976) உடையவளாகவும் பதுமையின் தோழி நிலையாமையை (செய்.1385-1396) உணர்த்துபவளாகவும் கேமசரி அருக வணக்கம் (செய்.1469) செய்பவளாகவும் படைக்கப்பட்டுள்ளர்.

சீவகனின் தம்பி நந்தட்டன் முற்பிறப்பு தீவினை களைந்து (செய்.1728), கூடாநட்பினின்று விலகி (செய்.1889-1891), பகைத்தெளிவு (செய்.1892 - 1994) பெற்று நட்புக்கு (செய்.1895-1896) இலக்கணமாகத் திகழ்ந்தான். அமைச்சர்களான உருத்திரதத்தனும் (செய்.206-214) தருமதத்தனும் (செய்.245-255) அறவுரையும் அரசறமும் போதிக்கின்றனர். திருத்தக்கத்தேவர் சமணர் என்பதும் அவர் இயற்றிய சீவகசிந்தாமணி சமண நூல் என்பதும் யாவரும் அறிந்த உண்மையாகும். சமண சமயக் கருத்துக்கள் இங்கும் பேசப்படுகின்றன. சமணம் ஒழுக்கத்தைத் தலையாய அறமாகக் கருதுகின்றது. ஆயிலும் அரசனுக்கென்று தனிப்பட்ட ஒழுக்க அறங்களை வலியுறுத்துகிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்பது அறமென்றாலும் அரசனுக்கு பலதாரமணத்தை அனுமதிக்கிறது.

ஒரு பெண்ணிடம் அன்பு கொண்டு அரசை இழப்பதை விட, பல பெண்களிடம் உண்மையான அன்பு கொள்ளாவிட்டாலும் அரசைக் காப்பது அறம் என்பதாக வலியுறுத்தப்பட்டுள்ளது. பெண் என்பவள் வெறும் போகப் பொருள் என்பதும் அரசை கட்டிக்காக்க பயன்படக்கூடிய படைபல ஆளுமையைத் தரும் பொருள் என்பதுமாகவே

சமணம் கருதுகிறது. இக்கருத்தே சீவகசிந்தாமணியிலும் எதிரொளிக்கிறது. அறிவுள்ளவன் அமைச்சன் என்பதால் அவனினும் உயர்ந்த அறிவும் வீரமும் கொண்ட அரசன் ஆளுமைக்குரியவன் என்று அரசறம் போதிப்பது சீவகசிந்தா மணியாகும்.

## வளையாபதி

வளையாபதி ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றாகும். இதனை இயற்றியவர் பெயர் அறிதற்கில்லை. முழுமையும் கிடைக்கப்பெறாத இக்காப்பியத்தின் சில செய்யுள்கள் மட்டும் அடியார்க்கு நல்லார், பரிமேலழகர், இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரையாலும், யாப்பருங்கல உரை மற்றும் புறத்திரட்டில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அவ்வாறு கிடைக்கும் பாடல்களின் எண்ணிக்கை 72 ஆகும். இஃது சமண சமய நூலாகும். கி.பி.9 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது. சீவகசிந்தாமணிக்கும் முந்தையது ஆகும். இந்நூல் முழுமையும் கிடைக்கப்பெறாமையின் அறமாந்தர்களை வகைப்படுத்த இயலாததால், அறக்கருத்துக்கள் மட்டும் ஈண்டு எடுத்துரைக்கப்படுகின்றன. ‘‘யாப்பருங்கல விருத்திக்கும் இளம்பூரணத்துக்கும் முற்பட்டு பத்தாம் நூற்றாண்டிலேயே இந்நூல் வழங்கி இருத்தல் வேண்டும். பலபல வகையாகச் செய்யுட்களை ஆக்கும் முயற்சி தேவார, திருவாசகக் காலத்ததென்றால் இந்நூலும் சிந்தாமணிக்கு முந்தியதெனலாம். இந்நூலின் இலக்கிய நலத்தினை ஆராய்தலுக்கு வாய்ப்பில்லை. எளிமையும் தெளிவும் அறத்தின் விளக்கமும் கொண்டதொரு நூலென இதனைக் கூறலாம். உரையாசிரியர்கள் பாராட்டிய நூல் என்பதும் நாம் மறத்தல் ஆகாது. தக்கயாகப் பரணியின் உரையாசிரியர், அப்பரணியின் நூலாசிரியராகிய கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் கவியழகு வேண்டி வளையாபதியை நினைத்தார் என எழுதுவதினின்றும் சமணத்தை வெறுத்த சைவராலும் சைவப் புலவராலும் இதன் இலக்கியச் சுவை எவ்வளவு உயர்ந்ததாகக் கருதப்பெற்றதென்பது விளங்கும்’’[67] என்ற தெ.பொ.மீயின் வாக்கால் வளையாபதியின் சிறப்புக்களை உணரமுடிகிறது.

### வளையாபதி கதைச் சுருக்கம்

வளையாபதியின் இயற்பெயர் நாராயணன் என்பதாகும். செல்வ வள வணிகக்குடியில் பிறந்தமையின் ஒன்பது கோடி பொன்னுக்கு அதிபதியாக நவகோடி நாராயணனாகவும் நேர்மையின் காரணமாக எவருக்கும் வளைந்து கொடுக்காதிருப்பதால் வளையாதி என்றும் சிறப்புப்பெயர் பெற்றான். வளையாபதி உரிய பருவத்தில் சுந்தரி என்ற வணிககுலப் பெண்ணை மணந்தான். ஆறு ஆண்டுகளாகியும் அவர்களுக்கு மக்கட்செல்வம் இல்லை. இதனால் மனம் நொந்த நிலையில் இருந்தனர். சுந்தரியின் தம்பி

சாத்தன் தீயசிந்தனை தீய ஒழுக்கம் உடையவன். அவன் அல்லி என்ற பரத்தையுடன் நிரந்தர தொடர்பு கொண்டிருந்தான். அல்லிக்கு வேண்டிய பொன்னும் பொருளும் சுந்தரியை ஏமாற்றி சாத்தன் பெற்றுவந்தான்.

இந்நிலையில் வளையாபதி, வணிகத்தின் பொருட்டு சென்ற இடத்தில், கனகவேளாளர் மகள் சத்தியவதியை விரும்பி மணந்தான். பின்னர் தன் இல்லத்திற்கு சத்தியவதியை அழைத்து வந்து, குழந்தைப்பேறு காரணமாக மணந்து கொண்டதாக சுந்தரியிடம் கூறினான். சுந்தரி, சத்தியவதியோடு மனவேறுபாடு கொண்டு அவளைத் துரத்த சதிசெய்தாள்.

சுந்தரி தான் கர்ப்பமுற்றிருப்பதாய் பொய் கூறி, வணிகப் பெருமக்களிடம் சென்று சத்தியவதி – வளையாபதியின் சாதி மாறுபட்ட திருமணத்தை விலக்கும்படி வேண்டினாள். அதனை விசாரித்த பெருமக்களும் சத்தியவதியை ஊரைவிட்டு வெளியேறும் படி கட்டளையிட்டனர். அவ்வாறு சத்தியபதி வெளியேறும்போது கர்ப்பமுற்றிருந்தாள். சத்தியவதி காளிக்குடி என்னும் ஊரில் காளிகோயிலில் தங்கியிருந்த போது, அங்கு வந்த மூதாட்டி அவள் துயரக்கதையைக் கேட்டு, தன்னோடு தங்குவதற்கு அழைத்துச் சென்றாள். அங்கு சத்தியவதிக்கு உத்தமன் என்றொரு மகன் பிறந்தான். இதற்கிடையில் வளையாபதி வணிகத்தின் பொருட்டு கடல்கடந்து சென்றிருந்தபோது, தம்பி சாத்தனுக்கும் அல்லிக்கும் பிறந்த அழகன் என்ற ஆண்குழந்தையைத் தன் குழந்தையெனப் பொய்சொல்லி, சுந்தரி வளர்த்து வந்தாள்.

வளையாபதி, சுந்தரி மூலம் தனக்கொரு குழந்தை பிறந்ததாக எண்ணி மகிழ்ந்தான். அழகன், தன் தந்தை சாத்தனைப் போலவே இளமையிலேயே குணக்கேடனாகத் திகழ்ந்தான். பரத்தையர் குலத்தில் பிறந்ததால் இளமையிலேயே அழகனின் உடல் மீது பச்சைக் குத்தப்பட்டிருந்தது. அப்பச்சையைக் கண்ட அழகனுடன் பயிலும் மாணவர்கள் பலித்ததனால் சாத்தன் அதனை அழிக்கமுற்பட்டான். ஆனால் அவனால் இயலவில்லை. சத்தியவதியின் மகன் உத்தமன், கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினான். தன் தந்தையைப் பற்றிய விபரங்களை அறிந்து கொண்டு நீதி கேட்க வளையாபதியைத் தேடிப் புறப்பட்டான். வளையாபதி, உத்தமனை மகனென ஏற்க மறுத்ததால் உத்தமன் வணிகப் பெருமக்களிடம் முறையிட்டான், சத்தியவதிக்கும் உத்தமனுக்கும் காளிதேவியே அருள் புரிந்து சாட்சியாக நின்றாள். இதனால் வளையாபதி தன் மகனாக உத்தமனையும், மனைவியாக சத்தியவதியையும் ஏற்றுக்கொண்டான்.

இவர்கள் மூவரும் இல்லிற்குச் செல்லும்போது அங்கு சுந்தரி தற்கொலை செய்து கொண்டு இறக்கும் தருவாயில் இருந்தாள். மேலும் அழகன் தன் மகனல்ல என்ற உண்மையையும் கூறினாள். அழகன் பொருட்டு அல்லி பெரும் பொருளை

அபகரித்ததையும், இப்போது பொருள்தர இயலாநிலையில் மகனை அழைத்துச் சென்றுவிட்ட நிலையையும் விளக்கி இறந்துவிட்டாள். அதன் பின்னர் வளையாபதி, மனைவி சத்தியவதியோடும், மகன் உத்தமனோடும் இனிது வாழ்ந்து வீடுபேற்றை அடைந்தான். ‘‘இக்கதை புலமை வேங்கடாசலம் அவர்களால் வளையாபதி எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.’’[68] எனினும் செய்யுள்கள் முழுமையும் கிடைக்கப்பெறவில்லை.

**வைசியபுராணமும் வளையாபதியும்**

வளையாபதி கதை வைசியபுராணத்தில் கூறபட்டுள்ளதாகக் குறிப்பிடுவர். ‘‘வைசிய புராணத்தின் 35 –ஆம் படலத்தின் பெயர், பஞ்சகாவியத் தலைவரில் வைரவாணிபன் வளையாபதி பெற்ற சருக்கம் என்பது. அது 49 விருத்தங்களால் ஆகியது’’[69] என கி.வா.ஜ, தமிழ்க் காப்பியங்கள் எனும் நூலில் சுட்டியுள்ளார். பிறகுலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை நவகோடி நாராயணன் என்னும் வைர வணிகன் மணக்கிறான். இதனால் வணிக குலத்தில் அவனை வெறுக்கின்றனர். அவன் அவளை விட்டுப் பிரிந்து அயல்நாடு சென்று பொருளீட்டிப் பூம்புகாரில் தன்குலப் பெண் ஒருத்தியை மணந்து வாழ்கிறான். இந்நிலையில் மூத்தவளின் மகன், தன் தந்தை யார்? என்பதை அறிந்து தன்தாயிடம் தந்தையைச் சேர்க்கிறான் என இந்நூற்கதையை வைசியபுராணம் கூறுகிறது.

**வளையாபதி காப்பியமும் அறமாந்தர்களும்**

இக்காப்பியத்தில் கிடைத்தபகுதிகளில் வளையாபதி, சுந்தரி, சத்தியவதி, சாத்தன், அல்லி, அழகன், உத்தமன், மூதாட்டி, ஊர்ப்பெரியோர்கள், காளிதேவி என்று குறிப்பிடத்தகுந்த மாந்தர் படைப்புகள் இடம்பெறுகின்றன. இதில் காளிதேவியைத் தவிர மற்ற அனைவரும் மாந்தர்கள் ஆவர். வளையாபதி, சத்தியவதி, உத்தமன் ஆகியோர் அறத்தின் வழி வாழும் மாந்தர்கள் ஆவர். மூதாட்டி அறம் கூறும் மாந்தர் ஆவார். சுந்தரி, சாத்தன், அல்லி, அழகன் போன்றோர் அறமற்ற மாந்தர் ஆவர்.

**வளையாபதி**

வளையாபதி காப்பியத்தின் தலைவனாக நவகோடி நாராயணன் இடம்பெறுகின்றான். இவன் எவர்க்கும் வளையாத முடியுடையவன். ஆகையால் வளையாபதி எனப்பெயர் பெற்றான் வளையாபதியே காப்பியத்தலைவனாகச் சுட்டப்பட்டாலும் தன்னேரில்லாத் தலைமை இவனிடம் காணப்படவில்லை. பல குற்றங்கள் உடையவனாகவே ஆசிரியர் படைத்துக்காட்டியுள்ளார்.

1. குழந்தைப் பேற்றிற்காக மறுமணம் செய்தல்
2. இரண்டாம் மனைவியைக் கைவிடல்
3. பிறர் சொல் கேட்டல்
4. உண்மையை ஆராயாமை

போன்ற தீயகுணங்கள் வளையாபதியிடம் காணப்படுகிறது. எவர்க்கும் வளையாத வளையாபதி உண்மைக்கும் தலைவணங்காதவனாகவே செயல்பட்டுவருகிறான். இதன் அடிப்படையில் நோக்க வளையாபதியை முழுமையான அறமாந்தராக கொள்வதில் இடர்ப்பாடு ஏற்படுகிறது. எனினும் அக்காலச் சூழ்நிலை, நன்மனம், இறுதியில் உணரும் தன்மைகளைக் கொண்டு வளையாபதியும் அறாந்தராகக் கருதுவதற்கு இடமுண்டு.

**சத்தியவதி**

இவள் வளையாபதியின் இரண்டாவது மனைவியாள். வளையாபதியின் மீது உள்ளன்பு கொண்டவள். தன்னைக் கணவன் வெறுத்து ஊரைவிட்டுத்துரத்திய போதும் அவனிடத்து புலவி கொள்ளாதவள். உத்தமனான ஒரு பிள்ளைக்குத் தாயானவள். காளிதேவியின் அருளைப் பெற்றவள். சத்தியவதி அறமாந்தர் என்பதில் ஐயமில்லை.

**உத்தமன்**

வளையாபதி – சத்தியவதிக்கு மகனாகப் பிறந்தவன். தந்தை செல்வந்தராய் இருந்தபோதும் இளமையில் வறுமையை அடைந்தவன். ‘கொடிது கொடிது இளமையில் வறுமை’ என்று ஔவையார் அதனை குறிப்பிட்டது நோக்கத்தக்கது. பெயருக்கு ஏற்ப நல்ல குணமும் மேன்மையான அறிவும் உடையவன். மேலும் தன்தந்தைக்கு அறத்தை எடுத்துரைத்து தாய் – தந்தையை வாழ்க்கையில் ஒன்றிணைத்தவன். உத்தமன் அறத்தின் வழி நடக்கும் மாந்தராக விளங்கியுள்ளான்.

**மூதாட்டி**

இவர் காளிக்குடியில் வாழ்ந்த சமண மூதாட்டியாவார். பிறர் நலம் பேணும் இயல்புடையவராதலின் சத்தியவதியையும் அவளது குழந்தையையும் தமது இல்லத்திலேயே வைத்துக் காப்பாற்றியவர். சத்தியவதிக்காக வளையாபதியிடம் உண்மையை எடுத்துக் கூறியவர். இவர் இயல்பாகவே அறத்தைக் கூறும் மாந்தராக படைக்கப்பட்டுள்ளார்.காப்பியம் முழுமையாகக் கிடைக்கப்பெறாமையின் மாந்தர் படைப்புடன் அறக்கருத்துக்களை இணைத்துப்பார்க்க இயலவில்லை.

**வீடுபேறு**

அறத்தின் வழி ஈட்டப்பட்ட பொருளால் இன்பமடைந்தாலும் முடிவில் வீடுபேற்றை அடையவே முயற்சிசெய்ய வேண்டும். இதனை வளையாபதி, அழகிய மணிமுடி அணிந்த மன்னர்களின் தலைகளும் ஒரு காலத்தில் இகழப்படும். அதனால்,

**'உத்தம நன்னெறிக்கண் நின்றுக்கம் செய்தியேல்**

**சித்தி படர்தல் தெளிவாழி நெஞ்சே !' (வளை. 4)**

என்று கூறுகிறது. நன்னெறிக்கண் நின்று வீட்டுலகை அடைவதே பேரின்பம் என்ற அறச்செய்தி உணர்த்தப்படுகிறது.

**அறமும் செல்வமும்**

அறவழியில் ஈட்டப்பட்ட செல்வமே வாழ்க்கைக்கு உதவுவதாகும். மனிதப் பிறவி உயர்ந்தது என்றாலும் இப்பிறவிக்கு பொருள் இன்றியமையாதது ஆகும். இதனை,

**'வினைபல வலியினாலே வேறுவேறு யாக்கை யாகி**

**நனிபல பிறவி தன்னுள் துன்புறூஉம் நல்லுயிர்க்கு**

**மனிதரின் அரியதாகும் தோன்றுதல் தோன்றினாலும்**

**இனியவை நுகர எய்தும் செல்வமும் அன்னதேயாம்' (வளை.5)**

என்ற வளையாபதி அடிகள் உணர்த்தும். இக்கருத்தையே வளையாபதி 47- ஆம் செய்யுளும் வலியுறுத்துகிறது.

**'அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு**

**இவ்வுலகம் இல்லாகி யாங்கு' (குறள் . 247)**

என்ற குறள்அடிகளும் இக்கருத்தை வழிமொழிகின்றன.

**அரிய மானுடப் பிறவி**

'அரிது அரிது மானுடராய்ப் பிறத்தல் அரிது' என்ற ஔவையின் வாக்கே, வளையாபதியின் கருத்தாக அமைகிறது. மனிதப் பிறவியில் மிக உயர்ந்த குடியின்கண் பிறந்தாலும், கூன், குருடு, செவிடு முதலிய ஊனங்கள் இல்லாது பிறந்தாலும், அறியாமையைப் போக்கும் கல்வியறிவைப் பெற்று நல்ல அறங்களைச் செய்தால் மட்டுமே ஒருவர் வலிமையுடையவராக முடியும். இவையனைத்தும் ஒருவருக்கு கிடைப்பதென்பது மிகவும் அரியதாகும். அரியனவாகிய இவையனைத்தும் ஒருங்கே பெற்றவர்களே மனிதப் பிறப்புடையவர் என்று மதிக்கத்தக்கவர் ஆவர். இக்கருத்தை வளையாபதி 6- ஆம் பாடல் உணர்த்துகிறது.

**பெண்ணின் பெருமை**

ஒத்த அன்பினால் மனமியைந்து கூடி வாழுகின்ற கணவனும் மனைவியும் இல்லறநெறியுடன் வாழ்ந்து நாட்டு மக்களாலும் ஊர் மக்களாலும் பாராட்டப்பட்டாலும், மழையைத் தனது ஏவலால் பெய்விக்க முடிந்த தெய்வக்கற்பினை உடைய தலைவியின் சிறப்பே மிக்க பெருமையுடையது என்பதை,

**'நாடும் ஊரும் நனிபுகழ்ந்து ஏத்தலும்**

**பீடுறும் மழை பெய்க எனப் பெய்தலும்**

**கூடலாற்றவர் நல்லது கூறுங்கால்**

**பாடுசால்மிகு பத்தினிக்கு ஆவதே' (வளை .7)**

என்ற வளையாபதி அடிகள் விளக்குகின்றன. ஆணின் ஏறுபோன்ற நடைக்கு மாசில்லா கற்புடைய பெண்ணே காரணமென,

**'புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்**

**ஏறுபோல பீடு நடை' (குறள் .95)**

என்று வள்ளுவரும் குறிப்பிடுகின்றார். மேற்சுட்டப்பட்ட வளையாபதி பாடல் வளையாபதியின் மனைவியருக்கு உரியதாய் இருத்தல் கூடும். பெண்ணின் கற்புத் தன்மையே வளையாபதியை ஏறுபோல நடக்கச் செய்திருக்க வேண்டும்.

**ஒருமுகத்தன்மையற்ற பெண்மை**

பெண் மனது கடலை விட ஆழமானதாக கவிஞர் பலரும் சுட்டுவர். ஆழம் அதிகமானாலும் மனதை ஒரு முகப்படுத்தும் தன்மை பெண்மைக்கு குறைவு என்று கூறப்படுகிறது.

**'மாரியுந் திருவு மகளிர் மனமுந்**

**தக்குழி நில்லாது பட்டுழிப் படும்' (பெருங்கதை 1 – 35 : 156 – 7)**

என்று பெருங்கதை மழைக்கும் செல்வத்திற்கும் பெண்ணின் மனதை ஒப்பிட்டுக் கூறுகின்றது. மழை எப்போது பெய்யும் என்று எவரும் அறியார். செல்வமும் சகடக்கால் போன்றது. அதுபோலவே பெண்ணின் மனதும் ஓரிடத்தில் நில்லாத, எத்தன்மையது என்று கூறவியலாதது ஆகும். இதனை வளையாபதி 49–ஆம் பாடல் நீரில் கொட்டிய எண்ணெயை மீண்டும் எவ்வாறு ஒன்று சேர்க்க இயலாதோ, அவ்வாறே பெண்ணின் மனதையும் ஒருமுகப் படுத்தவியலாது என்கிறது. இத்தகைய மன ஒரு முகத்தன்மையற்ற பெண்களே கற்பில் மகளிராய் மாறிப்போகின்றனர்.

**பரத்தையர் இயல்புகள்**

பரத்தமை பற்றியும் அப்பரத்தையர் இயல்புகள் பற்றியும் வளையாபதியில் செய்திகள் இடம் பெற்றுள்ளன. இது அறமற்ற செயலாகச் சமணம் கருதுகிறது. மலராத இளம் மொட்டை கையால் கிழித்து, அதில் மணமில்லா விட்டாலும், மணம் இருப்பது போல முகர்ந்து பார்த்தல் பரத்தையர் இயல்பாகும். தகுதியற்ற விரும்பத்தகாத ஒருவர் மீது வலிந்து காமுறுதல் இதன் பொருளாகும். வயது முதிர்ந்த பரத்தையொருத்தி இளம் பரத்தைக்கு,

**'யாறொடி யாழ்ஞெலி கோனில வார்கொடிப்**

**பாறொடு பத்தினி மாபோ லொழுகென்று' (வளை . 51)**

என்று அறிவுரை வழங்குகின்றாள். குரங்கு, வண்டு, ஆறு, யாழ், தீக்கடை கோல், பூங்கொடி, மரக்கலம், கற்புடை மகளிர், விலங்கு ஆகியவற்றின் இயல்புகளை பரத்தையர் பெற்றிருத்தல் வேண்டுமாம். இதனை வளையாபதி 52- வது செய்யுள் முதல் 63 வரையிலான செய்யுள்கள் விளக்குகின்றன. பரத்தையர் குரங்கு, வண்டு போல தாவும் இயல்புடையவராயும்(செய்.52), ஆறு போல காதலைப் பெருக்கி குறைத்துக் கொள்பவராகவும்(செய்.53), யாழ் போல பிறர்கைச் சேர்பவராகவும்(செய்.54), தீக்கடைக்கோல் போல தன்னை நெருங்கி வந்தவரை அழிப்பவராகவும்(செய்.55), மதி போன்ற அன்பு உடையவராகவும் (செய்.56), பூங்கொடி போல ஒப்பனைச் செய்பவராகவும் (செய்.57), படைக்கப் பட்டுள்ளனர்.

**பரத்தமை ஒழிப்பு**

காலந்தோறும் பரத்தமை என்ற ஒழுக்கம் இருந்துள்ளது. இவ்வொழுக்கத்தில் ஈடுபடும் பெண்களை பரத்தையர் என்று சுட்டுவது போல ஆண்களை பரத்தையன் என்று சுட்டுவதில்லை. சமூகம் அத்தகைய ஆண்களை காமுகன் என்று சுட்டகிறது. சங்க காலத்திற்கு முன்பிருந்தே பரத்தமை ஒழுக்கம் இருந்திருத்தல் கூடும். அவ்வொழுக்கத்தைக் கடிவதும் அறமாகப் போற்றப்பட்டது.

**'இருமனப் பெண்டிருங் கள்ளங் கவறுங்**

**திருநீக்கப் பட்டார் தொடர்பு' (குறள் . 920)**

என்று வள்ளுவர் சுட்டுகின்றார். பரத்தையருடன் தொடர்புடையவர் தெய்வத்திடமிருந்து தொடர்பற்றவர் ஆகின்றனர். சிற்றின்பத்தின் இயல்புகளையும் அதனால் மடலேறும் திறத்தையும் கூறி வளையாபதி பரத்தமையைக் கடிகிறது.

**‘எண்ணின்றி யேது ணியுமெவ்வழி யானு மோடும்**

**உண்ணின்று ருக்கு முரவோருரை கோடலின்றாம்**

**நண்ணின்றி யேயு நயவாரை நயந்து நிற்குங்**

**கண்ணின்றுகாம நனிகாமுறு வாரை வீழ்க்கும்’ (வளை . 26)**

இதன் பொருளாவது , காமம் என்பது ஆராய்தலின்றி செயல்புரியத் தூண்டும். நல்வழி, தீவழி என்று எவ்வழியிலும் செல்லும். இன்பம் துய்த்தலிற்கு இடையூறு நேர்ந்தவிடத்து உள்ளத்தையும் உடலையும் மெலிவிக்கும். அறிஞர் அறிவுரையைக் கேளா. தன்னை விரும்பாதவரையும் விரும்பி அவ்விருப்பத்தை கைவிடாது நிற்கும். காமத்திற்கு கண்ணில்லை என்று உலகத்தார் சுட்டுவர். இப்பாடலில் கைக்கிளைக் குறிப்பு இடம்பெறுகிறது. காமுகர், பெரியோர் வெறுப்பதைப் பற்றி கவலை கொள்ளார். தம்மாசிரியர் சொல்லும் கேளார். பிறந்த குடியின் புகழையும் பெருமையும் கெடுப்பர். காமம் அவ்வளவு தீயதாக வளையாபதி சுட்டுகிறது. வளையாபதி 28 - ஆம் பாடல் காமுகர் மடலேறத் துணிவர் என்கிறது. மேலும் பனைகருக்கால் செய்த குதிரை ஏறி பலர் காண நாணத்தை விட்டொழிப்பர். மணமாலையாக எருக்கமாலையைச் சூடுவர். சிறார்களை விட்டு அப்பனைக் குதிரையை தெருக்களில் இழுக்கச் செய்து தன் உயிரையும் இழப்பர். தொல்காப்பியம்,

**‘ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்**

**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறன்**

**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**

**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே’ (தொல். அகம்: 51)**

என்று சுட்டுகின்றார். காமுகரின் செயல்களாக வளையாபதி,

- காமுகனின் இழிசெயல் கண்டு கயவர் நகைப்பர்
- சான்றோர் நாணுவர்
- காமுகன் நாணத்தை பொருட்டாக மதியார்
- கற்பில் மகளிர் இல்லில் உறங்குவர்
- கனவு காணுதலும் கற்பில் மகளிரை நினைத்தலுமே கடமையாகும்.
- உணவினை மறப்பர்
- பரத்தையரால் கைவிடப்படின் அழுவர்.

என்று குறிப்பிடுகிறது. இத்தகைய துன்பங்கள் அனைத்தும் பரத்தமையால் ஏற்படும் என்பதைக் கூறி வளையாபதி பரத்தமையைக் கடிகிறது. பரத்தமையில் ஈடுபடக்கூடிய

மாந்தர் படைப்பாக வளையாபதியின் மைத்துனன் சாத்தன் உள்ளான். அவனது பரத்தையாக அல்லி இடம் பெறுகின்றாள். பரத்தமை கடிதல் இவ்விருவரையும் நோக்கி சுட்டப்பட்டிருக்க வேண்டும்.

**பிறர்மனை நயவாமை**

'மனைக்கு உரியவள் மனைவி. இல்லுக்கு உரியவள் இல்லாள்' என்று குடும்பம் சார்ந்த சொல்லாட்சிகள் பெண்ணை அடிப்படையாகக் கொண்டவை.அத்தகைய பெண் ஓர் ஆணுக்கு உரியவளாக மாறும் போது மற்றவர்கள் அவளை நோக்காத தன்மையே பேராண்மை என்று குறிப்பிடுவர்.

வளையாபதியும் (செய்.10) பிறர்மனை நயவாமையைப்பற்றிப் பேசுகின்றது. ஆற்றுமணல், நீர்த்துளிகள் பனித்துளிகள் போல ஆயிரக்கணக்கான ஆண்கள், பிறர் மனைவி கற்பில்லாதவளாக இருந்து, அவள் மனதில் தான் புகுந்ததற்காய் மகிழ்ந்துள்ளனர். இதன் மூலம் பிறர்மனை நயத்தல் கூடாது என்று ஆண்களும், கற்பே பெண்ணுக்கு பெருமை என்று பெண்களும் உணரும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளமை சிறப்புக்குரியதாகும். பிறர்மனை நயவாமல் இருக்க தன் மனைவி மீது அன்பு கொள்ளவேண்டும். மனைவியோடு இணைந்து அறங்கள் செய்யவேண்டும். பிறர்மனை நயப்போர் நரகருலகை அடைவர் என்பதை,

**'பெண்ணின் ஆகிய பேரஞர்ப் பூமியுள்**

**எண்ண மிக்கவ ரெண்ணனு மெண்ணிலார்' (வளை. 15)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன். பிறர்மனை நயவாமல் இருப்பதற்கான வழி இவ்வாறு கூறப்பட்டது.

**நாகாத்தல்**

ஐம்புலன்களையும் அடக்கி ஆளுதல் வாழ்வில் உய்வுபெற வழியாகும். நாவடக்கம் பற்றி ஆசாரக்கோவை,

**'படிறும் பயனிலவும் பட்டியுரையும்**

**வசையும் புறனும் முரையாரே யென்று**

**மசையாத வுள்ளத் தவர்' (ஆசார கோவை .52)**

என்று குறிப்பிடுகிறது. வளையாபதி 13-ஆம் பாடல் நாவின்று தோன்றும் சொல் அவனை செல்வமுடையவனாக உயர்த்தவும் செய்யும், சிறைக்கோட்டத்தினுள் செலுத்தவும் செய்யும், அவ்வாறே போக பூமியில் பிறத்தலையோ, நரகத்தில் தள்ளவோ செய்யும், ஆகையால் ஐம்பொறிகளினுள் நாவினை மிகவும் அடக்கமாகப் பாதுகாக்க வேண்டும் என்கிறது.

நாகாத்தல் என்ற அறம் சாத்தனுக்கு கூறப்பட்டிருத்தல் வேண்டும். இயல்பிலே தீயவனும் தீச்சொற்கள் பேசுபவனும் ஐம்புலன் அடக்கம் இல்லாதவனாக இருப்பதால் இவ்வறம் சாத்தனுக்கு அறிவுரை வழங்கப் பகன்றதாகவே இருத்தல்கூடும். சமணசமயம் நாவடக்கத்தை **பாஷாசமிதி** என்னும் கிரியையாக, அறமாகச் சுட்டுகிறது.

### செய்யத்தகாதன

வாழ்வில் பல ஒழுக்கங்கள் தீயவையாக உள்ளன. அவற்றைக் கடைபிடிக்காமல் இருப்பது சிறந்த அறமாகும்.

- பொய் கூறாமை
- புறங் கூறாமை
- எவரையும் இகழாமை
- தீயவற்றைப் பேசாமை
- பிறஉயிரைக் கொன்று உண்ணாமை
- கயவர்களோடு உறவு கொள்ளாமை

ஆகியன செய்யத்தகாதன என்று வளையாபதி, 16-ஆம் பாடல் சுட்டுகிறது. மேலும்,

**'கள்ளன்மின் களவாயின யாவையும்**
**கொள்ளன் மின்கொலை கூடி வருமறம்**
**எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையும்**
**நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நண்ணன்மின்' (வளை. 17)**

என்று செய்யத்தகாதன பற்றிக் கூறப்பட்டுள்ளது.

- திருட்டுத் தொழில் கூடாது.
- உயிர் கொலையோடு வரும் அறம் கூடாது.
- வறியவரை இகழ்தல் கூடாது.
- ஆராயாமல் நட்புக் கொள்ளக்கூடாது.
- பிறர்மனையை விரும்புதல் கூடாது.

ஆகிய கருத்துக்களும் வளையாபதியில் இடம்பெறுகின்றன. இவை ஒவ்வொன்றும் அறம் என்பதில் ஐயமில்லை.

### அன்னதானச் சிறப்பு

அன்னதானம் சமணசமயத்தின் உயரிய கொள்கையாகும். உணவு பெறுவதிலும் வழங்குவதிலும் பலவிதக் கொள்கைகளைச் சமணசமயம் பின்பற்றுகிறது. ''சூரியன்

புறப்பட்ட மூன்று நாழிகைக்குப் பின்னரும், சூரியன் மறைவதற்கு மூன்று நாழிகைக்கு முன்னரும் ஒருவேளை உணவு உண்ணவேண்டும் அவ்வுணவினையும் கைகளால் பிச்சையேற்று உண்ண வேண்டும் தான் மட்டும் உண்ணாது, உணவின்றி வாடும் கூன், குருடு, செவிடு போன்ற ஊனமுற்றோருக்கும் மாற்றுத்திறனாளிகளுக்கும் வழங்க வேண்டும்.''[70] அன்னதானச் சிறப்பை,

**'துற்றுள் வாகத் தொகுத்து விரல் வைத்த**

**தெற்றுக் கஃதென்னி னிதுதன் காரணம்**

**அற்றமில் தான மெனைப்பல வாயினும்**

**துற்றவிழ் ஒவ்வாத் துணிவென்னு மாறே' (வளை. 18)**

என்று சுட்டுகிறது. தானப் பொருள்கள் எவையாயினும் அது உணவுக்கு ஈடாகாது. பல்லோருக்கு உணவு வழங்குவதே சிறந்த அறமாகும்.

**கொல்லாமை**

கொல்லாமை விரதமே சமணசமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். சமணர்கள் நீராடாமைக்கு இவ்விரதமே காரணமாகும். ''நீரில் மிகச்சிறிய கண்ணுக்குப் புலப்படாத உயிர்கள் உள்ளன என்பது சமண மதக் கொள்கை. சிற்றுயிரையும் கொல்லாத அகிம்சா விரதத்தை முதன்மையாகக் கொண்ட சமணமுனிவர், உடற்தூய்மைக்காக நீராடினால் அந்நீரில் உள்ள நுண்ணுயிர்கள் ஊறுபட்டு இறந்துவிடும் என்றஞ்சி அவ்வாறு நீராடாது இருந்தார்கள்.''[71] படுக்கும் இடத்திலும் புழு, பூச்சிகள் இல்லாதவாறு இருக்க வேண்டும். நடக்கும் போதும் மூன்று முழதூரம் மயிற்பீலியால் சுத்தம் செய்தே சமணர்கள் நடக்க வேண்டும். உணவு உண்ணும் போதும் பகல் நேரத்தில் உண்ணவேண்டும். இரவு நேரத்தில் உண்டால் அவர்களையும் அறியாமல் உயிர்க்கொலைச் செய்தல் கூடும்.

இவ்வாறு சமணக் கொள்கை முழுவதுமே கொல்லாமையை அடிப்படையாகக் கொண்டதாகும். வளையாபதியும் கொல்லமையை வலியுறுத்துகிறது. இவ்வுலகில் இறந்த பின்னும் புகழோடு வாழ விரும்புவோரும் வீடுபேற்றை அடைய விரும்புவோரும் கொல்லாமை அறத்தைக் கடைபிடிக்க வேண்டுமென்று வளையாபதி 34- ஆம் பாடல் வலியுறுத்துகிறது. உயிர்க்கொலைப் பாவம் எனில் ஊன் உண்ணுதல் பெரும்பாவமாகக் கருதப்படுகிறது, ஊன் உண்ணுதலால் கொலைப்பாவம் நிகழ்கிறது என்பதனை வளையாபதி 21, 22, 29, ஆம் பாடல்களில் பதிவு செய்கிறது. கொல்லாமையும், ஊன் உண்ணாமையும் அறமென வளையாபதி வலியுறுத்துகிறது.

**தவ ஒழுக்கம்**

ஒழுக்கமே அறத்தின் முதல் கூறாகும். ''ஒழுக்கத்தில் சிந்தனையில்லாத இளைஞன் வாழ்க்கையில் எது உண்மை எது போலி என்று கண்டுகொள்ளாமல் எல்லாக்காரியங்களிலும் ஏமாற்றம் அடைவான்''[72] என்று டால்ஸ்டாய் குறிப்பிடுகின்றார். தவஒழுக்கம் வீடுபேற்றை நல்குவதற்கான வழியாகப் பின்பற்றப்படுகிறது. கிடைக்கப்பெற்ற வளையாபதி செய்யுட்களில் ஒன்பது பாடல்கள் ஒழுக்கம் பற்றிப் பேசுகின்றன.

**'பொருளொடு போகம் புணர்த லூறினும்**

**அருளுதல் சான்ற வருந்தவஞ் செய்ம்மின்**

**இருளில் கதிச்சென் றினியிவண் வாரீர்**

**தெருள லூறினுந் தெருண்மி னதுவே' (வளை. 24)**

என்ற செய்யுள் தவஒழுக்கம் பிறவாப் பெருமையைத் தரும். மற்றைய பொருளும் இன்பமும் நிறைந்த இல்லறமாயினும் அப்பேரின்பம் கிட்டா என்கிறது. தவவொழுக்கத்தில் நிற்றல் என்பது தவவடிவாய் அமைந்த அருகனுக்கு கைகூடும் மற்றையோருக்கு அரிதாகும். எனவே,

- மயக்கமற்ற பொருள் உணர்தல்
- மனமொழிமெய் அடங்கி அறவழிநிற்றல்
- விருப்பு வெறுப்பற்ற அருளோடு இருத்தல்
- பொய்ப்பொருளில் பற்று வையாமை

ஆகிய ஒழுக்கங்களை மேற்கொண்டால் தவவொழுக்கம் மேற்கொண்டமைக்குச் சமமாகும் என்று வளையாபதி 25-ஆம் செய்யுள் குறிப்பிடுகிறது. பிறப்பற்ற பேரின்ப உலகையடைய பற்றற்ற தன்மை வேண்டும். அதற்கு தவம் சிறந்த வழியென்று வளையாபதி 42, 43, 45 - ஆம் செய்யுள்கள் கூறுகின்றன. வளையாபதி 44 - ஆம் பாடல் தன் வாழ் நாளின் பெரும்பகுதியை சிற்றின்பத்தில் கழித்துவிட்டு இறுதி காலத்தில் அறம் செய்யாமலும் தவம் செய்யாமலும் இருப்பவனின் புலம்பலாக வெளிப்படுகிறது. இதனை,

**'பெண்டீர் மக்கள் கிளைஞ ரிவர் பின்னுக்குழவி யென்றெண்ணிக்**

**கண்டீரறத்தை விட்டவராற் கடன்பட் டிறுத்தோமன்பர்சிலர்**

**உண்டீ ருடுத்தீர் சுற்றத்தீ ருற்ற வேளைக் கொருவரும் வந்**

**தண்டீருடுத்தீர் சுற்றத்தீ ருற்ற வேளைக் கொருவரும் வந்த**

**தண்டீ ரந்தோ வும்மை நம்பி யான திதுவோ வென்பர் சிலர்' (மெ.வி:30)**

என்று மெய்ஞான விளக்கமும் விளக்குகிறது. மேலைத் தவத்தளவே ஆகும் தான் பெற்ற செல்வம் என்ற கருத்தை வளையாபதி 46- ஆம் செய்யுள் விளக்குகிறது.

**கள்ளாமை**

களவு ஒரு அறமற்ற செயலாகையால் அதைக் கண்டிக்கும் பொருட்டு அறஇலக்கியங்கள் கள்ளாமையின் நன்மையினையும் களவின் தீமையையும் வலியுறுத்துகின்றன. திருக்குறள்,

**'கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்**

**தள்ளாது புத்தே ளுலகு'     (குறள். 260)**

என்று களவின் தீமை குறித்து சுட்டுகிறது. இதனை வளையாபதியும் பிறர் பொருளைக் கவரும் கள்வனை அரசன் தண்டிப்பான்(செய்.31) என்கிறது.

**பொய்யாமை**

பொய் எல்லா அறமற்ற செயல்களுக்கும் காரணமாகிறது. இதனைப் ''பொய்தான் எல்லாக் கொடுமைகளுக்கும் காரணம் பொய்யின்றி கொலை, களவு, குடி, காமம் என்பன தோன்றியிராது''[73] என்று அசோகர் குறிப்பிடுகின்றார். அத்தகைய பொய்யைத் தவிர்த்தல் அறம் என்று வளையாபதியும் வலியுறுத்துகிறது. வாய்மை அறங்களுள் சிறந்தது போன்று பொய்மை தீவினைகளுள் சிறந்ததாகும். பொய்மையின்று நீங்கி, பொய்யாமை எனும் அணிகலனை அணிந்து கொண்டு நன்னெறினின்று நல்லறங்கள் செய்தல் வேண்டும். அவ்வாறு அறஞ்செய்தால் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் எய்த இயலும்(வளை.32) என்பது மெய்ப்பொருளாகும். பொய் கூறுவதனால் ஏற்படும் விளைவுகள் குறித்து வளையாபதி 33 - ஆம் செய்யுளில் கல்வி நலம் கைகூடாது, கைப்பொருளுக்கும் கேடு வரும், எப்பொழுதும் துன்பங்கள் வந்த வண்ணமிருக்கும் என்று சுட்டியுள்ளது.

வளையாபதியில் மாந்தர் படைப்புகளை பாடல்களோடு சேர்த்து விளக்க இயலவில்லை. வளையாபதி காப்பியத்தில் 72 செய்யுள்கள் மட்டுமே கிடைத்துள்ளன. முழுமையும் கிடைக்கப் பெறாமையின் மாந்தர்களின் இயல்புகளை முழுமையும் விளக்க இயலவில்லை. எனினும் இதில் கூறப்பட்ட செய்திகள் அனைத்தும் அறத்தன்மையுடையனவாகலின் அக்கருத்துக்கள் மட்டும் இப்பகுதியில் விளக்கப் பட்டுள்ளன.

## குண்டலகேசி

குண்டலகேசி ஒரு பௌத்த சமயம் சார்ந்த நூலாகும். இதன் ஆசிரியர் நாதகுத்தனார். இந்நூற்காலம் கி.பி.8 ஆம் நூற்றாண்டாகும். 19 செய்யுட்கள் மட்டுமே

கிடைத்துள்ளன. இப்பாக்கள் விருத்தப்பாவால் ஆனது. இஃது ஒரு தருக்க நூலாகும். இந்நூல் முழுமையும் கிடைக்கப்பெறாமையின் அறக்கருத்துக்கள் மட்டும் தொகுக்கப்பட்டுள்ளன. துறவியானபோது களைந்த கூந்தல் மீண்டும் வளர்ந்து சுருள் சுருளாகத் தொங்கியதால் **சுருள் முடியினள்** எனப் பொருள்படும், குண்டலகேசி என்னும் பெயரினைப் பத்திரை என்பவள் பெற்றாள். இக்காரணம் பற்றி நூலும் இப்பெயர் பெற்றது.

**வைசியபுராணமும் குண்டலகேசியும்**

''வைசிய புராணம் 35 -ம் சருக்கமாகிய பஞ்ச காவியத் தலைவரில் காவேரி குண்டலகேசி பெற்ற சருக்கம்''[74] இடம் பெறுகிறது. இதில் காவேரி குண்டலகேசி என்ற படைத்தலைவன் பற்றிக் கூறப்படுகிறது. வைசியபுராணம் கூறும் குண்டலகேசி கதைக்கும் பௌத்த காப்பியமான குண்டலகேசி கதைக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. கதைகள் இரண்டும் மாறுபாடு உடையன. சோழ அரசன் வக்குவனும் குண்டலகேசி காவேரி என்னும் வைசியனும் நண்பர்கள் ஆவர். சோழ அரசனுக்காக பாண்டியமன்னனுடன் காவேரி போரில் ஈடுபடுகின்றான். அப்போரில் காவேரி வெற்றிபெறுகிறான். வெற்றிப் பெற்றுத் திரும்பும் காவேரியைப் பாண்டியனின் படைத்தளபதி கொல்லத்தாயன் இடைமறிக்கிறான். காவேரியால் கொல்லத்தாயனின் தலைக் கொய்யப்படுகிறது. கொல்லத்தாயனின் மனைவி காவேரியிடம் மன்றாடித் தன் தலைவனின் தலையை மீட்டுச் செல்கிறாள். ''இஃது வைசிய புராணம் கூறும் குண்டலகேசியின் கதையாகும்.''[75]

**கதைச் சுருக்கம்**

இராசகிருகம் நகரத்து அரசனின் மந்திரி மகள் பத்திரையாவாள். இவள் கொலைக்குற்றம் சாட்டப்பட்ட கள்வனின் மீது காதல் கொண்டு, அவனையே மணக்கவும் செய்தாள். இன்பமான இல்லறத்தில் ஒருநாள் ஊடலின்போது 'நீ கள்வன்தானே' என்று பத்திரை கூற, காளன் மிக்க சினமுற்றான். எனினும் அப்போது கோபத்தைக் காட்டாது அடக்கியவன், ஒரு நாள் 'தெய்வத்தை வணங்க' என்று கூறி சோரா மலையுச்சிக்கு பத்திரையை அழைத்துச் சென்று கீழே தள்ளிக் கொல்ல முனைந்தான். 'தற்கொல்லியை முற்கொல்லல் தவறல்ல' என்று எண்ணிய பத்திரை, காளனை மலையுச்சியின்று தள்ளிக் கொன்றாள். பின்னர் சமண சமயத்தில் சேர்ந்து பனங்கருக்கால் கூந்தல் களைந்தாள். பின்னர் கூந்தல் சுருண்டு வளர்ந்தமையின் காரணப் பெயராக குண்டலகேசி எனப்பெயர் பெற்றாள். குண்டலகேசி சமணக்கொள்கைகளைக் கற்று சமயப்போர் செய்து வந்தாள். புத்தரின் சீடரான சாரிபுத்தருடன் சமயவாது செய்து தோற்றமையின் புத்தமதத்தில் இணைந்து புத்த கொள்கைகளைப் பரப்பலானாள். ''இக்கதை புலமை வேங்கடாசலம் அவர்களால் குண்டலகேசி எனும் நூலின் முகப்பில் கூறப்பட்டுள்ளது.''[76] நூல்

முழுமையாகக் கிடைக்கப்பெறாமையின் அறக்கருத்துக்கள் ஈண்டு எடுத்துரைக்கப் படுகின்றன.

**மனநலம்**

நல்ல மனநலமே சிறந்த அறத்தினை உருவாக்கும். மனம் தூய்மையோடு அடக்கத்தோடும் இருத்தல் நலம் பயக்கும். இதனை,

**'பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்**
**எய்தாமை சொல்லின் வழுக்காத்து – மெய்யில்**
**புலமைந்துங் காத்து மனமா சகற்று**
**நலமன்றே நல்லா றெனல்' (நீ.நெ.வி : 60)**

என்று நீதிநெறி விளக்கம் சுட்டுகிறது. வளையாபதி, மனத்தூய்மையுடையவரை உயிர் சென்றடைய விரும்பும் என்றும் கூறுகின்றது.

**'வாயுவினை நோக்கியுள மாண்டவய நாவாய்**
**ஆயுவினை நோக்கியுள வாழ்க்கையது வேபால்**
**தீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்**
**தூயவனை நோக்கியுள துப்புரவு மெல்லாம்' (குண். 3)**

என்ற பாடலில் நாவாய் காற்றை எதிர்பார்ப்பது போல உயிரானது வயதை எதிர்பார்த்திருத்தல் இயல்பாகும். அது போலவே தீவினையில்லாத நல்ல மனத்தூய்மையுடைய சான்றோர்களை அடையவே உயிர் எதிர்பார்த்திருக்கும் என்று மனத்தூய்மை பேசப்படுகிறது. மனவடக்கம் மட்டுமே சிறந்த அறமாகும். மற்றைய வெளிவேடங்கள் ஒழுக்கம் ஆகாது என்று குண்டலகேசி குறிப்பிடுகிறது. இதனை,

**'போர்த்தலுடை நீக்குதல் பொடித்து கண் மெய்பூசல்**
**கூர்த்தபனி யாற்றுதல் குளித்தழலு ணிற்றல்**
**சார்த்தரிடு பிச்சையர் சடைத்தலைய ராதல்**
**வார்த்தையிவை செய்தவ மடிந்தொழுக லென்றான்' (குண். 4)**

என்ற செய்யுள் விளக்குகிறது. காவி ஆடை உடுத்தலும் ஆடை உடுத்தாது இருத்தலும் சாம்பலை உடல் முழுவதும் பூசிக்கொள்ளுதலும் மழையிலும் பனியிலும் குளிரிலும் குளித்து அவற்றால் உண்டாகும் துன்பம் கோடையில் பொருத்தலும் தீயினுள் நிற்றலும் இல்லறத்தார் இடும் பிச்சை ஏற்று உண்ணலும் சடை வளர்த்துத் திரிதலும் தவவொழுக்கம் ஆகாது. மனத்தைப் பொறிகள் வழியே செல்ல விடாது அடக்குவதே சிறந்த அறமும் ஒழுக்கமும் ஆகும். இதனை வள்ளுவரும்,

**‘மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்**

**பழித்த தொழித்து விடின்’ (குறள் . 280)**

**‘ மனத்தது மாசாக மாண்டார் நீ ராடி**

**மறைந்தொழுகு மாந்தர் பலர்’ (குறள் . 278)**

என்றும் குறிப்பிடுகின்றார்.

**காமமின்மை**

சிற்றின்பத்தை நீக்குதலே அறத்தையும் வீடுபேற்றையும் அடைவதற்கான வழியாகும். இவ்வுலகில் எக்காலத்தும் பகைமைப் பகைமையால் தணிவதில்லை என்பது புத்தர் வாக்கு. அது போன்று காமம் காமத்தால் தணிவதில்லை என்று குண்டலகேசி 5 ,6-ஆம் செய்யுள்கள் கூறுகின்றன. காமத்தை மிகுதியாக நுகர்ந்து அதன் மீது உள்ள பற்றை அழித்தல் என்பது எரிகின்ற தீயில் நெய் பெய்து அவித்தல் போன்றது (குண். 5) என்றும், வெள்ளத்தை மற்றொரு வெள்ளத்தால் தடுக்க இயலாதது போன்றும் உள்ளது சிற்றின்பம் (குண். 6) ஆகும் என்றும் குறிப்பிடப்படுகிறது. சிற்றின்பம் தவிர்த்தல் சிறந்த அறம் என குண்டலகேசி சுட்டுகிறது.

**யாக்கை நிலையாமை**

குண்டலகேசி, உடம்பினின்று வெளியேறும் காற்று மீண்டும் உட்புகும் பொருட்டே வெளியேறு மென்றாலும், மீண்டும் உட்புகுந்த காற்றுக்காக அறவோர் மகிழமாட்டார். அழியும் இயல்புடைய உடம்பிற்காய் நெஞ்சழிந்து வருந்தவும் மாட்டார் என்று (செய் .7) சுட்டுகிறது. பாம்பும், கொடிய விலங்கும், அரக்கரும் தன்னோடு அன்புடன் பழகுபவருக்கு தீமை செய்யா. ஆனால் கூற்றுவனோ எவருக்கும் இரக்கம் காட்டாதவன். அதனால் எந்த மனிதனும் இறப்பின்றி வாழ இயலாது என்ற நிலையாமையை உணர்தல் வேண்டும் என்று (செய். 8) குறிப்பிடுகிறது.

**‘பாளையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்தும்**

**காளையாந் தன்மை செத்துங் காமுறு மிளமை செத்தும்**

**மீளுமிவ் வியல்பு மின்னே மேல்வரு மூப்பு மாகி**

**நாளுநாட் சாகின் றாமா னமக்குநா மழாத தென்னோ’ (குண். 9)**

என்ற பாடல் நிலையாமையைக் குறிப்பிடுகின்றது. குழந்தைப் பருவம் ,பாலப்பருவம், காளைப் பருவம், இளமைப்பருவம் ஆகியவை ஒவ்வொன்றாக இறந்து முதுமைப்பருவம் அடைகின்றோம். இவ்வாறு ஒவ்வொரு பருவமும் இறக்கும் போதும் அழாது இறுதி இறப்புக்கு மட்டும் அழுவது ஏனோ? என்ற பொருள்பட இப்பாடல் அமைகிறது.

கொலைக்களம் சென்று கொலையுறாமல் மீண்டு வருபவர் உண்டு. ஆனால் மரணத்தின்று எப்போதும் மீள்வது மென்பது இயலாது என்று (செய்.10) குறிப்பிடப்பட்டுள்ளது. உடம்பானது மணம் கமழும் இயல்புடையதன்று. உடம்பின் கண் உள்ள ஒன்பது வாயில்களும் தீ நாற்றமிக்கவை. எனவே ஆண், பெண் அழகான வெளித்தோற்றம் நிலையானதல்ல என்று குண்டலகேசி 11, 12, 13 ஆம் செய்யுள்கள் கூறுகின்றன. குண்டலகேசி 14-ஆம் பாடலும் யாக்கை நிலையாமைப் பற்றிச் சுட்டுகிறது. 15- ஆம் பாடல் அரசனின் குணநலம் பற்றிக் குறிப்பிடுகிறது. அறத்தைக் குறிக்கோளாகக் கொண்ட அரசன் புத்த பெருமானை ஒத்தவன் என்று குறிப்பிடப்படுகிறது.

**அரசனின் ஆட்சியறம்**

1. ஓருயிர் மற்றொரு உயிரை சினவாமை
2. பொய் பேசாமை
3. எமன் குடிமக்களின் உயிரைக் கவராது காத்தல்
4. இருப்பவர் இல்லாதவருக்கு வழங்குதல்

இவற்றையே ஆட்சியறமாக ஆணை பிறப்பிக்க வேண்டுமென்று அரசனுக்கு குண்டலகேசி ஆணை பிறப்பிக்கிறது.

**பழிவராமல் காத்தல்**

குற்றம் வராமல் காத்தல் பற்றி,

**'குற்றமே காக்கப் பொருளாகக் குற்றமே**
**அற்றற் தருஉம் பகை' (குறள். 434)**

என்று குறள் குறிப்பிடுகிறது. இதனை குண்டலகேசி,

**'மண்ணுளார் தம்மைப் போல்வார் மாட்டதே யன்று வாய்மை**
**நண்ணினார் திறத்துங் குற்றங் குற்றமே நல்ல வாகா**
**விண்ணுளார் புகழ்தற் கொத்த விழுமியோ னெற்றி போழ்ந்த**
**கண்ணுளான் கண்டந் தன்மேற் கறையையார் கறையன் றென்பார்' (குண்.17)**

என்று சுட்டுகிறது. சிவபெருமானின் கழுத்திலே அமைந்திருந்தாலும் கறை குற்றமே ஆகும். குற்றம் ஆன்றோர் சான்றோரிடத்தும் தோன்றும் இயல்புடையது. நல்லவரிடத்து குற்றம் காணப்பட்டாலும் அது பழியே ஆகும். எனவே பழிவராமல் காத்தலே அறமாகும்.

**ஊழ்**

ஊழ், நல்லூழ், தீயூழ் என இருவகைப்படும் முற்பிறவியின் நன்மை தீமை செயல்களால் ஊழ் தீர்மானிக்கப்படுகிறது. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பதே ஊழ் ஆகும். இப்பிறவியிலும் மற்றும் பிறவிதோறும் ஊழ் சார்ந்த அறம் தொடரும் என்பது சமய கொள்கை ஆகும்.

**'…. …. …. மின்னொடு**
**வானந் தண்டுளி தலைஇ யானது**
**கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று**
**நீர் வழிப் படூஉம் புணைபோ லாருயிர்**
**முறைவழிப் படூஉ' (புறம்.192)**

என்று ஊழ் பற்றிப் புறநானூற்றில் கணியன் பூங்குன்றனார் குறிப்பிடுகின்றார். குண்டலகேசியும் ஊழ் பற்றி,

**'மறிப மறியு மலிர்ப மலிரும்**
**பெறுப பெரும் பெற் றிழப்ப விழக்கும்**
**அறிவ தறிவா ரமுங்கா ருவவா**
**ருறுவ துறுமென் றுரைப்பது நன்று' (குண். 18)**

என்று குறிப்பிடுகிறது. அழியும் பொருளெல்லாம் அழிந்தே தீரும். வளரும் ஊழுடையன வெல்லாம் வளர்ந்தே தீரும். பயன் பெறுகின்ற ஆகூழுடையன பெற்றே தீரும். பெற்ற பயனை இழக்கும் போகூழுடையன அவற்றை இழந்தே தீரும். ஆதலால், அறிதற்குரிய பொருளியல்பினை அறிந்த மேலோர் பொருளிழப்பு நேர்ந்துழி இது பொருளியல்பு என்றுணர்ந்து அவ்விழப்பின் பொருட்டு வருந்துதலிலர். அங்ஙனமே தாம் சிறந்த பேறுகளைப் பெற்ற வழியும் இஃது ஊழின் செயலென்றுணர்ந்து அப்பேறு கருதியும் பெரிதும் களிப்பது சிலராவர். ஆதலால் வருவது வந்தே தீரும் என்று உலகோர் கூறும் பழமொழி மிகவும் வாய்மையுடையதென்று கொள்ளுங்கள். மேலும் குண்டலகேசியின் இறுதிப்பாடல் காளன் கூற்றாக இருக்கக் கூடும். அரசர் கொலை தண்டனை விதித்த பின்னும் தன் தவறுக்கே தண்டனை என்பதை உணர்ந்து ஊழ் விட்ட வழியில் தன்னை ஒப்படைத்து நின்ற நிலையை இப்பாடல் சுட்டுகிறது. எனவே இப்பாடலும் ஊழ் பற்றியதாகும்.

## தொகுப்புரை

- ‘ஐம்பெருங் காப்பியங்களில் அறமாந்தர்கள்’ எனும் இரண்டாமியலில் ஐம்பெருங் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, ஆகியவற்றில் உள்ள அறமாந்தர்கள் பற்றி ஆராயப்பட்டுள்ளது.
- சிலப்பதிகாரம் சமணசமயம் சார்ந்த அறங்களை எடுத்துரைக்கிறது. ‘கோவிலன் கதை’ என்ற வைணவ சமயத் தொடர்புடைய கதை ஒன்றும் இலக்கிய உலகில் வழங்கப்பட்டு வருகிறது.
- சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகள், சாரணர், மாடல மறையோன் ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்களாகப்பகுப்பட்டு ஆராயப்பட்டுள்ளனர்.
- கண்ணகி, கோவலன், சாயலனும் அவன் மனைவியும், மாதரி ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவார்.
- மணிமேகலை ஒரு பௌத்த காப்பியமாகும். பௌத்த மத அடிப்படையில் அறங்கள் கூறப்பட்டுள்ளன. இக்காப்பியத்தில் அறவணவடிகள், சுதமதி, சாதுவன் மணிமேகலை ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்கள் ஆவர். ஆபுத்திரன், கோதமை, மாதவி ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர். மணிமேகலை அறமுரைக்கும் மாந்தராகவும், அறவழி வாழ்ந்த மாந்தராகவும் படைக்கப்பட்டுள்ளாள்.
- சீவக சிந்தாமணி சமண சமயக் காப்பியமாகும். இதில் அறமுரைக்கும் மாந்தர்களாக சுதன்மர், சாரணர் போன்ற மாந்தர்கள் பற்றியும், சீவகன், சச்சந்தன், விசயை போன்ற அறவழி வாழ்ந்த மாந்தர்கள் பற்றியும் ஆராயப்பட்டு சமண அறங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- வளையாபதி, குண்டலகேசி நூல்கள் முழுமையும் கிடைக்கப் பெறாமையின் அவற்றில் உள்ள அறக்கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன. வளையாபதி சமண சமய நூலாகவும், குண்டலகேசி பௌத்த சமய நூலாகவும் உள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. பாக்யமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.210
2. கி.வா.ஜகன்நாதன், தமிழ்க் காப்பியங்கள், ப. 222
3. சாமுவேல் தாசன், கவுந்தி, ப.45
4. தெ. பொ. மீனாட்சிசுந்தரம், குடிமக்கள் காப்பியம், ப. 126
5. செ.மா.கணபதி, கழுகுமலையும் சமணமும், ப.8
6. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.163
7. மேலது, ப. 163
8. மேலது,ப.26
9. மேலது.
10. மேலது.
11. மேலது.
12. மேலது, பக்.26-27
13. மேலது, ப.151
14. மேலது,ப. 27
15. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ..ஆ), சிலப்பதிகாரம், ப.236
16. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.25
17. சாமுவேல் தாசன்,கவுந்தி, ப.42
18. ந.மு.வேங்கசாமிநாட்டார்(உ..ஆ), சிலப்பதிகாரம், ப.248
19. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 43
20. பாரதியார் கவிதைகள், ப. 52
21. சாமுவேல்தாசன், கவுந்தி, ப.40
22. ந.மு. வேங்கடசாமி நாட்டார், சிலப்பதிகாரம், ப.241
23. பொ.அழகு கிருஷ்ணன்,சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ப.32
24. மேலது.
25. வாழ்வியற் களஞ்சியம் –2, ப. 52
26. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 190
27. ஸ்வாமி, ரிக்வேதம், ப. 25
28. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், குடிமக்கள் காப்பியம், ப. 163
29. க. பஞ்சாங்கம், சிலப்பதிகாரத் திறனாய்வுகள், ப. 108
30. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், குடிமக்கள் காப்பியம், ப. 167
31. துரை.சிங்காரவேலு,சிலம்பின் இரண்டாவது ஒலி, ப. 13

32. இரா. காசிராசன், உலகக்காப்பியங்கள், ப. 9
33. அ. கோபிநாத், தமிழ்க்காப்பியங்களில் அவலச்சுவை, ப. 188
34. ந.மு.வேங்கடசாமி நாட்டார்(உ.ஆ), சிலப்பதிகாரம் ,ப.361
35. மேலது,ப.377
36. இளங்கோவின் பாத்திரப்படைப்பு, ப. 45
37. பௌத்தமும் தமிழும், நயிலை.சினி. வேங்கடசாமி, ப. 15
38. மணிமேகலை, ந. மு.வே, ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ..ஆ), ப.570
39. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப.17
40. மருதன், பவுத்த மதம், ப. 45
41. ஸ்வாமி, புத்தர்பிரான் வாழ்வும் வாக்கும், ப. 192
42. மேலது, ப. 203
43. ம.சோ.விக்டர், தமிழர் சமயம்,ப. 62
44. K.L.ராமமூர்த்தி (தொ.ஆ), புத்தரின் போதனைகள், ப.14
45. மேலது, ப. 17
46. மயிலை சீனி. வேங்கடசாமி,பௌத்தமும் தமிழும்,ப.21
47. ஸ்வாமி, புத்தர்பிரான் வாழ்வும் வாக்கும், பக். 124 – 125
48. மருதன், பவுத்த மதம், ப. 60
49. துரை. தண்டபாணி (உ.ஆ), மணிமேகலை,ப.4
50. எம்.தங்கராஜ் (தொ.ஆ), அம்பேத்கரும் பௌத்தமும், ப.4
51. ஸ்வாமி,புத்தர்பிரான் வாழ்வும் வாக்கும், ப. 163
52. மேலது, ப. 170
53. உ.வே.சாமிநாதையர்(உ.ஆ),சீவகசிந்தாமணி, ப. 2
54. ஜீவபந்து. டி.எஸ்.பால், தமிழகத்தில் ஜைனம், ப. 88
55. ஜெ. ஶ்ரீசந்திரன், பஞ்சபரமேஷ்டிகளும் ஜைனதத்துவமும், ப. 27
56. மேலது, பக். 34-47
57. மேலது, பக். 33, 49
58. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 20
59. உ.வே.சாமிநாதையர் (உ..ஆ) ,சீவகசிந்தாமணி, ப. 1378
60. மேலது, ப. 232 (4.ஆம் பதிப்பு)
61. வெள்ளிமணி, செப்டம்பர் – 2009, ப. 1
62. உ.வே.சாமிநாதையர் (உ..ஆ) ,சீவகசிந்தாமணி (4), ப.849
63. உ.வே.சாமிநாதையர் (உ..ஆ) , சீவகசிந்தாமணி (7), ப. 803

64. சமணம் (உலகச் சமயவரிசை), ப. 14
65. மு. கதிரேசன் செட்டியார்,சுக்கிரநீதி, ப. 26
66. மயிலை சீனி. வேங்கடசாமி நாட்டார். சமணமும் தமிழும், ப.26
67. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, பக். 92 – 93.
68. புலமை வேங்கடாசலம்(உ.ஆ), வளையாபதி ,பக். 4-13
69. கி.வா.ஜகன்நாதன், தமிழ்க் காப்பியங்கள் , ப.239
70. மயிலை சீனி. வேங்கடசாமி,சமணமும் தமிழும், ப. 25
71. புலமை வேங்கடாசலம்(உ.ஆ), வளையாபதி, ப. 22
72. பெ. வேலுச்சாமி, அறிஞர்களின் அறவுரைகள், ப.14
73. மேலது, ப. 59
74. கி.வா.ஜகன்நாதன், தமிழ்க் காப்பியங்கள், ப. 232
75. மேலது, ப.33
76. புலமை வேங்கடாசலம்(உ.ஆ), குண்டலகேசி, பக். 3 – 6

xxxxx

# யசோதர காவியம்

யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி ஆகியவை ஐஞ்சிறுங்காப்பியங்கள் ஆகும். இவை அனைத்தும் சமண சமயம் சார்ந்த காப்பியங்கள் ஆகும். இவற்றில் அறம் எடுத்துரைக்கும் மாந்தர்கள் பற்றியும் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. யசோதர காவியம் ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றாகும். இதன் ஆசிரியர் வெண்ணாவலுடையார் வேள் ஆவார். இந்நூல் 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. சமண சமயம் சார்ந்த விருத்தப்பாவால் ஆகிய நூலாகும். இக்கதை வடமொழி நூல் சார்ந்த தழுவலாக அமைந்துள்ளது. இதற்குச் சான்றாக மாந்தர்களின் பெயர்களைக் குறிப்பிட இயலும். யசோதர காவியம் ஐந்து சருக்கங்களைக் கொண்டது. "வடமொழியில் குணப்பத்திரர் எழுதிய உத்தர புராணத்தில் யசோதரன் கதை வருகிறது. புட்பதந்தர் எழுதிய யசோதர சரிதம் என்னும் நூலைத் தழுவி யசோதர காவியம் எழுந்தது. உயிர்க்கொலை தீது, சிற்றின்பத்தின் சிறுமை, பேரின்பத்தின் பெருமை, இசை காமத்தைத் தூண்டும் என்னும் கருத்துக்கள் யசோதர காவியத்தில் வற்புறுத்தப்படுகின்றன. மாளவ பஞ்சமம் என்னும் கர்நாடக இசை, நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. கர்நாடக இசை நூல்களான சங்கீத சூரியோதயம், சாரங்க தரபத்திரி ஆகியவற்றில் மாளவ பஞ்சமம் என்னும் இசை குறிப்பிடப்படவில்லை. எனவே இந்நூல் ஆசிரியர் காலம் முந்நூறு ஆண்டுகட்கு முற்பட்டதென துணியப்படுகிறது"[1] என்று பாக்யமேரி தனது இலக்கிய வரலாற்று நூலில் யசோதர காவியம் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

**கதைச்சுருக்கம்**

மாரிதத்தன் என்னும் மன்னன் உயிர்களின் இரட்டைகளைச் சண்டமாரிக்குப் பலியிட எண்ணினான். அதனடிப்படையில் அபயமதி – அபயருசி என்ற மனித இரட்டைகள் பலியிட பலிபீடத்திற்கு அழைத்துவரப்பட்டனர். இவ்விரு இளந்துறவியரின் இயல்பினைக் கண்டு அவர்களின் வரலாற்றை மாரிதத்தன் கேட்டறிகிறான். அவந்தி நாட்டு மன்னனான யசோதரன், மனைவி அமிர்தமதி, அட்டபங்கன் என்ற யானைப்பாகனோடு கழிகாமம் துய்ப்பதை அறிந்து வருந்துகின்றான். அவன் வருத்தத்தைப் போக்க யசோதரனின் தாயாகிய அமிர்தமதி உயிர்ப்பலியிடுமாறு கூறுகின்றாள். யசோதரன் மாவால் செய்த கோழியைப் பலியிடுகின்றான். அமிர்தமதி தன்தீமதியால் யசோதரனுக்கும் சந்திரமதிக்கும் உணவில் நஞ்சிட்டு கொல்கின்றாள். இதனால் யசோதரன், சந்திரமதி இருவரும் பலவித விலங்குப் பிறவிகளை அடைந்து இறுதியில் அபயமதி – அபயருசியாக பிறப்பெடுத்ததாக மாரிதத்தனிடம் கூறுகின்றனர்.

அபயமதி – அபயருசி இருவரும் யசோதரனின் மகனான யசோமதியின் மக்களாகப் பிறப்பெய்தி துறவு பூணுகின்றனர். யசோமதி பலவிதமான உயிர்க்கொலை செய்த பின்னர் அகம்பன முனிவரிடம் அறம் கேட்டு மனம் மாறுகின்றான். அபயமதி – அபயருசி இருவரும் தேவருலகை அடைவதாக இக்காப்பியம் படைக்கப்பட்டுள்ளது.

**அறமுரைக்கும் மாந்தர்கள்**

யசோதரகாவியத்தில் அறமுரைக்கும் மாந்தர்களாக அபயமதி-அபயருசி, சுதத்த முனிவர், அகம்பன முனிவர் ஆகியோர் இடம்பெறுகின்றனர்.

**அபயமதி – அபயருசி**

யசோதர காவியம் அபயமதி-அபயருசி என்ற இரட்டையர்கள் அறம் கூறுபவர்களாகப் படைத்துக் காட்டுகிறது. யசோதரனும், அவன் தாய் சந்திர மதியும் பல விலங்குப் பிறவிகளைக் கடந்து அபயமதி – அபயருசியாக பிறப்பெடுக்கின்றனர். சமணக் கொள்கைகளைக் கடைபிடித்து வீடுபேறு அடைவதாக இவர்கள் படைப்பு அமைகிறது.

**தோற்றம்**

முதலாவது சருக்கத்தில் அபயமதி – அபயருசி என்ற இரட்டையர் உபாசகர் குழுவுடன் வருவதாக அவர்களின் அறிமுகம் உள்ளது. வெண்ணிற ஆடை உடுத்திய இளமையோடு கூடிய துறவியராக அவர்களது தோற்றம் கூறப்படுகிறது. சுவேதாம்பர சமணத்துறவிகளாக இவர்கள் சித்தரிக்கப்படுகின்றனர்.

**'வள்ளிய மலருஞ் சாந்தும் மணிபுனை கலனு மின்றாம்**
**வெள்ளிய துடையென் றாகி வென்ற ருருவே மேலார்.' (யசோதர . 27)**

என்று அவர்களது தோற்றம் கூறப்படுகிறது. மலர், சாந்து, அணிகலன் இன்றி வெண்ணிற ஆடை புணைந்து பெரிய தவயோகிகள் போல் அல்லாமல் சின்னஞ்சிறு துறவிகளாய் காட்சிதந்தனர்.

**சமணக் கொள்கையைக் கடைபிடித்தல்**

இரட்டையர்கள், குழந்தைப் பருவத்தினர் ஆகையால் குருவான சுதத்த முனிவர் அவர்களை உணவு ஏற்று உண்ணுமாறு நகர்க்கு அனுப்புகின்றார்.

**‘வில்லின தெல்லை கண்ணால் நோக்கிமெல் லடிகள் பாவி**

**நல்லருள் புரிந்து யிர்க்கண் ணகைமுத லாய நாணி**

**இல்லவர் எதிர்கொண் டீயின் எதிர்கொளுன் டியருமாகி**

**நல்லற அமர்த முண்டார் நடத்தனர் வீதி யூடே’ (யசோதர . 28)**

என்பதாக அவர்கள் சென்றமை விளக்கப்படுகிறது. சமணக் கொள்கைளை சிறுவயதினராக இருந்த போதும் மறவாமல் கடைபிடிக்கின்றனர். ஒருவிற்கிடைத்தூரம் கண்களால் கூர்ந்து நோக்கி பாதங்களை மெல்ல எடுத்து வைக்கின்றனர். அவர்களின் பாதங்களினால் சிறு உயிருக்கும் தீங்கு நேராதவாறு பார்த்து நடக்கின்றனர். தான் கேட்டுப் பெறாது பிறர் அவராக இடும் உணவை ஏற்று உண்டனர். இது சமணஅறமாகும்.

**‘ நகையே அழுகை இளிவரல் மருட்கை**

**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று**

**அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப ’ (தொல்காப்பியம்.1197)**

என்று தொல்காப்பியர் எண்வகை மெய்ப்பாடுகள் பற்றிக் குறிப்பிடுவார். இவற்றில் நகை முதலிய மெய்ப்பாட்டு குற்றங்கள் தன்னில் நிகழாதவாறு பார்த்துக் கொள்வதும் சமண அறமாகக் கருதப்படுகிறது. “பெண் பிறவி தாழ்ந்த பிறவி என்பதும், பாவம் செய்தவர் பெண்ணாகப் பிறக்கிறார் என்பதும் சமண சமயக் கொள்கை. மேலும்,

**‘இந்திரன் தேவிமார்க்கும் இறைமைசெய் முறைமை இல்லை**

**பைந்தொடி மகளிராவார் பவத்தால் பெரிய நீரார்’**

என்று மேருமந்திர புராணமும் கூறுகின்றது.” [2] இந்தக்கருத்தை யசோதரகாவியமும் வழிமொழிகின்றது. இரட்டையர்களான அபயமதி-அபயருசி ஆகியோர் நரபலிக்காக தங்களையும், தங்கள் மனதையும் உறுதிபடுத்திக்கொண்டனர். அபயருசி, தன் சகோதரியான அபயமதி, பெண் என்ற காரணத்தால் மனஉறுதி இருக்காது என்று அஞ்சினான். அபயமதி, ‘பெண்ணுடம்பெடுத்த உயிர்கள் அழிக்கத்தக்கன, பெருமை சிறக்கும் நுண்ணறிவும் கலங்காத மன வன்மையும் உடையவையல்ல என்று சான்றோர்கள் கூறுவதை எண்ணி அஞ்சாதே ! நல்லறத்தில் கருத்தூன்றித் தெளிந்த மனமுடையவர்கள் இப்பிறவியின் கண் விருப்பம் கொள்ளார்’ என்று கூறி அபயருசியின் அச்சத்தைப் போக்கினாள். இதன்மூலம் சமண சமயம் பெண்களை மனஉறுதியற்றவர்களாகப் படைத்துக் காட்டுவதை அறியமுடிகின்றது.

**யாக்கை நிலையாமை**

யாக்கை நிலையில்லாதது என்பதைப் பல சமயங்கள் கற்பிக்கின்றன. விவேகசிந்தாமணி யாக்கையின் இழிவு பற்றி,

**'பந்தஉடல் வீண்பாடு பட்டஉடல் சீசீதுர்க்**
**கந்தஉடல் ஒன்றுக்(கு)ஆ காதஉடல் – இந்த உடல்**
**வைத்துப்பார்த்(து) என்ன வலிய உயிர் மாய்த்துச்**
**செத்துப்போ னாலும் நல்லதே' (விவேகசிந்தாமணி . 40)**

என்று கூறுகின்றது. ஒரு காரியத்திற்கும் உதவாத இந்த உடல் இருப்பதைவிட இறப்பதே மேல் என்கிறது. யசோதர காவியமும் யாக்கை நிலையாமை பற்றி அபயமதி–அபயருசி மூலம் வலியுறுத்துகிறது. உடம்பிற்கேயன்றி உயிருக்கு அழிவில்லை. அவ்வுயிர் உடம்பினின்று நீங்குவதற்காக துன்பப்பட வேண்டியதில்லை. யசோதரனும் சந்திரமதியும் பல விலங்குப் பிறவிகளை எடுத்துள்ளனர். இறுதியாகவே அவ்வுயிர்கள் உண்மைகளை உணர்ந்து அபயமதி – அபயருசியாகப் பிறப்பெடுத்துள்ளன. இப்பல்வகைப் பிறப்புகளும் ''கணம், ஆவளி, உயிர்ப்பு, தோவம், இலவம், நாளி, மூழ்த்தம், நாள், வாரம், பக்கம், திங்கள், இருது, அயனம், ஆண்டு, பணை, யுகம், பூவம், பல்லம், அந்தம்''[3] என்று கூறப்படும் கால எல்லைக்குள் நிகழ்ந்ததாகும். ஒவ்வொரு பிறவியின் இறப்பும் மீண்டும் பிறப்பதற்கே நிகழ்கிறது. அறவழியில் நின்று அறச் செய்கைகளின் மூலமும் அறஒழுக்கக்கடைபிடிப்பின் மூலமும் பிறவியைத் தடுத்து நிறுத்த இயலும்.

நரககதியில் பெற்ற உடம்பும் அழிவை எய்துகிறது. ''நரகவகையேழ் என்றும், ஒவ்வொன்றிலும் முறையே பதின்மூன்றும், பதினொன்றும், ஒன்பதும், ஏழும், ஐந்தும், மூன்றும், ஒன்றுமாகப் புரைகள் உண்டென்றும், இவற்றுள் பதின்மூன்று புரையினையுடைத்தாகிய முதல் நரகம் எல்லாவற்றிற்கும் கீழாம் நரகமென்றும், அதன்மேல் ஏனைய படிப்படியாக வுளவென்றும் மேருமந்தரம் முதலிய நூல்கள் கூறும். கீழாம் நரகத்தும் பதின்மூன்றாம் புரையிலுள்ளார் மூன்று முழு வுயரமுள்ள வுடம்பினராய்த் தொடங்கி ஏழே முக்காலே வீசம் வில்லளவு உயர்ந்து, பின்பு அதற்கு மேற்பட்ட புரையையடைந்து இரட்டித்த உயரம் பெற்று, இவ்வாறே புரை புரையாக ஏழு நரகத்தும் எழுமுறை, ஐந்நூறு வில்லுயரம் எய்துங்காறும் உழலுவரென்றும் கூறுப''[4] இந்து சமயமும் கீழ் உலகங்கள் ஏழு என்று குறிப்பிடுகிறது. அவை ''அதல, விதல, நிதல, சுதல, தலாதல, ரசாதல, பாதாள'' [5] என்பவையாம்.

‘நரககதியிற்று விலங்குகதியில் பிறந்த உடம்பும் மக்கள் கதி பெற்ற உடம்பும் தேவகதி பெற்ற உடம்பும், இந்திரகதி பெற்ற உடம்பும், வேந்தர் பெற்ற உடம்பும் அழியக் கூடியதாகும். முன்னே உடுத்துப் பழையதாகிய ஆடையை நீக்கிவிட்டு அழகிய புத்தாடை அணிவது போன்றது பிறப்பு’ என்று யாக்கை நிலையாமையினை அபயருசி எடுத்துக் கூறுகின்றான்.

**உயர்ந்த உள்ளம்**

அபயமதி – அபயருசி இருவரும் தங்கள் உயிரைப் பலியிட மனமுவந்து பலிபீடம் வந்தனர். அப்போது அரசனை வாழ்த்தவும் செய்தனர். ‘தனக்கென வாழாது பிறருக்காக வாழ்தல் இன்பம் பயக்கும்’ எனும் புறநானூற்று அடிகளுக்கு இணங்க அரசனின் மகிழ்ச்சிக்காக தங்கள் உயிரை வழங்க முன்வந்தனர். தங்களைக் கொல்லத் துணிந்தவன் என்றும் பாராது அவனை,

**‘மறவியின் மயங்கி வையத் துயிர்களை விருத்தஞ்செய்யா**
**தறவியன் மனத்தை யாகி ஆருயிர்க் கருள்பரப்பிச்**
**சிறையன பிறவி போக்குந் திருவறம் மருவிச் சென்று**
**நிறைபுக முலகங் காத்து நீடுவாழ் கென்று’ (யசோதர . 60)**

வாழ்த்தி நின்றனர். இஃது அவர்களின் உயர்ந்த உள்ளத்தைக் காட்டுகிறது. ‘உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்’ என்பதற்கிணங்க இவர்களது எண்ணங்களும் உயர்ந்ததாகவே அமைகிறது.

**விலங்குப் பிறப்புகள்**

அபயமதி – அபயருசி என்ற இருவருமாக பிறப்பதற்கு முன் யசோதரனும் அவன் தாய் சந்திரமதியாகப் பிறந்து யசோதரனின் மனைவியால் நஞ்சூட்டி கொல்லப்பட்டு, பின்னர் பல விலங்குப் பிறப்புக்களை அடைந்தனர்.

## பிறப்புகள்

| கொல்பவர் | → | சந்திரமதி | – | யசோதரன் | ← | கொல்பவர் |
|---|---|---|---|---|---|---|
| ↓ | | ↓ | | ↓ | | ↓ |
| வேடன் | → | மயில் | – | மயில்முட்டை | | – |
| | | ↓ | | ↓ | | |
| யசோமதி | → | நாய் | – | மயில் | ← | அமிர்தமதி |
| | | ↓ | | ↓ | | |
| முள்ளம்பன்றி | → | கருநாகம் | – | முள்ளம்பன்றி | ← | கரடி |
| | | ↓ | | ↓ | | |
| யசோமதி | → | முதலை | – | உலோகிதமீன் | ← | யசோமதி |
| | | ↓ | | ↓ | | |
| யசோமதி | → | பெண்ஆடு | – | ஆண் ஆடு | ← | ஆட்டுக்கிடா |
| | | ↓ | | ↓ | | |
| யசோமதி | → | எருமை | – | ஆட்டுக்குட்டி (ஆண் தகர்) | ← | யசோமதி |
| | | ↓ | | ↓ | | |
| யசோமதி | → | கோழி | – | கோழி | ← | யசோமதி |
| | | ↓ | | ↓ | | |
| | | அபயமதி | | அபயருசி | | |
| | | ↓ | | ↓ | | |
| | | தேவர் | – | தேவர் | | |

சந்திரமதி மயிலாகப் பிறந்த போது யசோதரன் மயில் வயிற்றில் முட்டையாக இருந்தான். வேடன் ஒருவனால் அம்பெய்யப்பட்டு மயில் இறந்த போது முட்டை வழுக்கி விழுந்தது. அம்முட்டை கோழிமுட்டைகளோடு வைக்கப்பட்டு பொறிக்கப்பட்டது. அடுத்தபிறப்பில் மயில் நாயாகப் பிறந்து மயிலோடு அரண்மனையில் வளர்ந்தது. மயில் முற்பிறவியின் ஞாபகம் வர அட்டபங்கனின் கண்ணைக் கொத்திக் குருடாக்கியது. இதைக் கண்ட அமிர்தமதி மயிலைக் கல்லால் அடித்துக் கொன்றாள். அதைப் பார்த்த நாயும் முற்பிறவி அறிந்து மயிலை தன் வாயில் கௌவிச் சென்றது. மயிலை நாய் கொன்றதாக எண்ணிய அரசன் யசோமதி நாயைக் கொன்றான். இப்பிறப்பிலும் இருவரும் இழிசாவு பெற்றனர்.

அதன்பின் நாய் கருநாகமாகவும், மயில் முள்ளம்பன்றியாகவும் பிறந்தது. இயற்கையிலே இவ்வினங்களுக்கிடையே உள்ள பகையில் முள்ளம் பன்றி கருநாகத்தைக் கொன்று புசித்தது. அம்முள்ளம் பன்றியைக் கரடி ஒன்று கொன்றது. இவ்வாறு இப்பிறப்பிலும் இழிசாவுற்று கருநாகம் முதலையாகவும், முள்ளம்பன்றி உலோகித மீனாகவும் பிறந்தன. முதலை கூனியொருத்தியின் காலைக் கடித்து

விழுங்கியது. இதனால் அரசனான யசோமதி அம்முதலையைக் கொல்ல உத்தரவிட்டான். உலோகித மீன் அந்தணர்களால் அரசனிடம் கொடுக்கப்பட்டு சிராா்த்தத்திற்கு பயன்படுத்தப்பட்டது. இதன் மூலம் அந்தணர்கள் எத்தகைய இழிகுலத்தினர் என்பதை சமணசமயம் உலகிற்கு எடுத்துக்காட்ட விரும்புகிறது. இதனை,

**'மற்றை மீனுமோர் வார்வலைப் பட்டதை**

**அற்றை யில்வரு மந்தணர் கண்டனர்**

**கொற்ற மன்னவ நின்குலத் தார்களுக்**

**குற்ற செய்கைக் குரித்தென ஓதினார்.' (யசோதர . 184)**

என்ற அடிகள் விளக்குகின்றன. மறையோதும் அந்தணர்கள் உயிர்க்கொலைப் புரிய துணைநின்றதை இப்பாடல் உணர்த்துகின்றது.

பின்னர் முதலை பெண் ஆடாகவும், மீன் ஆண் ஆடாகவும் தோன்றியது. ஆண் ஆடு, பெண் ஆட்டைக் கூடியது பொறாத வேறொரு ஆட்டுக்கிடா ஆண் ஆட்டைக் கொன்றது. பெண் ஆடு யசோதமதியால் வேட்டையாடப்பட்டது. இப்பிறப்பில் இழிகாமம் கூடாது என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. தாயின் நலத்தை தந்தை நுகராது மகனாகிய யசோதர ஆடு நுகர்ந்தது இழிசெயலாக கூறப்பட்டுள்ளது. எத்தனை பிறப்புகள் எடுத்தாலும் உறவு நிலையும் அதற்குரிய மதிப்பும் மாறுவதில்லை என்பதைச் சமண சமயம் வலியுறுத்துகிறது. பௌத்த சமயமும் மணிமேகலை, தன் முற்பிறப்பு கணவனான உதயகுமாரனை தொழுவதாகக் கூறி இக்கருத்தை வலியுறுத்துகிறது. ஆண் ஆட்டைக் கொன்ற மற்றொரு ஆட்டுக்கிடா யசோதரனின் தந்தையாக இருக்கக் கூடும். எனவே தான் ஆண் ஆட்டின் மீது சினம் ஏற்பட்டிருக்கவேண்டும். அதற்கு அடுத்த பிறவியில் ஆண் ஆடு, பெண்ணாட்டின், கருவில் இருந்து மற்றொரு ஆண் ஆடாகத்தோன்றியது. பெண்ணாடு எருமையாகப் பிறந்தது. எருமையை அந்தணர்களின் சொல்படி யசோமதி சிராா்த்தத்திற்காக பலியிட்டான். இவ்விடத்தும் அந்தணர் உயிர்க்கொலைச் செய்தனர் என்ற செய்தி பதிவு செய்யப்படுகிறது. இஃது,

**'இன்றெ றிந்த எருமை யிதுதனைத்**

**தின்று தின்று சிராத்தஞ் செயப்பெறின்.**

**நன்ற தென்றன ரந்தணர் நல்கினான்**

**நின்று பின்சிலர் நீதிகள் ஓதினார்' (யசோதர . 192)**

என்று கூறப்பட்டுள்ளது. பின்னர் இரண்டும் கோழிகளாகப் பிறப்பெய்தி அகம்பன முனிவர் கூறிய அறவுரைகளைக் கேட்டு பழம்பிறப்பு உணர்ந்து கொக்கரித்தன. யசோமதி முனிவரின் அறவுரையைக் கேட்க இக்கோழிகள் இடையூறாக இருப்பதாக எண்ணி அவற்றைக் கொன்றான். பின்னர் யசோமதியின் மனைவியாகிய புட்பாவலியின் வயிற்றில்

அபயமதி – அபயருசியாக இரட்டை மக்களாகத் தோன்றி சுதத்த முனிவரிடத்து சேர்ந்து துறவியாகி அறஒழுக்கத்தில் ஒழுகினர். அதன்பயனாய்த் தேவருலகத்தை அடைந்து தேவர்களாய் மகிழ்ந்திருந்தனர். இவ்வாறு அபயமதி – அபயருசியின் பிறப்பு வரலாறு கூறப்படுகிறது. இதன் மூலம் உயிர்க் கொலையின் பாவத்தன்மை விளக்கப்படுகிறது. மேலும் மாவினால் செய்த கோழியைப் பலியிட்டமை இத்தகைய இழிபிறப்புகளுக்கு காரணமாகவும் கூறப்படுகிறது. மேலும் அந்தணர் என்போர் உயர்ந்தோர் அல்லர் என்பதையும் அவர்கள் வழிநடத்திச் செல்லும் முறை தவறானது என்பதையும் உலகிற்கு எடுத்துக்காட்ட யசோதர காவியத்தின் ஆசிரியர் இப்பகுதியைப் படைத்தளித்துள்ளார். இதனைச் சமயப்போர் என்றும் கூறஇயலும். யசோதர காவியம் முழுமையும் கிடைக்கும் செய்தியானது **அறம் செய விரும்பு** என்பதும் **ஆறுவது சினம்** என்பதும் **கொல்லாமை நன்று** என்பதும் **ஒழுக்கம் கடைபிடி** என்பதுமாகும். இதனை,

**'ஆக்குவ தேதெனி லறத்தை யாக்குக**
**போக்குவ தேதெனில் வெகுளி போக்குக**
**நோக்குவ தேதெனில் ஞானம் நோக்குக**
**காக்குவ தேதெனில் விரதம் காக்கவே'  (யசோதர . 330)**

என்று ஆசிரியர் கூறுகின்றார். அறத்தை ஆக்க வேண்டும் ; வெகுளியைப் போக்க வேண்டும்; ஞானத்தை நோக்க வேண்டும்; விரதம் காக்க வேண்டும் என்கிறார். விரதம் என்பது ஒழுக்கத்தைக் குறித்து நின்றது.

**சுதத்த முனிவர்**

சுதத்த முனிவர் முதலாம் சருக்கத்திலும் ஐந்தாம் சருக்கத்திலும் இடம்பெறுகின்றார். அபயமதி – அபயருசி என்ற இரட்டையர் சுதத்த முனிவர் குழுவைச் சார்ந்தவர்கள். மாரிதத்தன், சுதத்த முனிவரிடம் அறம் கேட்டு முனிவராகின்றான். சுதத்த முனிவர் அருள் உள்ளம் கொண்ட அறமுரைக்கும் மாந்தர் ஆவார்.

**சுதத்த முனிவரின் அருள் உள்ளம்**

சுதத்த முனிவர் உபாசகர் ஐந்நூறு பேருடன் ஒதயநாட்டுச் சோலை ஒன்றில் வந்து தங்குகின்றார். ''அட்டமி பருவங்களில் தமது சக்திக்கு அனுகூலமாகத் தருமகதா சிரவணமும் பஞ்ச நமஸ்கார ரூபாதிகளோடு கூடிக் கிருஷியாதிகளை நிவர்த்தித்து உபவசித்தலும் ஏகபுத்தி பண்ணுதலுமாகிய இவற்றையுடையவர் உபாசகர்''[6] என்று அஷ்ட பார்த்தசாரம் குறிப்பிடுகிறது. அஃதாவது அட்டமி காலங்களில் தனது ஆற்றலுக்கேற்ப அற

ஒழுக்கங்களையும் ஐந்து துதிகளையும் கடைபிடித்து, தன் செயல்களில் ஏற்பட்ட குற்றங்களுக்கு கழுவாய் தேடி, உணவு உண்ணாது நோற்று தன் மனதை ஒருநிலைப்படுத்துபவர் உபாசகர் என்று கூறப்படுகிறது. சுதத்த முனிவர் அத்தகைய உபாசக குழுவிற்கு தலைமை தாங்கும் பேறுபெற்றமையே அவரது உயர்த்தகுதியைக் குறிப்பதாகும். இக்குழுவிலேயே அபயமதியும் அபயருசியும் துறவு கோலத்தில் இடம் பெறும் சிறுவர்சிறுமியாய் இருந்தனர். இவர்களின் குழந்தைத் தன்மையையும் முகவாட்டத்தையும் நோக்கிய சுதந்த முனிவர் அருள் உள்ளத்தினராய்,

**‘அம்முனி யவர்கள் தம்மை அருளிய மனத்த னாகி**

**வம்மினீர் பசியின் வாடி வருந்திய மெய்ய ரானீர்**

**எம்முடன் உண்டி மாற்றா தின்றுநீர் சரிதை போகி**

**நம்மிடை வருக என்ன நற்றவர்த் தொழுது சென்றார்.’ (யசோதர . 26)**

அவர்களைப் பிச்சையேற்று உணவு உண்ணுமாறும் உபவாசத்தில் தங்களோடு கலந்து கொள்ள வேண்டாமென்றும் பணிக்கின்றார். இஃது ஒன்றே சுதந்த முனிவரின் அருள் உள்ளத்திற்குச் சான்றாகும். அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை என்று கூறும் வள்ளுவம். சுதந்த முனிவர் அருள் உள்ளம் கொண்டமையின் அவ்வுலகையும் பெறுவோர் ஆயினார்.

**சுதத்த முனிவரின் பெருமைகள்**

சுதத்த முனிவர் கலிங்க நாட்டின் மன்னனாக இருந்து பின்னர் துறவு பூண்டவர். இவரை அவமதிக்க எண்ணிய யசோதமதி அரசனும் மனம் திருந்தி, வணங்கிய அடிகளைக் கொண்டவர். இவர் உயிர்களிடத்தில் அன்பு பூண்டவர் என்பதை ‘இதத்தினை யுயிர்க்கினி தளித்திரு மியற்கைச் சுதத்த முனி’ (செய்.263) என்று யசோதர காவியம் குறிப்பிடுகிறது. மேலும்,

**‘வானவரு மண்ணின்மிசை யாசர்களு மலைமேல்**

**தானவரும் வந்துதொழு தவவுருவு கொண்டான்**

**ஊமைன மின்றியுயிர் கட்டுறுதி யுன்னிக்**

**கானமலை நாடுகள்க லந்துதிரி கின்றான்’ (யசோதர . 277)**

என்றும் சுதத்த முனிவரின் பெருமை பேசப்படுகிறது. வானவரும் மன்னரசரும் போற்றத்தக்க புகழ் மிக்கவர். உயிர்க்கு உறுதியானவற்றை நினைப்பவர். அறமற்ற செயல்களை மனதாலும் சிந்திக்காதவர். காடு, மலை, நாடு என ஓரிடத்தும் நில்லாது சுற்றித் திரிபவர். ஓரிடத்தில் இருந்தால் அதன்மீது பற்று வந்துவிடும் என்பது சமணக் கொள்கையாகும். சமணத்தின் கொள்கைகளை முறைப்படி கடைபிடித்து மனம், வாக்கு,

காயங்களில் குற்றம் நிகழாவண்ணம் வாழ்ந்தவர். மேலும் அவதிஞானமும் பெற்றவர். அதன் பொருட்டே அசோகன், அமிர்தமதி முறையே மேலோகத்தில் இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிப்பதை விளக்குகின்றார்.

**சுதத்தமுனிவரின் அறவுரைகள்**

- ❖ நல்லறிவு தோன்றிய காலத்து அறியாமல் செய்த தீவினையின்று விலகி இருத்தல் வேண்டும்.
- ❖ தீவினைச் செயலின்று விலகாவிடின் தீவினை தொடரும்.
- ❖ முன்னர் செய்த தீவினைக்கு கழுவாய் தேடவேண்டும்.
- ❖ நற்செய்கைகளாலும், எளிய விரதங்களாலும் தீவினையின்று விலக இயலும்.
- ❖ அருள் நிறைந்த மனத்துடையவராய் இருத்தல் வேண்டும்.
- ❖ உலக உயிர்கள் அனைத்திற்கும் ஆதரவு தர வேண்டும்.
- ❖ கொலை, பொருள், களவு, காமம், பொய் இவற்றை நீக்க வேண்டும்.
- ❖ அறியாமல் பிறக்கும் துன்பங்களையும் அருகப் பெருமானை வணங்குவதால் நீக்க இயலும்.
- ❖ அருகன் அருளிய அறத்தைக் கடைபிடித்தால் இம்மையும் மறுமையும் இன்பமாக வாழமுடியும். அதன் காரணமாக வரும் துன்பமும் நீக்கப்படும்.
- ❖ அவரவர் ஆற்றலுக்குத் தக்கவாறு தவம் செய்ய வேண்டும்.
- ❖ உண்டியும் நீரும் குறைத்து ஆராதனை வழிபாடுகள் மிகுவிக்கவேண்டும்.
- ❖ இம்மையின் இன்ப துன்பங்களை விலக்க வேண்டும்.
- ❖ தவம் மேற்கொண்டோருக்கு மறுமையுலகம் இன்பமாக அமையும்.

மேற்குறிப்பிட்ட அறக்கருத்துக்கள் சுதத்த முனிகளால் (செய்.308, 309, 317) யசோமதிக்கு கூறப்பட்டவையாகும். இவ்வாறு சுதத்த முனிகள் அறமுரைக்கும் மாந்தராகக் காப்பியத்தில் படைக்கப்பட்டுள்ளனர்.

**அகம்பன முனிவர்**

யசோதர காவியம் நான்காம் சருக்கத்தில் அகம்பன முனிவர் எனும் அறமாந்தர் இடம் பெறுகின்றார். இவர் சண்ட கருமன் என்ற யசோதமதியின் அமைச்சருக்கு அறம் புகன்று அவனை மாற்றுகின்றார். இதன் காரணமாக அறங்கூறும் அறமாந்தர் ஆகின்றார்.

**நல்லொழுக்கத்தின் இயல்பு கூறல்**

சண்டகருமன், அகம்பன முனிவரை வணங்கி அறமுரைக்கும்படி வேண்டுகின்றான். முனிவரும் நன்ஞானம், நல்லறிவு, நற்காட்சி பற்றிக் கூறுகின்றார். மேலும் நல்லொழுக்கத்தைக் கடைபிடிக்க அணுவிரதங்களை மேற்கொள்ள வேண்டுமென்கின்றார். அணுவிரதங்களாவன,

**'பெருகிய கொலையும் பொய்யும் களவொடு பிறன் மனைக்கண்**

**தெரிவிலாச் செலவு சிந்தனை பொருள்வயிற் றிருகு பற்றும்**

**மருவிய மனத்து மீட்சி வதமிவை யைந்தோ டொன்றி**

**ஒருவின ஒருவுத லொழுக்க மென்றான்' (யசோதர . 242)**

என்பதாகும். கொலை, களவு, பொய், பிறன்மனை நயத்தல், பொருள் அவா ஆகிய ஐந்தினையும் நீக்குதலே அணுவிரதமாகும். இவற்றோடு புலால் உணவு, தேன், கள் போன்றவையும் நீக்கத்தக்கவை என்று குறிப்பிடுகின்றார். இவற்றைக் கடைபிடிப்பதே நல்லொழுக்கம் என்று கூறுகின்றார்.

**நல்லொழுக்கத்தின் பயன்கள்**

- கொல்லாமையாகிய அறம் இவ்வுலகத்தில் இறைதன்மையைத் தரும்.
- வாய்மையாகிய அறம் ஒவ்வொரு சொல்லுக்கும் நன்மதிப்பை உண்டு பண்ணும்.
- களவின்கண் செல்லா மனமுடைமை விலைமதிப்பில்லா மிக்க அருளுடைமையாற் பிறக்கும் மாண்பினை உண்டு பண்ணும்.
- பிறன் மனை நயவாமையாகிய காமமின்மை மனத்திட்பம் பொருந்திய பேராண்மையினைத் தரும்.
- பொருள் அவாவின்மையாகிய அறம் தெருண்ட மனத்தால் கொண்ட தெளிந்த உணர்ச்சியாகிய செல்வத்தைத் தரும்.
- புலால், தேன், கள் உண்ணாமையாகிய அறம் புகழ், வனப்பு, வெற்றி, மிகுபொருள், குடிச்சிறப்பு, இன்ப நுகர்ச்சி ஆகியவற்றைத் தரும்.

இவ்வாறு நல்லொழுக்கங்களைக் கடைபிடிப்பதால் உண்டாகும் பயனை அகம்பன முனிவர் காப்பியத்தில் கூறிச்செல்வதாகப் படைக்கப்பட்டுள்ளார்.

**உயர் அறம் – கொல்லாமை**

அகம்பன முனிவரின் அறக்கருத்துக்களைச் செவிமடுத்த சண்டகருமன் கொல்லாமை தவிர்ந்த மற்ற ஒழுக்கங்களைக் கடைபிடிப்பதாகக் கூறினான். அதற்குக்

காரணம், அவன் போர் செய்வது வீரனுக்குரிய கடமை என்பதனால் ஆகும். அப்போது அகம்பனர் கொல்லாமையே உயரிய அறம். அதைத் தவிர்த்து மற்றவைகளைக் கடைபிடிப்பது ஊமனும் செவிடனுமாகிய ஒருவன் இசையை உணர்வதை ஒப்பதாகும் என்று கூறுகின்றார்.

**'ஆருயிர் வருத்தங் கண்டா லருள்பெரி தொழுகு கண்ணால்**

**ஓருயிர் போல நெஞ்சத் துருகினைந் துய்ய நிற்றல்' (யசோதர . 247)**

வேண்டும். அதுவே கொல்லாமை விரதத்தின் உயிர்நாடி என்றார். 'வாடிய பயிரைக் கண்ட பொழுதெல்லாம் வாடினேன்' என்று கூறிய வள்ளலாரின் வாக்கிற்கேற்ப 'ஆருயிர் வருத்தங்கண்டு வருந்துதல் வேண்டும்' என்கிறார். நிலையில்லா உடம்பினைக் கொண்டு கொலைப்பாவம் செய்து வாழ்வோர் அரசராக இருந்தாலும் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேற மாட்டார். பிறவிதோறும் துன்பத்தை அடைவர். அதற்கு உதாரணம் யசோதரன் பிறவிதோறும் விலங்காய் பிறந்து உழன்றதாகும். உயிர்க்கொலைச் செய்யும் எண்ணத்தோடு மாக்கோழியைப் பலியிட்டதற்காகப் பல பிறவிகள் விலங்காய்ப் பிறந்து துன்பமுற்றான். சமண சமயத்தின் அணு விரத கொள்கைகளைப் பற்றியும் அவற்றில் உயர் அறமான கொல்லாமை பற்றியும் அகம்பனர் கூறுவதால் இவர் அறம் கூறும் மாந்தர் வகையில் அமைகின்றார்.

**அறவழிவாழ்ந்த மாந்தர்கள்**

யசோதர காவியத்தில் மாரிதத்தன், யசோதரன் ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளார்.

**மாரிதத்தன்**

ஒதய நாட்டு மன்னன் மாரிதத்தன் ஆவான். முதல் மற்றும் ஐந்தாம் சருக்கங்களில் இடம்பெறும் அறவழி வாழ்ந்த மாந்தர் ஆவார். சண்டமாரி என்ற தெய்வத்திற்கு நரபலியிட எண்ணியவன், அபயமதி-அபயருசி என்ற இரட்டையர்கள் மூலம் மனம் திருந்தி துறவு பூண்டவன்.

**கொல்லாமை**

சமணசமயத்தின் அடிப்படைக் கொள்கையே கொல்லாமை விரதம் ஆகும். இக்கொல்லாமையை வலியுறுத்தி யசோதர காவியம் படைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. மாரிதத்தன் என்ற மாந்தர் படைப்பு அதற்கு உறுதுணையாக அமைகிறது.

**‘அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்**

**பிறவினை எல்லாம் தரும்’ (குறள் . 321)**

என்று திருவள்ளுவர் கொல்லாமையே அறம் என்பதாகச் சுட்டுகின்றார். உயிர்க்கொலை எல்லாப் பாவங்களையும் கொண்டுசேர்க்கும் அறமற்ற செயல் என்றும் குறிப்பிடுகின்றார். மாரிதத்தன் நரபலி எனும் பெயரில் உயிர்க்கொலை எனும் அறமற்ற செயலைச் செய்யத் துணிந்தனன். சண்டமாரி எனும் தெய்வத்திற்கு மக்கள், பறவைகள் – விலங்குகளின் இரட்டைகளைப் பலியிட எண்ணியபோது, மக்களினின்று மன்னன் உயர்ந்து நிற்கவேண்டி, மாரிதத்தன் இரட்டை நரபலி தர எண்ணினான். இதனை,

**‘யானிவ் வாளினின் மக்களி ரட்டையை**

**ஈன மில்பலி யாக இயற்றினால்**

**ஏனை மானுயர் தாமிவ் விலங்கினில்**

**ஆன பூசனை யாற்றுதல் ஆறென’ (யசோதர . 21)**

என்று யசோதர காவியம் குறிப்பிடுகிறது. மேலும் நரபலிக்கு இலக்கானவர்களின் இலக்கணமாக உடம்பும் மனதும் தூய்மையானதாக இருக்க வேண்டும் என்றும் கூறப்படுகிறது. ஈடில்லாத இயல்பினரை நாடிக் கொணர்க என்று அரசன், அமைச்சனை ஏவினான். இஃது அரசனான மாரிதத்தன் மனதளவில் நரபலிக்கு ஆட்பட்டது, அறமற்ற செயலாகும். நரபலியாக கொணரப்பட்ட அபயமதி-அபயருசி ஆகியோர் மன்னனின் மனதை, தனது பிறப்புக்களை எடுத்தோதி மாற்றினர். இதன்காரணமாக மாரிதத்தன் அறமாந்தராகப் பரிணாமம் எய்தினான். இதனை,

**‘… … அருளுடை மனத்தனாகி**

**மன்னவன் தன்கை வாளும் மனத்திடை மறனும் மாற்றி’ (யசோதர.67)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

**துறவறம்**

சமணசமயம், துறவறத்தை ‘யதிதர்மம்’ என்று கூறுகிறது. இத்துறவறம் நிலைக்க மாவிரதங்கள் ஐந்தும், சமிதிகள் ஐந்தும், ஆவஸ்யகம் ஆறும், ஒழுக்கங்கள் ஏழும் கடைபிடிக்கப்பட வேண்டும். மாரிதத்தன் மனம் தெருண்டு துறவறம் மேற்கொண்டு சமணசமயக் கொள்கையின்படி முனிவனாகின்றார். மாரிதத்தன், கொலைப் பாவத்தின்றி காப்பாற்றி நரகத்தில் உழல்வதைத் தடுத்தமைக்காக அபயமதி – அபயருசிக்கு நன்றி தெரிவித்ததோடு, மலர்வனம் சென்று சுதத்தமுனிகளை வணங்கி துறவு மேற்கொள்கிறார். தனது அரசையும் சுற்றத்தையும் மறந்து, மணிமுடியை மகன் புட்பதந்தனுக்கு அளித்துவிட்டு நன் முனியாகின்றான் என்பதை,

**'இன்சொன் மாதரு மிளங்கிளைச் சுற்றமும் எரித்திர ளெனவஞ்சிப்**
**பொன்செய் மாமுடிப் புதல்வருட் புட்பதந் தற்கிது பொறையென்றே**
**மின்செய் தாரவன் வெறுத்தன ரைசியல் விடுத்தவ ருடன்போகி**
**முன்சொன் மாமலர்ப் பொழிலினுண் முனிவரற் றெழுதுநன் முனியானார்.'**
**(யசோதர.323)**

என்று யசோதர காவியம் கூறுகிறது. நன்முனிவன் என்பது சமணசமயம் குறிப்பிடும் இருபத்து மூன்று கொள்கைகளையும் கடைபிடித்தல் ஆகும். "அகிம்சை, வாய்மை, கள்ளாமை, துறவு, அவாவறுத்தல் ஆகிய மாவிரதங்கள் ஐந்தும், இரியை, பாஷை, ஏஷணை, ஆதான நிஷேபனை, உத்சர்க்கம் ஆகிய சமிதிகள் ஐந்தும் ; சாமயிகம், துதி, வணக்கம், பிரதிகிர்மணம், கழுவாய், விசர்க்கம் ஆகிய ஆவஸ்யகம் ஆறும்; லோசம், திகம்பரம், நீராடாமை, தரையிற்படுத்தல், பல்தேய்க்காமை, நின்று உண்ணல், ஏக புக்தம் ஆகிய ஒழுக்கங்கள் ஏழும்"[7] மாரிதத்தனால் கடைபிடிக்கப்பட்டு நன்முனிவனானான். நன்முனிவனாயிருந்து இறந்தமையின் தேவருலகை அடைந்து தேவபோகத்தைப் பெற்றான் என்று மாரிதத்தன் என்னும் மாந்தர் படைப்பு யசோதர காவியத்தில் இடம் பெறுகிறது. நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் எனும் மும்மணிகளைத் திறம்படக் கடைபிடித்தமையின் வானவர் உலகை மாரிதத்தன் அடைந்ததாகக் கூறுவர். சமணம் துறவறத்தை உயர்வாகப் போற்றும் இயல்புடையது. எனவே மாரிதத்தன் துறவு மேற்கொண்டதையும் உயர்த்திப்பேசுகின்றது.

**யசோதரன்**

யசோதர காவியத்தின் கதைத் தலைவனான யசோதரன் அறத்தின் வழி வாழும் மாந்தராகக் கருதத்தக்கவர். செல்வச் செருக்காலும் கொலை எண்ணத்தாலும் மனந்திரிந்தாலும் அவற்றிலிருந்து விடுபட்டு காமத்தையும், அரசபோகத்தையும் வெறுத்து உயிர்ப்பலியிட எண்ணிய தீமைக்காக பல விலங்குப் பிறவிகள் எடுத்து இறுதியில் அறம் கேட்டு தேவகதியை யசோதரன் அடைந்தான். திரு. வி. க அவர்கள்,

**"சைனம் எதுவெனச் சாற்றுவன் இங்கே**
**ஐம்புலன் வெல்லும் செம்மை சைனம்**
**ஒழுக்கம் காக்கும் விழுப்பம் சைனம்**
**கொலைகள் வொழிக்கும் நிலைபெறல் சைனம்**
**கள்பொய் காமம் தள்ளல் சைனம்**
**ஊனுண் ணாத மேனிலை சைனம்**
**வெறியா வேசம் முறியிடம் சைனம்**

**சாந்த அமுதம் மாந்தல் சைனம்**

**நல்லெண்ணம் நல்மொழி நற்பணி சைனம்**

**தேவை அளவை மேவல் சைனம்**

**அகிம்சா தருமம் அனைத்தும் சைனம்"** [8]

என்று சமணம் பற்றிக் கூறுகின்றார். இக்கொள்கைகளைப் பரப்பும் விதமாகவே யசோதரன் எனும் மாந்தர் படைப்பு இடம்பெறுகிறது.

**செல்வச் செருக்கு**

யசோதரன் அரசனாக இருந்த காலத்து அறத்திறம் நெகிழ்ந்திருந்தான். செல்வச் செருக்கின் காரணமாக அவா, வெகுளி போன்றவற்றால் உடல், மனம், சொல் மூன்றும் அறநெறின்று விலகியிருந்தது. அண்டை நாட்டின் மீது போர்த்தொடுத்து வஞ்சனைத் திட்டங்களாலும் அவர்கள் செல்வத்தைக் கொள்ளையிட்டான். இஃதும் செல்வச் செருக்கின் அடிபிறந்த செயலாகும். இசையை விரும்பி ஆடல்மகளிர் பலருடனும் கூடி இன்பம் நுகர்ந்தமைக்கும் செல்வசெருக்கே காரணமாகும்.

**கொலை எண்ணம்**

யசோதரனின் மனைவியாகிய அமிர்தமதி தீயொழுக்கத்தில் ஒழுகியமையை அறிந்த பின் அவளையும் அவளது களவுக்காதலனான அட்டபங்கனையும் கொலை செய்யும் எண்ணம் அரசனுக்கு ஏற்பட்டது. ஆனால் அரசனாகிய யசோதரன் அவ்வெண்ணத்தை ஒழித்து,

**'மாதரா ரெனைய ரேனும் வதையினுக் குரிய ல்லார்**

**பேதைதா னிவனும் பெண்ணி னனையனே பிறிது மொன்றுன்**

**டேதிலார் மன்னர் சென்னி யிடுதலுக்குரிய வாளின்**

**தீதுசெய் சிறுபுன் சாதி சிதைத்தலுந் திறமன் றென்றான்' (யசோதர . 124)**

என்று எண்ணி தெளிந்துணர்ந்தான்.

**காயத்தைவெறுத்தல்**

அமிர்தமதியின் நடத்தையால் பெண்ணின்பத்தை யசோதரன் வெறுக்கின்றான். "இந்த இழிவான காமவேட்கையானது, நெஞ்சில் நிகமும் எண்ணங்களை நல்லவையாகாவாறு செய்யும், குடிப்பிறப்பென்னும் குன்றம் இடிந்து துகளாமாறு செய்யும், மண்ணுலகத்தே நிற்கும் புகழைக் கெடுத்து, அது நின்றவிடத்தே வந்தடையும், பழியை மிகுவிக்கும், மானமாகிய திண்மை நிலையைத் தகர்த்தெறியும், ஆண்மையினையும், செல்வத்தினையும் அழித்துவிடும். மனத்தையும் கண் முதலிய

பொறிகளையும் நிலைகலங்கச் செய்யும்”[9] என்று யசோதரன் எண்ணி காமத்தைத் துறக்கத்துணிந்தான். “Never was owl more blind than a lover”[10] என்று காமத்தைப் பற்றிக் கூறுவர்.

**அரசபோகத்தை வெறுத்தல்**

நிலமடந்தையும் தன்னைச் சேர்ந்தவர்க்கு மட்டுமே உரிமையானவள் அல்லள். புண்ணியமுடையவரிடம் இருந்து நீங்கவும் செய்யும். எனவே அரசபோகமும் நிலையில்லாதது என்பதை உணர்ந்து யசோதரன் அரசபோகத்தையும் வெறுத்தான்.

**உயிர்ப்பலி**

யசோதரனின் தாயாகிய சந்திரமதி இறைவிக்கு உயிர்ப்பலியிடக் கூறினாள். ஆனால் யசோதரன் இம்மைக்கு மட்டுமின்றி மறுமைக்கும் அது பழிதரக்கூடிய செயல் என்று கூறி மறுத்தனன். எனவே உயிர்க்கோழிக்கு பதிலாக அரிசிமாவால் செய்யப்பட்ட கோழியைப் பழியிட்டனர். அம்மாக்கோழி தலையைக் கொய்தபின் உயிர்க்கோழி போன்றே துடிதுடித்து வீழ்ந்தது. இஃது உயிர்ப்பலியை மனதால் எண்ணுவதே பாவம் என்பதைச் சுட்டுகிறது. இப்பாவத்திற்காகவே சந்திரமதியும் யசோதரனும் பல விலங்குப் பிறவிகளை எடுத்தனர். இப்பிறவிகள் பற்றி அபயருசி, அபயமதி கூறுவர். யசோதர காவியம் மறுபிறவிக்கு, கொள்கைகளை வலியுறுத்தும் காப்பியமாகப் படைக்கப் பட்டுள்ளது. தேவகதி, மனிதகதி, விலங்குகதி, நரககதி பற்றி விரிவாகப் பேசுகிறது. உயிர்ப்பலியிடுதலைக் கடுமையாக எதிர்க்கின்றது. மனதால் குற்றமின்மை உயரிய அறமாகக் கருதப்படுகிறது. மாவினால் உருவம் செய்து பலியிடும் முறையை அறிமுகப்படுத்தியது இக்காப்பியம் ஆகும். இதன் தொடர்ச்சியாக இன்றைய நேர்த்திக்கடன்களில் மாவிளக்கு போடுதல் எனும் சடங்குமுறை உருவாக்கம் பெற்றது. மக்களின் மனங்களில் மறுபிறவி பற்றிப் பயத்தை ஏற்படுத்தி அதன் மூலம் அறத்தைப் பரப்புவது இக்காப்பியத்தின் பின்புலமாக அமைகிறது. சமணம் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தை யசோதர காவியம் எடுத்துக்காட்டுவதால், இதனை செல்வாக்கு நிலை எனக் குறிப்பிட இயலும்.

## உதயண குமார காவியம்

உதயணகுமாரகாவியம் ஐஞ்சிறுகாப்பியங்களில் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது. இதன் ஆசிரியர் கந்தியார் என்னும் சமணப்பெண் துறவி என்றும், இந்நூல் கி.பி.15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும் கருதப்படுகிறது. உஞ்சைக் காண்டம், இலாவண காண்டம், மகத காண்டம், வத்தவகாண்டம், நரவாண காண்டம், துறவுக் காண்டம் என

ஆறு காண்டங்களைக் கொண்டது. இந்நூல் சமண சமயம் சார்ந்ததாகும். ‘‘பெயர்தான் காவியமே தவிர நூலில் காவியச்சுவை எதுவும் இல்லை என்பது அறிஞர் பலரின் பரவலான கருத்து.’’ [10]

**அறமாந்தர்கள்**

இக்காப்பியத்தில் அறமுரைக்கும் மாந்தர்கள் தனிப்பட்டு அமையவில்லை. எனவே அறவழி வாழ்ந்த மாந்தர்கள் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளன. அறவழி வாழ்ந்த மாந்தர்களாக உதயணன், சதானிகன், பிரச்சோத மன்னன், நரவாகனன், யூகி ஆகியோர் இடம் பெறுகின்றனர்.

**கதைச்சுருக்கம்**

வத்தவ நாட்டு அரசன் சதானிகன் ஆவான். அவன் மனைவி மிருகாபதியாவாள். கருப்பவதியான மிருகாபதி, சிவப்புப் பட்டாடையைப் போர்த்திக் கொண்டு மாடத்தில் உறங்கியபோது பேரண்டப்புள் ஒன்று, அவளை இறைச்சி என்றெண்ணித் தூக்கிச் சென்றது. பின்னர் அவள் உயிருடன் இருப்பதையறிந்து காட்டில் விட்டுவிட்டுப் பறந்தது. அக்காட்டில் உதயணன் பிறந்தான். மிருகாபதியின் தந்தையான சேடக முனிவர் உதயணனையும் மகளையும் போற்றிப் பாதுகாத்தார். யூகி என்ற அந்தணச் சிறுவனும் உதயணனும் பல கலைகள் கற்று ஒன்றாக வளர்ந்தனர்.

உதயணன், கோடாவதி என்ற யாழையும், தெய்வத்தன்மை பொருந்திய யானை ஒன்றையும் பெற்றான். அத்தெய்வ யானை மூன்று நிபந்தனைகளோடு உதயணனிடம் வந்தது. உதயணனின் மாமாவான விக்கிரமன் குழந்தையின்மையின் காரணமாக தன் அரசாட்சியை உதயணனுக்கு வழங்கினான். சதானிகனும் தன்னாட்சியைத் தாயமுறைப்படி உதயணனுக்கு வழங்கிவிட்டு துறவு பூண்டான். தெய்வயானையின் நிபந்தனை மறந்து உதயணன், யானைக்கு உணவு கொடுக்காது தாம் உண்டமையின் தெய்வயானை மறைந்தது. அதன் நினைவால் இருந்தவனை எதிரி நாட்டு மன்னனான பிரச்சோதனன் பொய்யானையை உருவாக்கி, அதன் மூலம் உதயணனைச் சிறைசெய்தான். யூகி என்ற நல்லமைச்சனின் உதவியால், உதயணன் சிறைவீடு பெற்றதோடு மட்டுமின்றி பிரச்சோதனன் மகள் வாசவத்தையைக் கவர்ந்து வந்து திருமணமும் புரிந்தனன்.

வாசவதத்தையோடு கூடிய இன்பத்தில் அரச கடமைகளை உதயணன் மறந்தான். இதனால் யூகி, வாசவதத்தை இறந்ததாக நாடகமாடி அவளை மறைத்து வைத்தான். அதன் பின்னர் பதுமாவதியை மணந்து அரசுரிமையை மீண்டும் அடைந்தான். அதன்

பின் வாசவதத்தையை யூகி வெளிப்படுத்தினான். பின்னர் உதயணன், மானனீகை, விரிசிகை ஆகிய மகளிரையும் மணந்தான். வாசவதத்தைக்கு நரவாகனன் என்ற மகன் பிறந்தான். அவன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி மதனமஞ்சிகை என்ற கணிகையின் மகளை மணந்தான். மதனமஞ்சிகையை மானசவேகன் என்ற வித்யாதரன் கவர்ந்து சென்றான். மதனமஞ்சிகை கற்பில் சிறந்தவளாக இருந்தாள். நரவாகனன் மதனமஞ்சிகையை மீட்டதோடு வேகவதி, அநங்கவிலாசனை ஆகியோரையும் மணந்து வித்தியாதர உலகையும் ஆண்டு வந்தான். உதயணன் துறவு பூண எண்ணம் கொண்டு நரவாகனிடம் ஆட்சியை ஒப்படைக்க எண்ணினான். ஆனால் நரவாகனன் தம்தம்பியாகிய கோமுகனுக்கு முடிசூட்டி விட்டு தந்தையோடு துறவியானான். தருமவீரர் என்ற முனிவரிடம் அறம் கேட்டு உதயணனும் அவனது மனைவியர் மற்றும் அமைச்சர்கள் யாவரும் துறவு பூண்டனர். உயரிய தவநிலை கொண்டு தேவருலகம் அடைந்தனர்.

**உதயணன்**

கதைத்தலைவனான உதயணன் உயரிய மாண்புடையவன் ஈகைத்திறன், நன்றிமறாவாமை போன்ற நல்லறங்கள் புரிந்தவன். ஒருசில குறைகளைத் தவிர்த்து நோக்க உதயணன் அறவழி வாழ்ந்த மாந்தர் வகையைச் சார்ந்தவனாகிறான்.

**ஈதல் அறம்**

உதயணனை பிரச்சோத மன்னனின் காவலாளிகள் கைது செய்து கைபிணித்து அழைத்து வருகையில் ஆசிரியரின் இரங்கல் மொழிகள் இடம்பெறுகின்றன. ஆங்கு ‘ஈதல் மேவி இரவலர்க்கு ஆற்றுங்கை’ (உதய.உஞ்சை: 59) என்று உதயணனின் ஈகையுள்ளம் புலப்படுத்தபடுகிறது. மேலும் உதயணன் அரசை மீண்டும் அடைந்தபின் ‘ஏற்றநற் சனங்கட்கு எல்லாம் இனிப் பொருள் உவந்து வீசிக் கொற்றொழில் நடத்தினன்’ (உதய . வத்தவ : 187) என்று கூறப்பட்டிருப்பதும் உதயணனின் ஈகையறத்தை எடுத்துக் காட்டுவதாய் அமைகிறது.

**செய்நன்றி மறவாமை**

உதயணன், பிரச்சோத மன்னனின் சிறையினின்று தப்பி வருவதற்கு பத்திராபதி எனும் பெண்யானை உதவியது.

**‘எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**
**செய்நன்றி கொன்ற மகற்கு’ (குறள் . 110)**

என்று வள்ளுவர் கூறிச்சென்ற வழியில் உதயணனும் ஆபத்து காலத்தில் உதவிய யானைக்குக்கோயில் எடுப்பித்துச் சிலையும் சமைத்தனன். இதனை,

**'துதிக்கைமா வீழ்ந்த கானம் தோன்றலும் மாடம் பண்ணிப்**

**பதியினும் அமைத்துப் பாங்கில் படிமமும் அமைத்தான் அன்றே'(உதயண.வத்தவ:188)**

என்ற அடிகள் விளக்குகின்றன. உதயணன் அரசனாய் இருந்த போதும் கடமையை மறத்தல், ஆராய்ந்து அறியாமை ஆகிய குறைகள் நிறைந்தனாக ஆசிரியர் படைத்தள்ளார். உதயணன் தெய்வ யானைக்கு உணவிடாது தான் முதலில் உண்டதால் தெய்வயானையை இழந்தான். இதன் மூலம் கடமையை மறத்தல் எனும் குற்றத்தைச் செய்தவனாகின்றான். மேலும் வாசவதத்தையின் அழகில் மயங்கி காமத்தில் மூழ்கி, சீவகனின் தந்தை சச்சந்தன் நாட்டை இழந்தது போல உதயணனும் கடமையை மறந்தான். பொய்யானையை மெய்யானை என்று கருதி அருகில் சென்றமையாலேயே உதயணன் சிறைபட நேர்ந்தது. இது ஆராய்ந்து அறியாமை எனும் குற்றத்தின்பாற்படும். ஈதல் மற்றும் செய்நன்றி மறவாமை ஆகியபொது அறங்களின் அடிப்படியில் உதயணன் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றான்.

**சதானிகன்**

சதானிகன் வத்தவநாட்டு அரசன் ஆவார். இவர் மிருகாபதி என்னும் நங்கை நல்லாளின் கணவனும், கதைத்தலைவனாகிய உதயணனின் தந்தையுமாவார். உஞ்சைக் காண்டம், நரவாகன காண்டம் ஆகியவற்றில் இடம்பெறும் இவர் அறவழி வாழ்ந்த மாந்தர் வகையைச் சார்ந்தவர். மிருகாபதியை அண்டப்புள் ஒன்று தூக்கிச் சென்று காட்டில் விட்டுவிட்டது. அக்காட்டில் உதயணன் பிறந்தான். மிருகாபதியின் தந்தையான சேடகமுனிவரிடம் குடிலில் வளர்ந்த உதயணனைக் கண்டறிந்து சதானிகன், அவனுக்கு மகுடம் சூட்டினார். பின்னர் துறவு மேற்கொண்டார்.

**ஞானம் பெறல்**

நரவாகன காண்டத்தில் வானத்திலிருந்து விழுந்த நரவாகனனைக் காப்பாற்றுபவராகவும் இடம்பெறுகின்றார். இவர் துறவால் அவதி ஞானத்தைப் பெறுவது சிறப்பாகும். அவதிஞானம் என்பது முக்காலத்தையும் அறியும் அறிவாகும். இதனை,

**போதி தன்வலிப் போத வுணர்ந்துதன்**
**காத லிற்சென்று காளைதன் னாமமும்**
**ஏத மில்தந்தை யெய்திய நாமமும்**
**பேதச் செப்பலும் போந்து பணிந்தான். (உதயண . நரவாகன : 28)**

என்று கூறப்படுகிறது. மானசவேகன் என்ற வித்தியாதரன் தன் தங்கையான வேகவதியை மயக்கியமைக்காக, நரவாகனை வானத்திலிருந்து கீழே தள்ளிவிட்டான். கீழே விழுந்த நரவாகனைச் சதானிகன் கண்டு, அவன் உதயணனின் மகன் என்பதையும் தன் பேரன் என்பதையும் அவதிஞானத்தால் உணர்ந்தார். நரவாகனனைக் காத்தவர் சதானிகன் ஆவார். அவதிஞானம் எல்லோருக்கும் வாய்க்காது. உயர்ந்த தவநெறி மேற்கொண்டு ஐம்புலனொழுக்கத்தோடு இருப்பவர்களுக்கு சமணசமயம் அவதிஞானத்தை அளிக்கின்றது. சதானிகனும் அத்தகைய உயரிய அறமாந்தர் ஆவார்.

**கொடைத்திறன்**

சதானிகன் கொடைத்திறம் மிக்கவராகவும் படைக்கப்பட்டுள்ளார். அரசனாக இருந்த காலத்து பல்பொருளையும் மக்களுக்கு கொடையாக வழங்கினார். ‘வானுமிழ் வாரியன்ன வண்கையன்‘ (உதய.உஞ்சை : 6) என்று சதானிகனின் கொடைத்தன்மை மழைக்கு நிகராகப் போற்றப்படுகிறது.

**‘பாரி பாரி என்று பலரேத்தி**

**ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்**

**… … … …**

**மாரியும் உண்டீங்கு உலகு புரபதுவே’ (புறம்.170)**

என்ற புறப்பாடலைப் போன்று சதானிகனின் கொடைத்தன்மையும் புகழப்படுகிறது. காப்பியங்கள் அனைத்துமே அரசனை வள்ளலாகவே படைத்துக் காட்டுகின்றன. சதானிகனும் ஞானம் உடையவராய், வள்ளல் தன்மை மிக்கவராய்ப் படைக்கப்பட்டுள்ளார்.

**பிரச்சோதன மன்னன்**

பிரச்சோதனன் அவந்தி நாட்டுப் பேரரசன் ஆவான். அவன் உஞ்சைமா நகரத்தில் இருந்து ஆட்சி செய்து வந்தான். இவனுடைய ஆட்சிக்கு கட்டுப்பட்டு இருந்தது உதயணனின் வத்தவநாடு ஆகும். இவரது ஆட்சியில் உதயணன் திறை செலுத்தாமையின், பொய்யானை ஒன்றை உருவாக்கி அதன் மூலம் உதயணனைச் சிறைப்படுத்தினான். உதயணன் சிறைவீடு பெற்றதோடு பிரச்சோதனன் மகளான வாசவதத்தையை மணந்து அவனுக்கு மருமகனானான். உதயணனை சிறைப்படுத்தியமைக்காக வருந்தும் இயல்புடையவராகப் படைக்கப்பட்டுள்ளார். இவரும் அற வழி வாழ்ந்த மாந்தர் வகையில் அடங்குவார்.

**பழிக்கு நாணுதல்**

இஃது சமணம் கூறும் கழுவாய் எனும் அறத்தின் பாற்படும். உதயணனை தீமுறையில் சிறைப்பிடித்ததற்காக பிரச்சோதனன் பலமுறை வருந்தினார். புகழெனில் உயிரையும் கொடுப்பவர்களும் பழியெனில் இவ்வுலகையே கொடுப்பினும் கொள்ளாதவர்களும் சிறந்த அறமாந்தர் ஆவர். பிரச்சோதனர் பழிதரக் கூடிய செயலைச் செய்தமையின் அறநிலையிலிருந்து வழுவியவர் ஆவர். எனினும் தன்பழிக்காக நாணுபவர், தன் குற்றத்தை உணர்பவர் அறமாந்தர் எனும் நிலையில் வைக்கத்தக்கவர் ஆவார். பிரச்சோதனன் நாட்டில் யூகி, யானைக்கு மதம் பிடிக்கச் செய்ய, அவ்யானையை அடக்க உதயணனை ஏவும்படி அமைச்சர்கள் உரைக்க,

**'போரினி னிற்க லாற்றாம் பொய்யினிற் றந்த மைந்தன்**
**சீரொடு சிறப்பும் வெளவிச் சிறையினில் வைத்த தன்றிப்**
**பேரிடிக் கரிமுன் விட்டாற் பெரும்பழி யாகு மென்று,**
**தாருடை வேந்தன் சொல்லத் தரத்தினா லமைச்சர் சொல்வார்'**

**(உதயண. உஞ்சை : 89)**

என்று பிரச்சோதனன் மறுத்துரைக்கின்றார். உதயணனோடு நேரில் சண்டையிடாது வஞ்சித்து சிறைபிடித்து, அவனது சீரையும் சிறப்பையும் அழித்து விட்ட பழிக்காக நாணுகின்றார். எனவே யானையை அடக்க உதயணனை அழைக்க மறுக்கின்றார். வாசவதத்தைக்கு உதயணன் கற்றுக் கொடுத்த யாழ் வித்தையை அரங்கேற்றுமிடத்தும், 'ஏசவன் சிறைசெய் குற்றம் எண்ணுறேல் பெருக்க வென்று' (உஞ்சை.101) பிரச்சோதனன் தன்பிழைக்காக உதயணனிடம் மன்னிப்பு வேண்டுகிறார். மேலும் உதயணனுக்கு பிரச்சோதனன் வரைந்த ஓலையிலும் மன்னிப்பு வேண்டுகிறார். அஃது,

**'கலந்தவை காண வந்த காவலர் நின்னைப் பற்றிச்**
**சிலந்திநூல் தன்னால் ஆர்த்த சிங்கம்போல் ஆர்த்துக்கொண்டு**
**நலம் திகழ் தேரின் ஏற்றி நன்குஉஞ் சையினி தன்னில்**
**பெலந்திரி சிறையில் வைத்த பிழையது பொறுக்க என்றும்'**

கூறப்பட்டுள்ளது. இதன் பொருளாவது "எம் அரசவையில் யாம் கலந்து ஆய்ந்தபடியே, அந்த யானையின் பின்னால் என் காவலர் வந்தனர். சிலந்தி நூலால் ஒரு சிங்கத்தைக் கட்டுவது போன்று அக்காவலர்கள் உன்னைக் கட்டி, அழகான தேரில் ஏற்றி, உஞ்சை மாநகருக்கு நலமாகக் கொணர்ந்து வலிமை குன்றுதற்குக் காரணமான சிறையில் வைத்து விட்டனர். யான் செய்த பிழையை நீ பொறுத்தருள வேண்டும் என்பதாகும்."[12] இவ்வாறு பிரச்சோதனன் பழிக்கு நாணும் அறவழி வாழ்ந்த மாந்தராகப் படைக்கப்பட்டுள்ளார்.

**நரவாகனன்**

உதயணனுக்கும் வாசதத்தைக்கும் பிறந்த மகன் நரவாகனன் ஆவான். இம்மாந்தர் பற்றி நரவாகன காண்டத்தில் செய்திகள் உள்ளன. மதனமஞ்சிகை எனும் கணிகை மகளை மணந்தவன். மேலும் வேகவதி, அநங்கவிலாசனை ஆகிய வித்தியாதரப் பெண்களையும் மணந்தவன். வித்தியாதர உலகையாளும் பேறு பெற்றவன். இறுதியில்தன் தந்தையோடு துறவு பூண்டவன் ஆவான். இவனது செயல்களால் அறவழிவாழ்ந்த மாந்தர் என கூறத் தக்கவன் ஆகின்றான்.

**பரத்தையர் குலஒழிப்பு**

உதயணகுமார காவியம் பரத்தமையைக் கடிகிறது. பரத்தையர் குல பெண்களையும் நன்மனம் உள்ளவராகப் படைத்து அவர்களுக்கும் அரசவாழ்க்கையை அளிக்கிறது. நரவாகனன் மதனமஞ்சிகை என்ற கணிகை ஒருத்தியின் மகளை மணந்து கொள்கிறான். இதன் மூலம் பரத்தமை சமுதாயம் (செய் . 256) ஒழிக்கப்படுவதோடு பெண்மையும் உயர்த்தப்படுகிறது.

**துறவுநிலை**

நரவாகனன் விட்டுக் கொடுக்கும் பண்பு உடையவனாகவும் துறவு பூணுபவனாகவும் படைக்கப்பட்டுள்ளான். உதயணன் அரசுரிமை, நரவாகனனைச் சாரும். ஆனால் நரவாகனன் தனது அரசுரிமையைத் தன்தம்பியும், உதயணன் பதுமாவதியின் மகனுமாகிய கோமகனுக்குத் தந்தான். பின்னர் துறவு பூண்டான் என்பதனை,

**'தவனிதை யாளநான் தாங்குதற்குப் போவனே**

**உவமமிலா ராச்சியம் உற்றதெதற்கு என்றனன்' (உதயண . துறவு : 53)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இவ்வுலகமின்றி வித்தியாதர உலகும் ஆண்ட அரச போகத்தை இளமையிலேயே உதறித் தள்ளி துறவுபூண்டது நரவாகனனின் அறஉள்ளத்தைக் காட்டுகிறது. எனவே நரவாகனன் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றான்.

**யூகி**

யூகி உதயணனின் தோழன் ஆவார். சேடக முனிவரின் குடிலில் உதயணனோடு வளர்ந்த அந்தணன் ஆவார். உதயணனின் அமைச்சர்களில் தலையாயவர். வாசவதத்தையை மணமுடிக்க உதவியவர். வாசவதத்தையை மறைத்து வைத்து

உதயணன் மீண்டும் ஆட்சியைப் பெற உதவியவர். இறுதியில் உதயணனோடு துறவு பூண்டு அறமாந்தராய் விளங்கியவர். உஞ்சைக்காண்டம், மகதகாண்டம், துறவுக்காண்டம் ஆகியவற்றில் யூகி இடம் பெறுகின்றார்.

**அமைச்சு அறம்**

திருவள்ளுவர், அமைச்சருக்கு உரிய அறங்கள் பலவற்றைச் சுட்டுகின்றார். ஒருகாரியத்தை முடிப்பதற்கு வேண்டிய சாதனங்களையும் பருவ காலத்தையும் செயல் நுணுக்கங்களையும் செயல் முறைகளையும் நன்றாக ஆராய்ந்தறிந்து சொல்லக்கூடியவர்களே மந்திரிகள் என்றும்,

**'அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான் எஞ்ஞான்றும்**

**திறனறிந்தான் தேர்ச்சித் துணை' (குறள் : 635)**

என்றும் அமைச்சு அறம் பற்றி குறள் கூறுகிறது. அத்தகைய அமைச்சு அறங்கள் நிறைந்தவரே யூகி ஆவார். பிரச்சோதனன் என்ற எதிரிநாட்டு மன்னனால் உதயணன், தீமுறையில் சிறை செய்யப்பட்டபோது, உதயண மன்னனை விடுவிக்க சூள் கூறி, முயன்று வெற்றிபெற்றது யூகியின் அமைச்சறத்தைப் புலப்படுத்துகிறது.

**'தேறி னனை முந்திருந்து தீயர் கள்ள யானையை**

**மாறு தரக் காட்டியெம் மன்ன னைப்பி டித்தனர்**

**வீறு தர வந்நகரை வெங்க யத்த ழித்துப்பின்**

**கூறு மன்ம களுடன் கொற்ற வனை மீட்குவம்' (உதயண.உஞ்சை : 62)**

என்ற செய்யுளடிகள் 'பொய்யானையைக் காட்டி அரசனைக் கைக்கொண்டவரை மெய்யானையைக் கொண்டு தோற்கடித்து, அவனது மகள் வாசவதத்தையையும் கவர்ந்து வருவோம்' என்று யூகி சூளுரைத்ததைக் குறிக்கிறது. அதன்படியே பிரச்சோதன மன்னனின் யானைக்கு மதமேறும்படி செய்தும், அம்மன்னனின் நகரைத் தீக்கிரையாக்கியும் அரசனைக் காத்தான். அரசரைக் காத்தல் அமைச்சரின் கடமையாகும்.

**நாட்டைக் காத்தல்**

அரசன் வேற்று நாட்டில் கைதியாக இருக்கும்போது அமைச்சர் அந்நாட்டைக் காத்தல் வேண்டும். இதனை,

**' வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ**

**டைந்துடன் மாண்ட தமைச்சு' (குறள் : 632)**

என்ற குறள்வழி வள்ளுவர் குறிப்பிடுகின்றார். குடிக்காத்தல் என்பது குடிகள் அடங்கிய நாட்டிற்கு ஆகிவந்தது. எனவே குடிகாத்தல் என்பது நாடுகாத்தலைக் குறித்தது. யூகி,

உதயணன் இல்லா நாட்டைக் காக்க அமைச்சர்களையும் இளவரசர்களையும் நாட்டுக்கு காவலாக நியமிக்கின்றார்.

**‘உருமண் ணுவா வினுட னிடய கன்ச யந்தியும்**

**திருநி றைந்த புட்பகமுஞ் சேர்ந்தி னிதி ருக்கவென்**

**பெரும கன்க ணிகை மைந்தர் பிங்க லக டகரை**

**அரசு நாட்டி யாள்கவென்றே யன்பு டன்கொடுத்தனன் ’ (உதயண.உஞ்சை : 64)**

என்பதில் உருமண்ணுவா, இடபகன் ஆகிய அமைச்சர்களுக்கு சயந்தி, புட்பகம் என்ற பகுதிகளையும், பிங்கலர், கடகர் ஆகிய இளவரசர்களுக்கும் நாட்டின் பகுதிகளையும் பிரித்தளித்து, உதயணன் வரும் வரை நாட்டைப் பாதுகாக்கும் பொறுப்பினை யூகி இவர்களுக்கு அளித்தார். உருமண்ணுவா என்ற மற்றொரு அமைச்சர் யூகியின் பெருமையை ‘உற்றது கொண்டு மேல்வந்துறும் பொருளை அறிந்து ஆவணம் செய்வோன்’ (செய் : 161) என்று கூறுகின்றார். இத்தகைய பெருமைமிக்க யூகி அறவழி வாழ்ந்த மாந்தர் எனக் கூறத்தக்கோர் ஆவார்.

இக்காப்பியம் வடமொழியினின்று மொழிப்பெயர்க்கப்பட்டாலும் உதயணன் ஒரு தமிழன் எனப்பேராசிரியர் மதிவாணன் அவர்கள் கருதுகின்றார். ஏனெனில் அவன் பைசாச பிராகிருதம் என்ற மொழியைப் பேசினான். இஃது ஆரியப்படுத்தப்பட்ட தமிழேயாம். அவன் கி.மு.500 இல் ஆட்சிசெய்தான். அத்தமிழன் வழி தமிழ் கூறும் நல்லுலகத்தில் சமணத்தைப் பரப்ப வேண்டும் என்பது ஆசிரியரின் உள்ளக் கிடக்கையாக இருத்தல் கூடும். சமணம் அரசனை உயர்வுபடுத்தி அதன்வழி சமண அறத்தைப் பரப்ப விழைந்தது. அரசரத்தை முன்னிலைப்படுத்துகிறது. அடுத்தபடியாகவே கொல்லாமை, ஊன் உண்ணாமை, பொய்யாமை, அகிம்சை, கள்ளாமை போன்ற சமண அறங்கள் கூறப்படுகின்றன.

## நாககுமார காவியம்

ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றான நாககுமார காவியம் நாகபஞ்சமி கதை என்றும் கூறப்படுகிறது. இது மொழிபெயர்ப்புக் காப்பியம் ஆகும். இக்கதை அமைப்பு முழுமை பெறவில்லை என்பதும் குழப்பம் நிறைந்த கதையமைப்பு என்பதும் இக்காவியம் புகழ்பெறாமைக்கு காரணமாகும். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இது கி.பி. 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சமணக்காப்பியம் ஆகும். இதில் 170 பாடல்கள் உள்ளன. மறைக்கப்பட்ட மரபுச் செல்வம் எனும் நூலில் இந்நூல் மறைந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக்கழகத்தின் வெளியீடாக மு. சண்முகம்

பிள்ளை 1973-இல் பதிப்பித்துள்ளார் “நூல் முழுக்க மணத்தையும் போகத்தையுமே பேசுகிறது. ஆயின் காவிய அமைதியோ கவிநயமோ எத்துணையும் இல்லாச் சொத்தை நூல் என்று மது ச.விமலானந்தம் குறிப்பிடுகின்றார்.” [13] இஃது ஐந்து சருக்கங்களைக் கொண்டது. நாககுமாரன் வரலாறு உரைக்கும் நூல்களும் மொழிகளும் பலவாகும்.

**கதைச் சுருக்கம்**

மகதநாட்டை சிரேணிகராசன் ஆண்டு வந்தான். அந்நாட்டிற்கு வரவீரநாதர் (மகாவீரர்) எழுந்தருளினார். சிரேணிகராசன் அவரைக் கண்டு அடிதொழுது துதித்தான். மகாவீரரின் வாய்மொழியாக நாகபஞ்சமி நோன்பு பற்றிக் கூறுமுகத்தான் நாககுமாரனின் கதை இடம்பெறுகிறது. மகதநாட்டு மன்னன் சயந்தரனுக்கு விசாலநேத்திரை எனும் மனைவியும் சீதரன் எனும் மகனும் உண்டு. பிரிதிதேவி எனும் பெண்ணின் ஓவியப்படத்தைக் கண்டு மயங்கி அவளை மணந்து பட்டத்து அரசியாக்குகின்றான். பிரிதிதேவியின் மகன் நாககுமாரன் ஆவான். அவன் இளைமையிலேயே வீரமும் வெற்றியும் கொண்டு புகழோடு வாழ்கின்றான்.

இதனைப் பொறாத விசாலநேத்திரையும் அவள் மகன் சீதரனும் நாககுமாரனைக் கொல்ல எண்ணுகின்றனர். இதற்கிடையில் பஞ்சசுகந்தனி என்ற கணிகையின் மகள்களாக கின்னரி – மனோகரியை நாககுமாரன் மணக்கின்றான். நாககுமாரனைக் கொல்ல சீதரன் படைகளை ஏவுகின்றான். நாககுமாரனுக்கு ஏவல் செய்யும் வியாளன் என்னும் தோழன் அப்படையைத் தோற்கடிக்கின்றான். பின்னர் தந்தையின் சொற்படி நாட்டினைத் துறந்து நாககுமாரன் மனைவியருடன் வெளியேறுகின்றான். அவன் செல்லும் வழியில் பலதோழர்களையும் மனைவிகளையும் அடைகின்றான். நாககுமாரன் பிஹிதாஸ்வரர் எனும் முனிவரை சந்தித்து வணங்கி, தனது முற்பிறப்பையும் நாகபஞ்சமி நோன்பையும் அறிகின்றான். பின்னர் தனது நாடு சென்று அரசாட்சி புரிந்து நாகபஞ்சமி நோன்பும் நோற்கின்றான். தனது முற்பிறப்பு மனைவியும் இப்பிறப்பு இலக்கணையுமானவளைப் பட்டத்தரசியாக்கி அவளது மகன் தேவகுமாரனுக்கு அரசாட்சியைத் தந்து துறவு மேற்கொண்டு சித்த நிலையை அடைகின்றான்.

இவ்வாறு நாககுமார காவியம் முடிவடைகிறது. இக்கதைத் தொடக்கத்தில் வந்த சிரேணிகராசன், மகாவீரர் பற்றிய செய்திகள் இறுதியில் இடம் பெறவில்லை. இதனால் கதைத்தொங்கல் ஏற்படுகிறது. சிரேணிகராசன், மகாவீரர் பற்றி கூறி நாககுமார காவியம் முடிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் கதைப்போக்கு அவ்வாறு இல்லை. நண்பர்கள், மனைவியர் அடைதல் என்ற நிலையிலேயே நாககுமாரன் கதை செல்கிறது. இடையிடையே சமண சமயத்தில் துறவியாக இணைவது பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

**அறவழி வாழ்ந்த மாந்தர்கள்**

நாககுமார காவியத்தில் நாககுமாரன், சிரேணிகராசன், சயந்திரன் ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.

**நாககுமாரன்**

கதைத்தலைவனான நாககுமாரனின் இயற்பெயர் பிரதாபந்தன் என்பதாகும். நாகவாவியுள் விழுந்த குழந்தையை நாகம் காப்பாற்றியமையின் நாககுமாரன் எனப் பெயர் பெற்றான். இரண்டாம் சருக்கம் முதலாக அனைத்து சருக்கங்களிலும் நாககுமாரனின் புகழ்ப்பாடப்படுகிறது. நாககுமாரன் அறவழிவாழ்ந்த மாந்தர் எனப் போற்றத்தக்கவன் ஆவான்.

**பரத்தமை ஒழிப்பு**

உதயணகுமார காவியம் போன்று நாககுமாரனும் கணிகை மகளை மணப்பதாக பரத்தமை ஒழிப்பு பேசப்படுகிறது. பஞ்சசுகந்தனி என்ற கணிகையின் மகள்களான கின்னரி, மனோகரி என்ற நங்கையர்களின் இசையைக் கேட்டு அவர்களில் சிறந்தவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு நாககுமாரனைச் சார்ந்தது. இசையில் வல்ல நாககுமாரன், மனோகரி இசை வல்லவள் எனச் சிறப்பித்தான். பின்னர் அக்கணிகையின் மகள்களைத் திருமணமும் புரிந்தான். இதன்மூலம் பரத்தமை ஒழிப்பைச் சமணம் போதிக்கிறது. முதலில் மணந்தவர் பட்டத்துக்கு அரசியாவர். ஆனால் நாககுமாரன் இறுதியாக மணந்த இலக்கணையைப் பட்டத்தரசியாக்குகின்றான். முதலாவதாக மணக்கப்பட்ட கின்னரி – மனோகரியை அரசியாக்காமை பரத்தமையின் இழிவைச் சுட்டுகிறது. நாககுமாரன் பெண்களை மணப்பதில் சீவகனோடு ஒப்பு நோக்கத் தக்கவன். இசை காமத்தை மிகுவிக்கும் என்ற சமணம் கூறும் சிந்தனைக்கு ஏற்ப இசையின் மூலமே நாககுமாரன் மனைவிகளைப் பெற்றுள்ளான்.

**அதிகம் ஆசைப்படாமை**

நாககுமாரன், சூதாடி வென்ற பொருள்களில், தன் தாயிடமிருந்து கைகொண்ட பொருள்களைத் தவிர ஏனையவற்றைத் தானமாக (செய்.72) வழங்குகின்றான்.

**உதவும் மனப்பான்மை**

நாககுமாரகாவியம் மூன்றாம் சருக்கத்தில் 86, 87 ஆம் செய்யுள்களுக்கு இடையில் கதைத்தொடர்ச்சி இல்லை. ஆனால் உரையசிரியர்கள் சுசீலை என்பவளைப்

பற்றி இவ்விடைப்பகுதியில் இருப்பதாக உரை எழுதுகின்றனர். கன்னியாகுச்சம் என்னும் நகரத்து அரசன் செயவர்மன் மனைவி குணவதி ஆவர். இவர்களது மகள் சுசீலை ஆவாள். இவளை அரிவர்மனுக்கு திருமணம் செய்ய எண்ணினார். ஆனால் துட்டவாக்கியன் சுசீலையைக் கவர்ந்து சென்றான். நாககுமாரன் துட்டவாக்கியனை வென்று சுசீலையை மீட்டு அரிவர்மனுக்கு மணமுடிந்தார் என்ற உரைப்பகுதி இடம்பெறுகிறது. இஃது நாக குமாரனின் உதவும் மனப்பான்மையைப் புலப்படுத்துகிறது. மேலும் இரம்மிய வனத்து வேடனின் மனைவியைப் பீமன் என்னும் அசுரனிடமிருந்து காத்ததும் (செய். 93, 94), வனராசனுக்கு அவனது நாட்டைச் சோமபிரமனிடமிருந்து கைப்பற்றி கொடுத்ததும் நாககுமாரனின் உதவும் மனப்பான்மையைச் சுட்டுகிறது.

**நாகபஞ்சமி நோன்பு**

நாககுமாரகாவியம், நாகபஞ்சமி நோன்பின் பெருமையை உலகிற்கு எடுத்துக்காட்டப் படைக்கப்பட்டதாகும். நாககுமாரன் முற்பிறப்பில் நாகதத்தன் எனும் பெயரோடு வணிக குலத்தில் பிறந்து நாக பஞ்சமி நோன்பு நோற்றபடியே இறந்தமையால் இப்பிறப்பில் உலகாளும் அரசனாகப் பிறந்ததாகக் கூறப்படுகிறது. இப்பிறப்பில் இந்நோன்பினை நோற்றால் வீடுபேறு அடையலாம் என்றும் கூறப்படுகிறது. கார்த்திகை அல்லது பங்குனி அல்லது ஆடி மாதத்தில் வரும் சுக்கில பட்சத்தில் நான்கு நாள் ஒருபோது உண்டு, ஐந்தாம் நாள் முழுவதும் பட்டினி கிடந்து நோற்க வேண்டும். மேலும் தொடர்ந்து ஐந்தாண்டுகள் மாதாமாதம் வரும் பஞ்சமி திதியில் நோற்க வேண்டும். இதுவே நாகபஞ்சமி நோன்பு ஆகும். இத்தகைய கடுமையான நோன்பினை நாககுமாரன் மேற்கொண்டான். நோன்பு நோற்றலால் நல்வினை வந்தடையும் என்பது சமண நம்பிக்கை ஆகும். பிறருக்கு உதவுதல், நோன்பு நோற்றல் ஆகிய சமண அறங்களைக் கடைபிடித்து வாழ்ந்ததால் நாககுமாரன் அறவழி வாழ்ந்த மாந்தாராகின்றான்.

**சிரேணிகராசன்**

இவர் அறவழி வாழ்ந்த மாந்தராவார். வத்தநாட்டு மன்னனான சிரேணிகராசன் கொடைத்திறம் மிக்கவர். மேலும் மாவீரரைக் கண்டு, அவரைப் போற்றித் துதிக்கின்றார். துதி என்பது சமண சமயத்தின் ஷடாவஸ்யக் கொள்கைகளுள் ஒன்றாகும். இது பெரியோரைப் போற்றுதல் எனும் அறத்தின்பாற்படும்.

**‘பொறியொடுவல் வினைவென்ற புனித னீயே**
**பூநான்கு மலர்ப்பிண்டிப் போத னீயே**
**புறவிதழ்சேர் மரைமலர்மேல் விரனால் விட்டுப்**
**பொன்னெயிலுண் மன்னியபுங் கவனு நீயே**

**அறவிபணி பணிவரங்கத் தமர்ந்தாய் நீயே**

**ஐங்கணைவில் மன்மதனை யகன்றாய் நீயே**

**செறிபுகழ்சேர் சித்திநகர் தன்னை யாளும்**

**சிரீவர்த்த மானனெனுந் தீர்த்த னீயே' (நாக.முதல் : 16)**

என்று தொடங்கி வரும் ஐந்து பாடல்களும் வர்த்தமானரைச் சிரேணிகராசன் துதிப்பதாக அமைகிறது.

- ❖ உலகியலுக்கான **ஆறுபொருள்களைச்** சொன்ன ஈசன் நீ !
- ❖ கோபம் முதலியன இல்லாத முன்னோன் நீ !
- ❖ முக்குடை அமர்ந்த தலைவன் நீ !
- ❖ **ஒன்பது பதங்களையும்** ஆறு **நயங்களையும்** சொன்னவன் நீ !
- ❖ நன்முனிவர் மனிதில் உறையும் தலைவன் நீ !
- ❖ **ஐந்து பதவிகளைச்** சொன்னவன் நீ !
- ❖ தூயோரின் மனதை மகிழ்விப்பவன் நீ !
- ❖ நல்வினை தீவினையை விலக்கியவன் நீ !
- ❖ இறைவனும் நீ !
- ❖ சிவமயமாய் நின்று தேசத்தை ஒளிர்விப்பவன் நீ !

என்று துதி அமைகிறது. இத்துதிப் பாடல்களில் சமணசமயக் கொள்கைகள் பரவிக் கிடக்கின்றன. சமணக் கொள்கைகளில் ஆறு பொருள்கள், ஒன்பது பதங்கள், ஆறு நயங்கள், ஐந்து பதவிகள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவை சமண சமய அறங்களைக் குறிக்கின்றன. இவை முதல் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

**சயந்தரன்**

சயந்தரன் நாககுமாரனின் தந்தையும் வத்தவநாட்டு அரசனும் ஆவார். இவர் நேர்மைக் குணமிக்கவராகவும் கொலையை எதிர்ப்பவராகவும் துறவு பூணுபவராகவும் படைக்கப்பட்டமையின் அறவழி வாழ்ந்த மாந்தராகப் போற்றத்தக்கவராவார்.

**நேர்மைத்திறம்**

அரசர், பிரிதிதேவிக்கும் நாககுமாரனுக்கும் வெளியில் செல்லும் உரிமையைத் தடைசெய்கின்றார்.

'நின்னுடன் மனைதனி லீண்டினிதி னாடலென்

நந்நகர்ப் புறத்தனைய னாடனீங்க வென்றனன்.' (நாக . இரண் : 65)

என்ற அடிகள் சயந்தரனின் நேர்மைத் திறத்தைச் சுட்டுகிறது. நாககுமாரன் வெளியில் செல்வதால் புகழ் அடைகின்றான். அப்புகழ் அவனை அரசுகட்டிலுக்கு உரிமையாக்கி விடும். ஆனால் சிரிதரனே அரசுக்குரியவன். எனவே தான் நாககுமாரன் வெளியில் செல்வதைத்தடுத்து நடுநிலையாக நிற்கின்றார்.

**கொலை எதிர்ப்பு**

சமணசமயம் ஊன் உண்ணாமையோடு, கொல்லமையையும் வலியுறுத்துகின்றது. அக்கருத்தை பதிவு செய்ய நாககுமார காவியத்தின் ஆசிரியர் சயந்தர மன்னனின் நடுவுநிலைமையைச் சுட்டுமிடுத்து, 'கோனவர் குமரர் கண்டு கொலைத்தொழில் லொழித்ததன்றே' (நாக.மூன்று : 83) என்று கூறுகின்றார்.

நாககுமாரனுக்கும் சிரீதரனுக்கும் இடையே போர் மூண்டதையறிந்து சயந்தரமன்னன், மந்திரி நயந்தரனின் மூலம் போரை நிறுத்தி கொலைத் தொழிலைத் தடுத்தனன். இது கொலை எதிர்ப்பு எனும் சமணக் கொள்கையைக் குறிக்கிறது.

**துறவு**

இல்லறமும் துறவறமும் சமணசமயத்தின் இரு கண்கள் போன்றவை. துறவினை சமணம் யதி தர்மம் என்று குறிப்பிடுகிறது. அத்தகைய யதி தர்மத்தை சயந்தர மன்னன் கடைபிடிப்பதன் மூலமாக வீடுபேறு அடைய முயற்சிக்கின்றார். எனவே சயந்தரன் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றார்.

## சூளாமணி

சூளாமணி ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்றாகும். எனினும் பெருங்காப்பியத் தகுதி பெற்றது என அறிஞர் பலராலும் பாராட்டப் பெறும் நூலாகும். இதன் ஆசிரியர் தோலாமொழித்தேவர். இந்நூல் சமணசமயம் சார்ந்தது. இதன் காலம் கி.பி.7 எனவும் கி.பி.10 எனவும் கூறப்படுகிறது.

''ஸ்ரீபுராணம் எனப்படும் ஆருகத மாபுராணத்தைத்தழுவி சூளாமணி எழுதப்பட்டது என்றும் பாகவதமும் சூளாமணியும் கதைப் போக்கில் ஒத்துள்ளன என்றும் கூறப்படுகிறது. மேலும் மைசூர் மாநிலத்தில் உள்ள சிரவணபெல்கொளாக் கல்வெட்டில் தோலாமொழித் தேவர் பற்றிய குறிப்புக் காணப்படுவதாக''[14] பாக்கியமேரி அவர்கள், வகைமை நோக்கில் இலக்கிய வரலாறு எனும் நூலில் குறிப்பிடுகின்றார். சூளாமணி பன்னிரு சருக்கங்களை உடையது. நாட்டுச் சருக்கம், நகரச் சருக்கம், குமாரகாலச் சருக்கம், இரதநூபுரச் சருக்கம், மந்திரசாலைச் சருக்கம், தூதுவிடு சருக்கம், சீயவதைச் சருக்கம், கல்யாணச் சருக்கம்,

அரசியற் சருக்கம், சுயம்வரச் சருக்கம், துறவுச் சருக்கம், முக்திச் சருக்கம் ஆகியவை ஆகும். முடிக்கு ஒரு சூளாமணியாய் அமைந்த பயாபதி மன்னனைப் பற்றி சூளாமணி பேசுகின்றது.

**கதைச் சுருக்கம்**

சுரமை நாட்டைப் பயாபதி மன்னன் ஆண்டு வந்தான். மிகாபதி, சசி என்ற இருவர் பட்டத்து அரசிகளாக பயாபதி மன்னனின் மனைவியாக வாழ்ந்து வந்தனர். மிகாபதிக்கு விசயன் என்ற மகனும், சசிக்கு திவிட்டன் என்ற மகனும் பிறந்தனர். இவர்கள் பிறந்த போது நல்நிமித்தங்கள் ஏற்பட்டன. இவர்கள் இருவரும் பலராமனும் கண்ணனுமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர். வித்தியாதர நாட்டின் இரதநூபுரச் சக்கரவாளம் என்ற நகரத்தின் அரசன் சுவலனசடி ஆவான். அவனுக்கும் வாயுவேகைக்கும் அருக்ககீர்த்தி என்ற மகனும், சுயம்பிரபை என்ற பெண்ணும் உள்ளனர். நிமித்திகனின் வாக்குப்படி சுயம்பிரபையைத் திவிட்டனுக்கு மணமுடிக்க எண்ணி மரிசி என்ற தூதுவனை அனுப்பினர். வித்தியாதர உலகின் வடசேடியை ஆண்ட அச்சுவகண்டன் சுயம்பிரபையை மணக்க எண்ணினான். சுயம்பிரபையைத் திவிட்டனுக்கு மணமுடிக்க இருப்பதை அறிந்து அவன் புகழ் கெடுக்க முனைந்தனன். அரிகேது என்பவனை மாயசிங்கமாக்கி திவிட்டன் மீது ஏவினான். திவிட்டன் சிங்கத்தை மாய்த்து வெற்றி கொண்டு சுயபிரம்பையைத் திருமணம் முடித்தான்.

திவிட்டன் – சுயபிரம்பைக்கு விசயன் என்ற மகனும் சோதிமாலை என்ற பெண்ணும் பிறந்தனர். சுயபிரம்பையின் தமையன் அருக்ககீர்த்திக்கு அமிர்ததேசன் என்ற மகனும் சுதாரை என்ற மகளும் பிறந்தனர். சோதிமாலை அமிர்ததேசனையும், விசயன் சுதாரையையும் மணந்தனர். இறுதியில் பயாபதி மன்னன், விசயனுக்கும் திவிட்டனுக்கும் அரசாட்சியை பகிர்ந்தளித்துவிட்டு முனிவரிடம் அறம் கேட்டு துறவு பூண்டு முக்தி அடைந்தான். பயாபதி மன்னனைத் தொடர்ந்து அவனது மனைவியரும், அமைச்சரும் துறவு பூண்டனர்.

**அறமுரைக்கும் மாந்தர்கள்**

சூளாமணியில் பயாபதி, சாரணர், சுச்சுதன் ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்கள் ஆவர்.

**பயாபதி மன்னன்**

சூளாமணி காப்பியத்தின் கதைத் தலைவனான பயாபதி மன்னன் சுரமை நாட்டை ஆண்டுவந்தான். இம்மன்னன் குறித்த செய்திகள் நகரச் சருக்கம் முதலாக முக்திச்

சருக்கம் ஈறாக 11 சருக்கங்களில் இடம்பெறுகின்றன. பயாபதி மன்னன் நாட்டையும் மக்களையும் திறம்பட வழிநடத்தி பின்னர் தன்னை உய்விக்கும் பொருட்டு தவநிலை தேடி முக்தி அடைந்தவன். எனவே பயாபதி மன்னன் அறமாந்தர்களுள் ஒருவனாக வைத்துப் போற்றத்தக்கவன் ஆவான்.

**மன்னன் இயல்பு**

மனித இயல்புகள் மன்னன் இயல்புகளோடு பொருந்தாது. மாநிலம் ஆளும் வேந்தனுக்கு தனி நீதி ஆகும். மக்கள், மனதில் உள்ளதை வெளிப்படப்பேசுவது அறம் என்பர். ஆனால் அரசன், தான் எண்ணியதை வெளிப்பட உணர்த்தக் கூடாது. அத்தகைய தன்மையை 'எண்ணின ரெண்ணகப் படாத செய்கை' என்று சூளாமணி குறிப்பிடுகிறது. பயாபதி மன்னனும் அத்தகைய செய்கையுடையவன் ஆவான். மேலும் நண்ணுநர்க்கு தண்ணியனாகவும் பகைவருக்கு வெய்யனாகவும் திகழ்பவன். இம்மன்னன் ஆட்சி காலத்தில் பகைவர் சுரமை நாட்டின் மீது படை யெடுத்து வந்து மக்களை வருத்தியதில்லை. அதற்குக் காரணம் பயாபதி மன்னனின் வீரமாகும். பயாபதியின் நாடு,

**'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேராது இயன்வது நாடு'** **(குறள் : 734)**

என்ற இலக்கணங்களுக்குகேற்ப பசி, பிணி, பகை இல்லாத நாடாக இருந்தது. பயாபதி, ஆறில் ஒரு பங்கை வரியாகப் பெறவேண்டும் என்ற விதிக்குட்பட்டு வரிவாங்குபவன். மக்கள் இன்பமாக வாழ வழிவகுத்தவன். மேலும் மன்னன் இருவகைப் பகையையும் வென்றவன் ஆவான். இருவகைப் பகைகளாவன, அகப்பகை, புறப்பகை ஆகியவையாகும். புறப்பகையைக் காட்டிலும் அகப்பகை தீமை மிக்கது. ''காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் எனும் ஆறும் உட்பகைகள் என்றும் கள்வர், தீமைபுரியும் உறவினர், தீக்குணத்தொழிலாளர், மிக்க மழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி முதலியவை வெளிப்பகை என்னும் கூறப்படுகிறது.''[15] இப்பகைகளை வென்றவர் பயாபதி மன்னன் ஆவார். வெளிப்பகையை வெல்ல வீரம் மட்டுமே போதுமானதாகும். ஆனால் அகப்பகையை வெல்ல மனவலிமை மிக இன்றியமையாததாகும். அத்தகைய மனவலிமையையும், உடல் வலிமையையும் மிக்க மாந்தராக பயாபதி மன்னன் படைக்கப்பட்டுள்ளான்.

**அடக்கமுடைமை**

மன்னன் என்றாலும் அவனிடத்தும் அடக்கம் தேவை என்பதை பயாபதி மன்னன் தன் செயலால் நிறுவுகின்றான். தூதுவனுக்கும் மன்னன் மதிப்பளிக்க வேண்டும் என்ற

காரணத்தால், மரிசி என்ற தூதன் சினங்கொண்ட போது, அதை தணிக்கின்ற மன்னனின் செயலானது,

**‘அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**

**ஆரிருள் உய்த்துவிடும்’ (குறள் : 121)**

என்ற குறளின் படி நடந்தது புலனாகிறது.

**‘ஆங்கவ னுரைப்பக் கேட்டே யம்பர சரனை நோக்கித்**

**தேங்கம ழலங்கன் மார்ப சிவந்துரையாடல் வேண்டாம்’(சூளா : 524)**

என்று கூறி தான் அமைதியாக இருந்ததற்கு மகிழ்ச்சியே காரணம் என்று எடுத்துக்காட்டி தூதனின் கோபத்தைத் தணிக்கின்றான்.

**ஆகூழ் – போகூழ்**

ஊழ்வினையை இருவகையாகப் பகுக்கின்றனர். ஆக்கம் தரும் வினையை ஆகூழ் என்றும், துன்பம் தரும் ஊழ்வினையை போகூழ் என்றும் கூறுவர். பயாபதி மன்னன், போகூழே தன்னிடம் இருப்பதாக மனதளவில் வருந்தினான். அச்சுவகண்டன், சுயம்பிரம்மையை மணக்க இயலாததால், அவனை மணக்கவிருந்த திவிட்டனின் நாட்டின் மீது போர் தொடுக்க எண்ணினான். ஆனால் பயாபதி மன்னன் போரைத் தடுக்கத் திறை கொடுக்க முடிவு செய்தான். யானை தன் கோபத்தை அடக்குவது போல அடக்கிக் கொண்டு,

**‘பொன்றென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்**

**துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்’ (குறள் . 487)**

என்னும் வாக்கிற்கேற்ப காலத்தை எண்ணிக் காத்திருந்தான். இயற்கையில் அமைந்த மதிநுட்பமும் உயர்ந்தகுல நலமும் புகழுடைமையும் கல்வியறிவுடைமையும் உடல்நலனும் இவையனைத்தும் பொருந்திய இருவருள்ளுள் ஒருவர் அடிமைப்பட்டு இருப்பதற்கு வினைப்பயனே காரணமென்பதாக பயாபதி மன்னன் உணர்ந்தான். இதனை,

**‘தினைத்துணையார் ஆகித்தந் தேசுள் ளடக்கிப்**

**பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்**

**நினைப்பக் கிடந்த தேவனுண்டா மேலே**

**வினைப்பயன் அல்லாற் பிற’ (நாலடியார். 105)**

என்று நாலடியாரும் கூறுகின்றது.

**‘ மதியினை மலரச் சூழ்ந்து வருந்தித்தாம் படைக்கப்பட்ட**

**நிதியினை நுகர்து மென்று நினைத்தனி திருந்த போழ்திற்**

**பதியினைக் கலக்கிச் சென்று பறித்துத்தாம் பிறர்க்கு நிட்டும்**

**விதியினை விலக்க மாட்ட மெலிபவால் வெளிய நீரார்’ (சூளா.668)**

என்ற பாடலடிகள் போகூழைப் பற்றிக் கூறுகின்றன. பயாபதி மன்னன், தாம் ஈட்டிய செல்வத்தை நுகர எண்ணும் போது அதை அச்சுவகண்டன் தட்டிப்பறித்த போகூழை எண்ணி வருந்துகின்றான். ஒரு பேரரசன் காலத்தையும் ஊழையும் எண்ணி வாழாவிருந்தமை இகழ்ச்சிக்குரியதாகவே கருதப்படும். துறவுச் சருக்கத்தில் நல்லூழின் சிறப்பு பாராட்டப்படுகிறது. பயாபதி, மன்னனாகப் பிறந்து, யானையில் வலம் வந்து பலகுடை வேந்தரும் பணியுமாறு வாழ்ந்ததற்கு, ஆகூழே காரணமாக (செய் .1843) கூறப்படுகிறது.

**நிலையாமை உணர்தல்**

யாக்கையும் செல்வமும் நிலையில்லாததாகும். இவைகளைப் பயாபதி மன்னன் உய்த்துணர்கின்றான். வாழ்நாட்கள் கழிந்தன கழிந்தனவே. அவற்றை மீண்டும் பெற இயலா. எவ்வளவு இன்பம் நுகர்ந்து வாழ்ந்தாலும் ஒவ்வொரு உயிரும் இறந்தொழியும். எனவே யாக்கை நிலையில்லாதது என்பதை உணரவேண்டும். காட்சியளவை என்பது ஒரு நிகழ்வை காட்சிப்படுத்துவதாகும். நிலையாமையை ஒரு இலையைக் கொண்டு காட்சியளவைப்படுத்தினர்.

‘தீப்பிழம்பை ஒத்த இளைமையுடைய தளிர் இரண்டே நாளில் மரகதமணிபோன்று பசிய உருவம் தாங்கி, பின்னர் பழுத்து காய்ந்து சருகாகி கருகிப் போவதைப் போன்றே மனித வாழ்க்கையும் நிலையற்றதாகும்’ என்று காட்சிப்படுத்தப்படுகிறது. ‘நம்மோடு பிறந்து, நம்மால் வளர்க்கப்படும் இவ்வுடல், நாள்தோறும் முதிர்ந்து வருதல் கண்கூடு. உடலானது நம்மைப் பற்றாமல் ஒருநாள் மாண்டொழியும் என்பது உறுதி’ என்பதை பயாபதி மன்னன் உணர்ந்தான்.

**‘மாக்கேழ் மடநல்லாய் என்ற ரற்றும் சான்றவர்**

**நோக்கார்கொல் நொய்யதோர் புக்கில்லை – யாக்கைக்கோர்**

**ஈச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே**

**காக்கை கடிவதோர் கோல்’ (நாலடியார் . 1)**

என்று நாலடி நிலையாமைப் பற்றிக் கூறுகிறது. அதே கருத்தை சூளாமணியும் “தொகுக்கப்பட்ட மலர்களாற் புனைந்த மாலைகளை அணிந்து, தூய நறுமணங்கமழும் மணப்பொடிகளைத் திமிர்ந்து மணப் புகைகளை நன்கு மணங் கமழும்படி ஊட்டி,

போற்றப்பட்ட இவ்வுடல், ஒரு சிறுமுள் தனது நுனியாலே குத்திய மாத்திரையானே, ஊன் சிதைவுற்று, சீழ் வடிதலையுடைத்தாம் எனின் இத்தகைய இழிந்த இவ்வுடலை யாம் பொருளாகக் கொண்டு இன்புறுதல் நாணுத் தகவுடைத்தாம். மேலும் இப்பேதைமை சான்றோரான் நகைக்கப்படுதலையும் மிக உடையதாகும்'' [16] என்று கூறுகிறது. இதனை,

**'தொகைமல ரலங்கல் சூழத் தூநறுஞ் சுண்ண மப்பிப்**

**புகைநனி கமழ வூட்டிப் புறஞ்செயப்பட்ட மேனி**

**சிகையினோர் சிறுமுட் டீண்டச் சிதைந்தழுக் கொழுகுமாயின்**

**நகைபெரி துடைத்து நாணா மிதனைநா மகிழ்த னெஞ்சே'(சூளா : 1849)**

என்ற செய்யுள் விளக்குகிறது. இவ்வாறு நிலையாமை குறித்த பல கருத்துக்கள் சூளாமணி ஆசிரியரால் அறவழி வாழும் மாந்தராகப் படைக்கப்பட்ட பயாபதி எனும் மாந்தர்ப்படைப்பின் மூலம் உலக மக்களுக்கு எடுத்தோதப்படுகிறது.

**செவியறிவுறுத்தல்**

செவியறிவுறுத்தல் என்பது ஒருவருக்கு அறிவுரை வழங்கி வாழ்த்துதல் ஆகும். இதனைத் தொல்காப்பியரும்,

**'வாயுறை வாழ்த்தே யவையடக் கியவே**

**செவியறி வுறூஉவென வவையு மன்ன' (தொல் . செய் : 423)**

என்று குறிப்பிடுகின்றார். செவியறிவுறுத்தல் என்பதன் பொருளாக ''ஒருவர்க்குச் செவியறிவுபடுத்து அவரை வாழ்த்துதல் ''[17] என்பது கூறப்படுகிறது. சூளாமணியில் பயாபதி மன்னன், துறவு பூண்டு, தன் மக்கள் நாட்டை வழிநடத்தும் பொருட்டு அறிவுரை வழங்கி, செவியறிவுறுத்தி வாழ்த்தி விடைபெறுகின்றார். சங்க இலக்கியங்களில் அரசனுக்கு புலவர்கள் ஆட்சி செலுத்த வேண்டிய அறமுறையை செவியறிவுறுத்துவர். அவ்வாறே பயாபதி மன்னனும் தான் சென்றாலும் நாட்டுமக்கள் நலமுடன் வாழ வேண்டி விசய திவிட்டருக்கு அரசு அறங்களை எடுத்தோதுகின்றார். பயாபதி கூறிய செவியறிவுறுத்தலாவன,

- பொருள் இல்லாரிடத்து இன்பமும் அருள் இல்லாரிடத்து அறப்பயனும் இல்லாதது போல் அறிவில்லாதவரிடத்து திருமகள் நில்லாள்.
- திருமகள் ஒருவரித்தும் கேண்மை கொண்டு ஒரேயிடத்தில் தங்க மாட்டாள்.
- பொருள் குறைந்தவுடனே கணிகையர் வேறு இடம் நோக்கி செல்வது போல ஆகூழ் குறைந்தவுடனே திருமகளும் வேறு இடம் நோக்கிச் செல்வாள்.

- ❖ திருமகள் ஒருவரிடத்து நிலைத்து நின்றால், அவரது அன்பு, அறன், ஈகை, வாய்மை போன்ற பல நற்குணங்களை அழித்து, பகை, வெகுளி, செருக்கு போன்ற தீகுணங்களை மிகுவிப்பாள்.
- ❖ கணிகையரை நம்பியவர் பொருள் போன்று, திருமகளை மகிழ்ந்தவர் நற்குணங்கள் தேய்ந்தொழியும்.
- ❖ இத்தகைய இயல்புடைய திருமகள் மீது காதல் கொள்ளக் கூடாது. சான்றோர்களின் துணையை மட்டும் பெரிதும் விரும்ப வேண்டும். இக்கருத்துக்கள் மூலம் செல்வ நிலையாமையும் சிற்றினம் சேராமையும் பெரியோரைத் துணைக் கோடல் என்ற அறங்கள் உணர்த்தப்பட்டன.
- ❖ நிலமகள் காலந்தோறும் நிலைத்து நின்று புதிது புதிதாய் உள்ள மக்களிடத்து சேரும் இயல்புடையது.
- ❖ நிலமகள் மிகப் பழமையுடையதும் பலரால் நுகரப்பட்டதுமாகிய எச்சிலே ஆகும். நிலமகள் பன்னெடுங்காலம் வாழும் கிழவி ஆவாள்.
- ❖ தன்னோடு இன்புற்று வாழ்ந்த மன்னன் இறந்துபடின், அப்போதே மாற்றான் வசமாகும் கற்பில் மகள் நிலமடந்தை யாவாள்.

எனவே நிலமும் நிலையில்லாதது என்பதை உணர்ந்து மக்கள் நலனுக்காய் மன்னன் கடமையாற்றி பின்னர் துறவு பூண வேண்டும் என்று பயாபதி மன்னன் தன் மக்களுக்கு அறிவுரை வழங்குகின்றான். இவ்வறிவுரைகள் மகன்கள் மீது கொண்ட பாசத்தால் அன்றி மக்கள் மீது கொண்ட அன்பால் விளைந்தமையின் பயாபதி என்ற மாந்தர் அறமுரைக்கும் மாந்தர் என்பதில் ஐயமில்லை.

**துறவு நிலை**

“வாழ்க்கையின் முடிவில் துறவு மேற்கொள்ளும் கொள்கை அரசனின் சிறப்பெனக் காளிதாசர் இரகு வம்சத்தில் பாடுகிறார்.”[18] அதன்படியே பயாபதி மன்னனும் விசய திவிட்டருக்கு முடிசூட்டி விட்டு துறவு கோலம் பூணுகின்றார். பயாபதி துறவியாகி மெய்நூல்கள் கற்று, பஞ்சமகா விரதங்களாகிய கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிரமசரியம், அவாவின்மை ஆகியவற்றைக் கடைபிடித்து, ஐவகை ஒழுக்கங்களான ஞானம், தரிசனம், சாரித்திரம், தவம், வீரியம் ஆகியவற்றையும் கைகொண்டு, ஞானாவரணீயம் முதலிய கன்மங்களை நீக்கி வாழ்ந்தார். ஞானாவரணீயம், தர்சனாவரணீயம், தேவனீயம், மோகனீயம், ஆயுள், நாமம், கோத்திரம், அந்தராயம் என்று கன்மங்கள் எட்டாகக் கூறப்படுகிறது.

1. “ஞானாவரணீயம் – உயிரின் இயல்பான மெய்யறிவை மறைப்பது.

2. தர்சனாவரணீயம் – உயிரின் காட்சியை நம்பிக்கையை மறைப்பது.

3. வேதனீயம் – இன்ப துன்பங்களை அளிப்பது

4. மோகனீயம் –உண்மைப் பொருளை அறிய முடியாதவாறு மயங்கச் செய்வது.

5. ஆயுள் – வாழ்நாளை வரையறை செய்வது

6. நாமம் – உடல் உறுப்புகளையும் நிறங்களையும் தோற்றுவிப்பது.

7. கோத்திரம் – உயர்ந்த தாழ்ந்த குலங்களில் பிறக்கச் செய்வது

8. அந்தராயம் – இலாபம் (பயன்) அனுபவிக்க முடியாதவாறு தடுப்பது ”[19]

இவற்றின் உட்பிரிவுகள் நூற்று நாற்பத்தெட்டாகும். எண்பத்து நான்காயிரம் குணவிரதங்களையும் பதினெண்ணாயிரம் வகையான ஒழுக்க விரதங்களையும் பயாபதி கடைபிடித்தொழுகினார். மேலும் மனம், வாக்கு, காயங்களை அடக்கி, ஐம்பொறிகளாகிய வாயில்களை அடைத்து, தியானத்தில் அமர்ந்து, பன்னிரு சிந்தனைகளைக் கடைபிடித்து துறவு வழி நின்றார்.

**பன்னிரு சிந்தனைகளாவன,**

1. “நிலையாமைச் சிந்தனை (அநித்யானுப்ரேட்சை)

2. அரணின்மைச் சிந்தனை (அசரணானுப்ரேட்சை)

3. பிறவிச் சிந்தனை (சம்சாரனுப்ரேட்சை)

4. பிறிதின்மைச் சிந்தனை (ஏகத்வானுப்ரேட்சை)

5. உறவின்மைச் சிந்தனை (அந்நியத்வானுப்ரேட்சை)

6. உவர்ப்புச் சிந்தனை (அசுசித்வானுப்ரேட்சை)

7. ஊற்றுச் சிந்தனை (ஆஸ்ரவானுப்ரேட்சை)

8. செறிப்புச் சிந்தனை (சம்வரானுப்ரேட்சை)

9. உதிர்ப்புச் சிந்தனை (நிர்ச்சரானுப்ரேட்சை)

10. உலகச் சிந்தனை (போகானுப்ரேட்சை )

11. ஞானம் பெறலரிது சிந்தனை (போதிதுர்லபானுப்ரேட்சை)

12.அறச் சிந்தனை (தர்மஸ்வாக்யாதத்வானுப்ரேட்சை)”[20]

**நிலையாமைச் சிந்தனை**

பொருள்கள் எல்லாம் மாறக் கூடியன, நிலையில்லாதன, இளமை கழியும், அழகு கெடும், முதுமை நேரும், உடல் மறையும், செல்வம் சிதறும் போன்ற நிலையில்லாததனை சிந்தித்தல். இதனை,

**‘கேண்மின் நமரங்காள் கேடின்றி நிற்பதுயிர்**

**காண்மின் உடம்பு கவின் இளமை – கேண்மை யுடன்**

**வல்லாண்மை செல்வம் என்றிவ் வெல்லாம் வானத்து**

**வில்லாகும் என்றே விழையன்மின்’ (திருக்கலம்பகம் .76 : 3 – 6)**

என்று திருக்கலம்பகம் குறிப்பிடுகின்றது.

**அரணின்மைச் சிந்தனை**

பெற்றோர், உறவினர், செல்வம் என்றவைகளால் ஒருவரை மரணத்தினின்று காக்க இயலாது. எனவே அவைகளை அரணாகக் கருதாது அருகனின் அடிகளையே சரணாக அடைய வேண்டும். இஃது,

**‘ … … … தொல்லை.**

**முரணார் வினைப்பகைவர் மூளுங்கால் வாமன்**

**சரணார விந்தங்கள் அல்லால் – அரணாய்நீர்**

**எண்ணும் பொருள் சுற்றம் யாக்கை என்றின்ன வெல்லாம்**

**நண்ணும் சரணாக நாடன்மின்’ (திருக்கலம்பகம் . 76 : 7 – 10)**

என்ற அடிகாளால் குறிப்பிடப்படுகிறது.

**பிறவித் துன்பச் சிந்தனை**

நரகம் முதலான நான்கு பிறவிகளில் உண்டாகும் பிறவித் துன்பத்தை அடிக்கடி நினைத்தல் பிறவித் துன்பச் சிந்தனையாகும்.

**‘… … …. சூழும்**

**கறங்கின் உழலும் கதிதோறும் துன்பம்**

**பிறங்கும் பிறப்பஞ்சி வாழ்மின் ’ (திருக்கலம்பகம் . 76 : 12 – 14)**

என்பது திருக்கலம்பகம் கூறும் செய்தியாகும்.

**பிறிதின்மைச் சிந்தனை**

பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி முதலான துன்பங்களில் பிறர் யாரும் பங்கு கொள்ளவியலாது. நமது உயிர் ஒன்றே நமக்கு உற்ற துணை என அடிக்கடி நினைக்க வேண்டும் என்பது பிறிதின்மைச் சிந்தனையாகும்.

**‘பிறப்பு இறப்பு மூப்புப் பிணிகளென்னும் துன்பம்**

**உறப்புணர யான் உழக்குங் காலை – அறத்திறம் சேர்ந்து**

**யானாம் ஒருவனே அல்லது எனக்கு மற்று**

**ஏனோர் துணையல்லர் என்றறிமின்‘ (திருக்கலம்பகம் . 76 : 15 – 18)**

**உறவின்மைச் சிந்தனை**

உயிருக்கும் உடலுக்கும் வேறுபாடு உண்டு. இரண்டிற்கும் தொடர்பில்லை. அதேபோல் உற்றார் உறவினரும் தொடர்புடையர் அல்லர் என நினைப்பது உறவின்மைச் சிந்தனையாகும்.

**உவர்ப்புச் சிந்தனை**

இவ்வுடம்பானது இரத்தம், எலும்பு, நரம்பு, இறைச்சி ஆகியவற்றால் ஆன தூய்மையற்ற, அசுத்தமான, அருவருப்பான பொருள் எனச் சிந்தித்தல்.

**ஊற்றுச் சிந்தனை**

ஐம்புல உணர்வு, மனத்தில் தோன்றும் எண்ணம், சொல், செயல், ஆசை, மன அடக்கமின்மை, பொய்க்காட்சி முதலானவற்றால் வினை வரும் என்றும், இவையே எல்லாத்துன்பத்திற்கும் காரணமாகும் என்பதைச் சிந்தித்தல்.

**செறிப்புச் சிந்தனை**

உயிரிடத்தில் புதிய வினைகள் வராமல் தடுப்பது செறிப்பாகும். இதனால் உயிருக்கு நன்மை உண்டாகும் என நினைத்தல் செறிப்புப் சிந்தனை ஆகும்.

**உதிர்ப்புச் சிந்தனை**

வினைகள் பயனைக் கொடுத்துத் தாமாகக் கழியும் வரை காத்திராமல், அவை பயனைத் தருவதற்கு முன்னரே தவம், சீலம் முதலியவற்றால் அவற்றை நீக்கினால் உயிர்க்கு நன்மை ஏற்படும் என நினைத்தல் உதிர்ப்புச் சிந்தனையாகும்.

**'பரிசகசயம் தவம் அடக்கம் மூன்றால்**
**விரிதரு ஞானம் தியானத்தால் – இருவினைகள்**
**ஒத்த உதிர்ப்பாம் எனத் தெரிமின்' (திருக்கலம்பகம் . 76 : 35 – 37)**

(பரிசகசயம் – துன்பம் பொருத்தல்)

**உலகச் சிந்தனை**

உலகத்தின் அமைப்பை எப்போதும் கருதுதல் உலகசிந்தனையாகும். இதனைத் திருக்கலம்பகம்,

**‘தொல்லுலகு பல்லுயிரும் தோற்றற்கும் வீட்டற்கும்**

**எல்லையிடம் என்று இயைந்து நோக்குமின்கள்’ (திருக்கலம்பகம்.76:41 – 42)**

என்று குறிப்பிடுகிறது.

**ஞானம் பெறலரிது சிந்தனை**

மும்மணிகளான நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் ஆகியவை கிடைப்பதரிது எனக்கருதி அவற்றின் மேன்மையை நினைத்தல்.

**அறச்சிந்தனை**

அருகப் பெருமானது அறவுரைகள் உயிர்களுக்கு நன்மை தரும் என்றும் அவற்றை மறந்தால் துன்பம் நேரும் என்றும் நினைத்தல். இவைதவிர சமண சமயம் பத்து அறங்களைத் துறவிகள் கடைபிடிக்க வேண்டுமென்கிறது. பயாபதி மன்னன் அப்பத்து அறங்களையும் கைக்கொண்டவராக விளங்கினார்.

1. “உத்தமப் பொறை (உத்தம க்ஷமை)

2. உத்தமப் பணிவு (உத்தம மார்த்தவம்)

3. உத்தம நேர்மை (உத்தம ஆர்ஜவம்)

4. உத்தமத் தூய்மை (உத்தம சௌசிம்)

5. உத்தம வாய்மை (உத்தம சத்தியம்)

6. உத்தம அடக்கம் (உத்தம சம்யமம்)

7. உத்தமத் தவம் (உத்தமத் தவம்)

8. உத்தமத் துறவு (உத்தமத் துறவு)

9. உத்தமத் தியாகம் (உத்தம ஆதிஞ்சன்யம்)

10.உத்தமக் காமமின்மை (உத்தம பிரமசரியம்)” [21]

இங்கு உத்தமம் என்ற சொல் நன்மை என்ற பொருள் தரும் பதமாகும். பயாபதி மன்னன் கேவல ஞானத்தைப் (மகா நிர்வாணம்) பெற்றுத் தேவருலகை அடைந்தார். காப்பிய ஆசிரியர் மனித வாழ்க்கையை நெறிப்படுத்த துறவு நிலையைச் சமண நெறினின்று உலகிற்கு எடுத்துக்காட்டியுள்ளார். அதற்காக ஆசிரியர் பயாபதி எனும் மாந்தர்ப்படைப்பைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறியமுடிகிறது. பயாபதி மூலம் சமண அறங்கள் பல எடுத்துரைக்கப்பட்டமையின், இவர் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.

**சாரணர்**

அந்தரசாரிகளான சாரணர், இருவர் இருவராகச் செயல்படும் இயல்புடையவர்கள். இரதநூபுரச் சருக்கத்தில் சுவலனச்சடிமன்னனுக்கு அறவுரை வழங்க சகநந்தனன் – அபிநந்தனன் என்ற சாரணர் இருவர் படைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் மூலம் காப்பிய ஆசிரியர் இரத்தின திரயம் பற்றி விளக்கிச் செல்கின்றார். இவர்கள் அறமுரைக்கும் மாந்தர்களாவர். தீமையான காரியங்கள் பேதமையால் விளைகின்றன. ஊழ்வினையாலும் வினைப்பயனாலும் உயிரானது பல பிறப்புக்களை எடுத்துத் துன்புறுகிறது. இவற்றை செயலற்று வருந்துவதற்கு காரணமான கையறுவினைகள் என்று சாரணர் குறிப்பிடுகின்றனர். இக்கையறு வினைகளை அறுத்து மெய்யறிவுடன் வாழ வேண்டும். அதற்கு அருகப் பெருமானைச் சரண் அடைய வேண்டும். அவ்வாறு பணிந்து அருகனின் அருளால் நற்சார்பு கிடைக்கும் வரை பிறப்பு தொடர்ந்து நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

அருகனின் தாள்பற்றி ஞானாவரணீயம், தர்சனாவரணீயம், தேவதனீயம், மோகனீயம், வேதனீயம், மோகனீயம், ஆயுள், காமம், கோத்திரம், அந்தரராயம் ஆகிய கர்மங்களை விலக்கினால் மட்டும் இரத்தினதிரயம் என்று கூறப்படும் நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் ஆகியவற்றை உணரமுடியும்.

**நன்ஞானம்**

நன்ஞானமாவது பொருள்களின் தன்மையை உள்ளபடி உணர்தல், இஃது மதிஞானம், சுருதிஞானம், அவதிஞானம், மனப்பரியய ஞானம், கேவல ஞானம் என்று ஐந்தாக விரிகிறது.

**நற்காட்சி**

நற்காட்சியாவது உண்மைப் பொருள்களை ஐயந்திரிபறத் தெளிதல்.

**நல்லொழுக்கம்**

நல்லொழுக்கமானது சிறந்த செயல்களைக் கடைபிடித்தல் ஆகும். இது அணுவிரதமென்றும் மகாவிரதமென்றும் இருவகைப்படும். இல்லறத்தார் கடைபிடிக்க வேண்டிய கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை விழையாமை, பொருள் வரைதல் ஆகிய ஐந்தும் அணுவிரதமாகும். துறவறத்தார் கடைபிடிக்க வேண்டிய அகிம்சை, வாய்மை, கள்ளாமை, துறவு, அவாவறுத்தல் ஆகியவை மகாவிரதங்களாகும். இவற்றை விளக்க சாரணர் என்ற மாந்தர் படைப்பு இடம்பெறுகிறது. இவர்கள் இன்றியும் இக்கதை

நிகழும். இவர்களன்றி வேறுஒருவராலும் இரத்தினதிரயங்களைச் சொல்லமுடியும். எனினும் சாரணர் என்று கூறப்படுவர்களைப் பற்றிச்சமணம் வகுத்தச் செய்திகளைக் கூற ஆசிரியர் முற்பட்டுள்ளார்.

**சுச்சுதன்**

சுச்சுதன், சுவலனசடியின் அமைச்சன் ஆவார். சுயம்பிரபைக்கு மணமுடிக்க மந்திரசபை கூட்டப்படுகிறது. அப்பொழுது சுச்சுதன் அரச அறத்தையும் அமைச்சு அறத்தையும் எடுத்துரைக்கின்றார். எனவே இருவரும் அறம் கூறும் மாந்தராகக் கருதப்படுகின்றார்.

**அரசறம் – அமைச்சறம்**

- பகையை ஒழிப்பது அரசறமாகும். அதற்குத் துணையாக அமைச்சர்கள் விளங்கவேண்டும் என்பது அமைச்சறமாகும்.
- சூரியனால் சூரியகாந்தக்கல் ஒளிவிடுவது போல நல்லரசர்களால் அமைச்சர்களும் சிறப்பெய்துவர்.
- அரசர்கள் திறமையற்றவர்களாக இருந்தாலும் அமைச்சர் ஆட்சியைத் திறம்பட நடத்தவேண்டும். இதனை வள்ளுவர்,

  **‘அறிகொன்று அறியான் எனினும் உறுதி**

  **உழையிருந்தான் கூறல் கடன்’ (குறள் . 638)**

  என்று கூறுகின்றார்.
- சந்தனம் தேய்க்கப்பட்ட விடத்து மணம் பரப்பும். அதைப் போலவே அரசரும் கீழார்களால் இகழப்பட்டாலும் அதனை தன் பொறுமையால் வெல்ல வேண்டும்.
- அரசன் தீயவனாக இருந்தால் இவ்வுலக உயிர்கள் துன்பத்தை எய்தும்.
- அரசன் எவ்வழி குடிமக்கள் அவ்வழியாகையால் விழா, வழிபாடு ஆகியவற்றையும் செங்கோன்மையையும் அரசன் கடைபிடிக்கவேண்டிய அரசறமாகும்.
- அரசன் தீயவனாக இருந்தால் மக்கள் அந்நாட்டை விட்டு வெளியேறுவர். புலிவாயில் தப்பி சிங்கவாயில் அகப்பட்டவர்களாய் மக்கள் வேறுநாடு தேடிச் சென்றாலும் அல்லலுறுவர்.
- மன்னன் செங்கோன்மையோடு வாழ்ந்தால் மக்கள் விண்ணுலகையும் விரும்பார்.
- மக்கள் பல கூடி அருஞ்செயல் செய்தாலும் ஓர் அரசனுக்கு நிகராக மாட்டார்.

❖ அருந்தவம் புரிதலும் அரசாட்சி புரிதலும் செயற்கருஞ் செயலாகும். அரசாட்சி செய்வது அருந்தவத்திற்கு இணையாகப் பேசப்படுகிறது. கம்பரும்,

**‘கோளு மைம்பொறி யுங்குறை யப்பொருள்**

**நாளுங் கண்டு நடுக்குறு நோன்மையின்**

**ஆளு மவ்வர சேயர சன்னது**

**வாளின் மேல்வரு மாதவ மன்னனே’ (கம்பராமாயணம் . மந்தரை சூழ்ச்சி : 14)**

என்று கூறுகின்றார்.

❖ முறைப்படி அருந்தவம் செய்வோரும் முறைப்படி அரசாட்சி செய்வோரும் விண்ணுலக ஆட்சியைப் பெறுவர்.

❖ இத்தகைய அரசர்களுக்கு அமைச்சன் துணையாக நிற்க வேண்டும் என்று அமைச்சர் சுச்சுதன் மன்னரிடம் கூறுகின்றார். இதன் மூலம் அரசறமும் அமைச்சறமும் போதிக்கப்பட்டது.

“பாரதம், அரசர்க்குரிய தர்மங்களாகத் தானம் கொடுத்தல், யாகம் செய்வித்தல், வேதம் ஓதுவித்தல், மக்களைப் பாதுகாத்தல், திருடர்களை அடக்குதல், போர் செய்தல், மக்களைத் தம்தம் தருமத்தில் நிலைக்கச் செய்தல் ஆகியவற்றைக் கூறுகிறது. அறநெறி ஆட்சிக்குத் தடையாவன பற்றி மோகம், சூது, வேட்டையாடுதல், குடி, கடுஞ்சொல், கடும் தண்டனை, ஊதாரித்தனம் இந்த ஏழும் அரசனை வேரோடும் அழிப்பன என்று விதுரநீதி கூறுகின்றது.” [22] இக்கருத்துக்கள் திருக்குறளில் செங்கோன்மை, கொடுங்கோன்மை போன்ற அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளன. அமைச்சருக்குள்ள அறங்களை அமைச்சு எனும் அதிகாரம் எடுத்தியம்புகிறது. இப்பதிவுகளைச் சூளாமணியும் அரசறங்களாக அமைச்சறங்களாக எடுத்தியம்புகிறது. இவ்வறங்களை எடுத்தோதியமையின் சுச்சுதன் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.

**அறவழிவாழ்ந்த மாந்தர்கள்**

சூளாமணி காப்பியத்தில் திவிட்டன், சுயம்பிரபை ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.

**திவிட்டன்**

சூளாமணி காப்பியத்தில் திவிட்டனுக்கு பிறப்பு, இளமை, திருமணம், வீரதீரம் போன்றவை சுட்டப்படுவதால் அவனைக் கதைத்தலைவனாகக் கொள்ள வேண்டும். மேலும் ஆசிரியர் கண்ணனுக்கு நிகராக திவிட்டனைப் படைக்க முனைந்துள்ளார். மேலும் திவிட்டனைக் கண்ணனாகவே சித்தரித்துக் காட்டுகின்றார். ஆனால் பயாபதி மன்னனே

கதை முழுதும் நிறைந்து முடிக்கு ஒரு சூளாமணியாய் மாறுவதால் திவிட்டன் கதைத்தலைவன் என்ற இடத்தைப் பெற்றானில்லை. பயாபதியே அவ்விடம் பெறுகின்றான். ஆயினும் திவிட்டனது இயல்பும் விஞ்சையருக்குப் பணியாத வீரமும் அவனை ஒரு அறவழி வாழ்ந்த மாந்தராகப் படைத்துக்காட்டுகிறது.

**திவிட்டனின் வீரம்**

அச்சுவகண்டனுக்கு தந்தை பயாபதி திறை செலுத்தியதை அறிந்தபோது திவிட்டன் சினங்கொண்டான். வீரமிக்க அவனது உள்ளம் அதனை ஏற்க மறுத்தது. பயாபதி விதி என்று நினைத்து திறை செலுத்த முனைந்தபோது திவிட்டன் விதியை மதியால் வீரத்தால் வென்றான். மாயச் சிங்கத்தையும் தன் வீரத்தால் அடக்கி சுயம்பிரபை எனும் விஞ்சை மகளை அதன் மூலம் மணந்தான். மேலும் அரசு அறமாக,

**‘உரைசெய்நீ ளுலகின் வாழு முயிர்களுக் குறுகண் கண்டால்**
**வரைசெய்தோன் மைந்தர் வாழ்க்கை மதிக்கிலார் வனப்பின் மிக்கார்**
**திரைசெய்நீ ருலகங் காக்குஞ் செய்கைமேற் படைக்கப் பட்ட**
**அரசர்தம் புதல்வர்க் கையா வறம்பறி ததனி லுண்டோ’ (சூளா : 773)**

என்ற பாடல் குறிப்பிடப்படுகிறது. உலகில் வாழும் பிறவுயிர்கட்கு இடுக்கண் நேர்ந்துழி தம் வாழ்க்கையை மதித்தொதுங்காது, அவற்றின் இடுக்கண் களைந்து காக்க முற்படுவது வீரத்திற்கு அழகாகும். மேலும் அரசகுடிபிறந்தோர்க்கு இது தலைக்கடன் ஆகும். திவிட்டன் வருங்கால அரசனாகையால் இஃது அரச அறமாகக் கருதப்படுகிறது.

**யாக்கையின் பயன்**

பொதுவாக சமயங்கள் யாக்கை நிலையாமையைப் பற்றிப் பேசும் இயல்புடையன. ஆனால் சூளாமணியின் ஆசிரியர் யாக்கையின் பயன் பற்றியும் பேசுகின்றார். திவிட்டன் எனும் படைப்பின் மூலம் யாக்கையின் பயன்பற்றிக் கூறுகின்றார்.

கற்றவர்கள், துறவியர், ஆதரவற்றோர் (களைகணில்லார்) ஏழைகள், அந்தணர்கள் போன்றோர்களுக்கும் துன்பம் நேர்ந்தவர்களுக்கும் உதவுவது யாக்கையின் பயன் என்று சூளாமணி கூறுகின்றது. மேலும் இசைபட வாழ்ந்த உடலே அழிவில்லாதது என்றும் மற்றையது பேடியின் அழகை ஒக்கும் என்றும் கூறப்படுகிறது. ஒரு மனிதனுக்கு ஊனுடல், புகழுடல் என்று இருவகை உடல்கள் உண்டு. ஊனுடல் ஊழ்வினையால் வந்து அழியும் தன்மையுடையது. புகழுடல் தானே தேடிவருவதும் அழியாததுமாகும். திவிட்டன் அத்தகைய புகழுடைலைப் பெற்றதாக அண்ணனாகிய விசயன் பாராட்டுகின்றான்.

திவிட்டனின் யாக்கை மக்களுக்கு உதவும் பொருட்டு வடிவெடுத்தமையும் வீரமும் சூளாமணி ஆசிரியரால் கூறப்பட்டது. எனினும் தன்னேரில்லாத் தலைமை திவிட்டனிடம் காணப்படவில்லை என்றே கூறுதல் வேண்டும். அவ்வாறு படைக்க முனைந்த ஆசிரியர் திவிட்டனை ஓர் அறமாந்தராக மட்டுமே படைத்தளித்து தான் எண்ணிய காரியத்தில் தோல்வியடைந்ததாக கருதத் தோன்றுகிறது. நிமித்திகன் சதவிந்து, திவிட்டன் பற்றிக் கூறுமிடத்து உலகம் பற்றியும், உலகத்தில் உள்ளவை பற்றியும் காலங்கள் பற்றியும் கூறுகின்றார். மேலும் அருகக் கடவுள் தோன்றியது பற்றியும், திவிட்டன் என்னும் அரசன் தோன்றி உலகத்தை ஒருகுடையின் கீழ் ஆள்வான் என்றும் கூறுகின்றார். இவ்விடத்து,

**'என்முதல் லிருபத்தீ ருவர் நாதர்கள்**
**நின்முத லீரறு வகையர் நேமியர்**
**மன்முதல் பலவர்கே சவர்கண் மாற்றவர்**
**தொன்முத லவர்தொகை யொன்ப தொன்பதே' (சூளா : 400)**

என்று கூறப்பட்டுள்ளது. அஃதாவது இருபத்து நான்கு தீர்த்தங்கரரும், பன்னிரு சக்கரவர்த்திகளும், ஒன்பது பலதேவரும், ஒன்பது வாசுதேவரும், ஒன்பது பிரதிவாசுதேவரும் (வாசுதேவரின் பகைவர்) தோன்றுவர் என்று கூறப்பட்டுள்ளது. திவிட்டன் முதல் வாசுதேவராகவும், விசயன் முதல் பலதேவராகவும், அச்சுவகண்டன் முதல் பிரதிவாசுதேவராகவும் படைக்கப்பட்டுள்ளனர். இதன் மூலம் சமணத்தின் தீர்த்தங்கரர் நேமிநாதர், பலராமர், வாசுதேவர் ஆகியோரின் வரலாறும் எண்ணிக்கையும் கூறப்பட்டன. மேலும் திவிட்டன் முதல் வாசுதேவர் என்ற பெருமைக்குரியனாகவும் படைக்கப்படுகின்றான். இவன் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றான். ஏனெனில் யாக்கையைப் பயனுள்ள வழியில் பயன்படுத்தி மக்களுக்கு உதவுகின்றான்.

**சுயம்பிரபை**

காப்பியத் தலைவி எனப் போற்றத்தக்கவள் சுயம்பிரபை ஆவாள். இவள் இரதநூபுரத்து மன்னன் சுவலனச்சடியின் மகளாவாள். திவிட்டனின் மனைவியுமாள். பெண்மை நலமும் அழகும் மிக்கவளாவாள். இவள் அறவழியில் வாழ்ந்த மாந்தராகின்றாள்.

**நோன்பு நோற்றல்**

சுயம்பிரபை, சாரணர்களான சகநந்தனனும் அபிநந்தனனும் கூறிய அறவுரைகளைக் கேட்டு திருமணத்திற்கு முன்பே நோன்பு நோற்று புண்ணியம்

தேடிக்கொண்டவள். இரதநூபுரச் சருக்கத்தில் சக்கரவாள நோன்பினைச் சுயம்பிரபை கடைபிடித்ததாகக் கூறப்படுகிறது. ‘‘பங்குனித்திங்களின் உத்தர நாளிற்கு முந்தின நாளில் ஜிநாலயத்திற்குச் சென்று, கடவுளையும் ஆகமத்தையும் வணங்கி, ஆசாரியரைப் போற்றி வேண்டி நோன்பு பெறுதல் வேண்டும். உத்தரநாளில் உண்பன, தின்பன, பருகுவன, நக்குவனவாகிய எல்லாவகையான உணவுகளையும் நீக்கி நோன்பிருத்தல் வேண்டும். அந்தத் திங்களில் இந்த நோன்பிற்குப் **பஞ்சகல்யாணம்** என்று பெயர். இந்த ஒரு நாள் நோன்பைக் கடைபிடித்தால் எண்ணாயிரம் நோன்பின் பயனுண்டாகும். இப்படியே சித்திரை முதலிய திங்கள்தோறும் நோன்பிருத்தல் வேண்டும்.

| | மாதம் | நட்சத்திரம் | பெயர் | பலன் |
|---|---|---|---|---|
| 1. | சித்திரை | சித்திரை | அட்டமகாப்ராதி ஹார்யவிபூதி | 1000 |
| 2. | வைகாசி | விசாகம் | ஜிநதர்சனம் | 1200 |
| 3. | ஆனி | கேட்டை | சதுர்விம்சதி தீர்த்தகரர் | 1400 |
| 4. | ஆடி | பூராடம் | தர்மஸந்ததி வர்த்தநம் | 1600 |
| 5. | ஆவணி | திருவோணம் | நந்த்யா வர்த்தம் | 1800 |
| 6. | புரட்டாசி | பூரட்டாதி | ஆர்யா வர்த்தம் | 40000 |
| 7. | ஐப்பசி | அசுவினி | சதுர்விம்சதி ஸ்தவநம் | 60000 |
| 8. | கார்த்திகை | கிருத்திகை | அலங்காரம் | 78000 |
| 9. | மார்கழி | மிருகசீரிடம் | புத்ரவர்த்தநம் | 108000 |
| 10. | தை | புஷ்ய | பஞ்சாலங்காரம் | 3602000 |
| 11. | மாசி | மகன் | தநவர்த்தநம் | 6000000 |

என்று பொ.வே.சோமசுந்தரனார் கூறுகின்றார்.’’[23] இவ்வாறு மற்றைய திங்கள்களும் நட்சத்திரமும் நோன்பின் பெயரும் அதனால் உண்டாகும் பயனும் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன. மேற்குறிப்பிட்ட நட்சத்திரங்கள் பௌர்ணமி திதியோடு கூடியிருக்க வேண்டும் என்பதும் மூன்று வருடங்கள் இந்நோன்பினை நோற்க வேண்டும் என்றும் கூறப்படுகிறது. இடையில் இடையூறு ஏற்பட்டால் பிராயச்சித்தம் எனப்படும் கழுவாய் தேடல் வேண்டும். இந்நோன்பு தவறியவர் ஆண் என்றால் ஆசாரியாரிடத்தும், பெண் என்றால் தாய், தந்தை, கணவன், அண்ணன்-தம்பி இவர்களில் ஒருவரிடத்தும் கழுவாய் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு நோற்கும் போது அருகக் கடவுளுக்கு நூற்றெட்டு கலசங்களில் திருமுழுக்காட்டி, பார்சவ பட்டாரகர்க்கு பூசை செய்து, கௌதம கணதரருடை பெயரை உச்சரித்து அர்ச்சனை பண்ணவேண்டும். நோற்பித்த ஆசார்யருக்கு உணவும், ஆர்யாங்கனைகளுக்கும் பிரம்மசாரிகளுக்கும் ஆடையும் மற்றவர்களுக்கு இயன்ற அளவு தானங்களும் கொடுக்க வேண்டும். நோம்பு நாளில் தேவபூசை, புத்தக பூசை, புராணிக பூசை, ஜாவக பூசை, கதாசிரவணம், குரு பூசை, தானம் முதலியவற்றைச் செய்ய

வேண்டும். இவ்வாறு நோற்றவர்கள் இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் இன்பங்கள் பெறுவர். இந்நோன்பு நோற்று இந்திராணி, சுயம்பிரபை, குந்தி, சீதாதேவி, சீமதி ஆகியோர் விரும்பியதை அடைந்ததாகச் சமண நூல்கள் குறிப்பிடுகின்றன.

**அருகவழிபாடு**

கல்யாணச் சருக்கத்தில் சுயம்பிரபை அருகனை வழிபட்டதாகச் குறிப்பிடப்பட்டுள்ளது. குறிப்பாக இசைபாடி பரவியதாக ஆசிரியர் படைத்துள்ளார். யசோதர காவியம் இசை காமத்தை மிகுவிக்கும் என்று இழித்துக் கூறினாலும் சூளாமணி அக்கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. “பகவான் விருஷபதேவர் முதல் பகவான் மகாவீரர் வரையிலுள்ள தீர்த்தங்கரர்களின் அறவுரை மண்டபமாகிய சமவசரணத்தில் இந்திரன் தன் மனைவி இந்திராணியுடன் இசையோடு துதிபாடி நடனம் செய்து வழிபட்டதாகப் புராணங்களில் விளக்கப்பட்டுள்ளன.”[24] அது போலவே சுயம்பிரபையும் இசையோடு வழிபட்டாள். இவள் சமண அறங்களின் படி வாழ்ந்தமையின் அறவழியில் வாழ்ந்த மாந்தராகின்றாள்.

## நீலகேசி

குண்டலகேசி என்ற பௌத்த தத்துவ நூலுக்கு எதிராகப் படைக்கப்பட்டது நீலகேசி எனும் சமணத் தத்துவ நூலாகும். நீலகேசி காப்பியம் தருமவுரைச் சருக்கம், குண்டலகேசி வாதச் சருக்கம், அருக்கசந்திர வாதச் சருக்கம், மொக்கல வாதச் சருக்கம், புத்த வாதச்சருக்கம், ஆசிவக வாதச் சருக்கம், சாங்கிய வாதச் சருக்கம், வைசேடிக வாதச் சருக்கம், வேத வாதச் சருக்கம், பூதவாதச் சருக்கம் என பத்துச் சருக்கங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. நீலகேசி முழுமையும் சமணத் தத்துவங்களை விளக்குவதாக அமைகிறது. இந்நூல் நாடகப் போக்கில் அமைந்துள்ளது. இதனை நாடகக் காப்பியம் என்று கூறஇயலும். ஏனெனில் கதை சொல்லும் போக்கை விட கூற்று நிலைகள் அதிகமாக உள்ளன.

நீலகேசி, குண்டலகேசி, பிங்களகேசி என கேசி என்ற சொல்லில் முடியும் நூல்களெல்லாம் சமயவாதத்தைக் காப்பியமாகப் பாடியவையாகும். நீலகேசியின் பெருமை அதன் உரையசிரியர் சமயதிவாகர வாமான முனிவரால் அறியப்படுகிறது. இவர் மேருமந்திர புராணத்தின் ஆசிரியராவார். இவருக்கு மல்லி சேனாசாரியார் என்ற பெயரும் உண்டும். இவர் 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். அதற்கு முன்பே நீலகேசி தோன்றிவிட்டது. “தேவாரத்தில் குறிப்பிடப்படாத ஆசீவகமதம் இந்நூலில் குறிப்பிடப்படுவதால், இந்நூல் தேவார காலத்துக்கு முன்னையது என்றும் தேவர் என்ற

சிறப்புப் பெயர் பெற்ற திருவள்ளுவரின் சீடரே இந்த நூலாசிரியர் ஆகலாம் என்றும் திரு.சக்கரவர்த்தி நயினார் கருதுகின்றார்.''[25] இந்நூல் மணிமேகலைக்கு பின்தோன்றியதாகவும் 8, 9 ஆம் நூற்றாண்டிற்கு முன்னையதாகவும் கருதப்படுகிறது. நீலகேசி என்ற பெயரும் பழையனூர் நீலி என்ற பெயரும் ஒருவரைச் சுட்டுவதாகக் குறிப்பிடுவர்."தென்றிசை நீலகேசி என்பதற்குப் பழைய வுரையசிரியர் பழையனூர் நீலகேசி என்று குறிப்புரை வரைந்துள்ளார்.''[26] திருஞானசம்பந்தர் அருளிய முதல் திருமுறையிலும் பழையனூர் நீலி பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது.

**'துஞ்சவருவாருந் தொழுவிப்போரும் வழுவிப்போய்**
**நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்**
**வஞ்சப்படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்**
**டஞ்சும் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே'(தேவாரம். திருவாலங்காடு:481)**

என்ற திருப்பதிகத்தில் நீலி பற்றிய கதை கூறப்படுகிறது. ஒரு பார்ப்பனன் மனைவியாக நீலி வாழ்ந்து வந்தாள். பார்ப்பனன் பரத்தை ஒழுக்கத்தால் பொருள் தொலைத்து வறியனாயினான். பின்னர் நீலியை அடைந்து அவளோடு வாழ்வதாகப் பொய்யுரைத்து வேற்றுநாடு அழைத்துச் செல்லும் வழியில் அவளது அணிகலன்களைக் கவர்ந்து கொண்டு அவளையும் அவளது குழந்தையையும் கிணற்றில் தள்ளிக்கொன்றான்.

மறுபிறப்பில் பார்ப்பனன் வணிகனாகத் தோன்றினான். நீலி பேயாக உழன்று திரிந்தனள். வணிகன் பழையனூருக்கு வணிகம் பொருட்டு செல்லுங்காள் நீலி குழந்தையோடு அவன் மனைவியாக அவனைத் தொடர்ந்தாள். வணிகன் பேயை உணர்ந்து பழையனூர் வேளாண் மக்களிடம் தன் உயிரைக் காக்கும்படி வேண்டினான். ஆனால் அவ்வெழுபது வேளாண் மக்களும் நீலியின் கண்ணீருக்கு இரங்கி வணிகனை அவளோடு சேர்த்து வைத்தனர். அன்றிரவு அப்பேய் அவ்வணிகனைக் கொன்று பழிதீர்த்தது. தங்களின் தவறான தீர்ப்புக்காக அவ்வெழுபது வேளாண்மக்களும் உயிர் துறந்தனர். இதன் காரணமாகத்தான் தமிழகத்தில் பொய்யான அழுகைக்கு 'நீலிக் கண்ணீர் வடித்தல்' என்ற சொல் வழக்கு உள்ளது. பேய் என்ற காரணத்தினால் இந்நீலியே நீலகேசி எனக் கூறுகின்றனர். இக்கதை ஒரோவழி சிலப்பதிகாரக் கதையோடு ஒத்திசைகின்றது. பார்ப்பனனும் நீலியும் கோவலனையும் கண்ணகியையும் ஒத்திருக்கின்றனர். பரத்தமை ஒழுக்கம், வேற்றுநாடு செல்வது வரை கதை ஒப்புமை உடையது. அதன் பின் பேயாதல் என்ற அமைப்பு மாறுபடுகிறது.

அக்காலக்கட்டத்திய சமயங்களான ஆசீவகம், வேதவாதம், பூதவாதம், சாங்கியம், வைசேடிகம் போன்றவற்றைப் பற்றி அறிய மணிமேகலையும் நீலகேசியும் உதவி புரிகின்றன. இவை தனித்த ஆய்வுக்குரியன என்பதனால் விரிவஞ்சி விடப்படுகிறது.

நீலகேசி காப்பியமானது சமணத்தைத் தவிர்ந்த மற்ற மதங்களை அறமற்றவைகளாகக் கூறுகிறது. குறிப்பாக புத்த மதத்தை ஊன்உண்ணல், கொலை, களவு, சிற்றின்பம் துய்த்தல் என்ற நிலைகளில் அறமற்றதாகக் காட்டியுள்ளது. இஃது அக்கால சமயப்பூசலைக் காட்டுகிறது. பௌத்தம், சமுதாயத்தை நெகிழ்வுத் தன்மையோடு நோக்கியதன் விளைவாகவே பல குற்றங்கள் அதனிடம் காணப்படுகிறது. சமணம் அத்தகைய நெகிழ்வுத் தன்மை இல்லாமையால் தான் இன்று நிலைபெறாது அழிந்து போனது. பௌத்தம் உலகில் நிலைத்திருப்பதற்கும் இந்நெகிழ்வுத் தன்மையே காரணமாகிறது. நீலகேசி காப்பியமானது, சமுதாயத்தில் உள்ள சமயச் சீர்கேடுகளைக் குறிப்பாகத் துறவிகளின் ஒழுக்கக் கேடுகளை எடுத்துக்காட்டி களையப் படைக்கப்பட்டதாகும்.

**அறமுரைக்கும் மாந்தர்கள்**

நீலகேசி காப்பியத்தில் முனிச்சந்திரன், புத்தன், குண்டலகேசி ஆகியோர் அறமுரைக்கும் மாந்தர்கள் ஆவர்.

**முனிச்சந்திரன்**

முனிச்சந்திரன் கதைத்தலைவியான நீலகேசிக்கு அறமுரைக்கும் ஆசானாவார். இவர் தருமவுரைச் சருக்கத்தில் இடம் பெற்று பேயான நீலகேசிக்கு தருமவுரைகளை வழங்கி, நீலகேசி சமணத்தத்துவங்களைப் பரப்புவதற்குத் தூண்டுகோலாக விளங்குகின்றார்.

**முனிச்சந்திரன் அறிமுகம்**

பாஞ்சால நாட்டில் புண்டரவருத்தனம் எனும் நகரத்தின் கண் பாலாலையம் எனும் சுடுகாடு அமைந்துள்ளது. அதனை நான்கு மாதகாலமாக முனிச்சந்திரன் எனும் சமணத்துறவி உறைவிடமாகக் கொண்டிருந்தார். அவர் பொறுமையில் பூமியையும், வலிமையில் மேருவையும் ஒத்திருந்ததாக நீலகேசி, 'பொறையு மாற்றலும் பூமியு மேருவு மனையான்' (நீலகேசி.33) என்று கூறுகின்றது. தியானத்தால் மனதை அடக்கி ஆள்பவராகவும், அழிவற்ற மெய்ப்பொருளை அறிந்தவராகவும் அறிமுகம் செய்யப்படுகின்றார். மேலும் ஐவகையான அத்தி காயங்களையும் காண்டல் முதலிய அளவைகளால் ஆராய்ந்தறிந்து ஐயம் திரிபற உணர்ந்தவரும், குப்தி, சமிதி முதலான குணங்களான் மிகவும் பெருமையுடையவரும் செய்தற்கரிய பன்னிரு வகைப்பட்ட

தவங்களையும் மேற்கொண்டு பிறவியினது தொடர்ச்சியினை அறுக்கின்ற வீடு பேற்றினையுடையவருமாக முனிச்சந்திரன் படைக்கப்பட்டுள்ளார். இதனை,

**‘அத்தி காயங்க ளனவைக ளாலளந் தறிவான்**

**குத்தி யாதிய குணங்களிற் பெரியவனரிய**

**பத்தின் மேலிரு தவத்தினிற் பவத்தொட றறுக்கும்**

**முத்தி யான்முனிச் சந்திர னெனும் பெயர் முனிவன்’ (நீல . தரும : 34)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதில் அத்திகாயம், குப்தி, சமிதி, தவம் ஆகியவை ஆராயத்தக்கன. ‘‘ஜைன ஆகமங்களில் கூறப்படும் ஐந்து அத்திகாயம், ஆறு திரவியம், ஏழு தத்துவம், ஒன்பது பதார்த்தம், ஐந்து மகாவிரதங்கள், குப்தி, சமிதி, பத்துத்தர்மங்கள் பன்னிரண்டு சிந்தனைகள் ஆகிய இவற்றையெல்லாம் ஐயமறக் கற்றுணர்ந்து ஒழுக்கம் காப்பவர் உபாத்தியாயர்’’[27] என ஸ்ரீசந்திரன் கூறுகின்றார். இதனடிப்படையில் நோக்க முனிச்சந்திரனும் ஓர் உபாத்தியாயர் ஆவார். உபாத்தியாயர் என்பது ஆசிரிய நிலையைச் சுட்டுகிறது. ஆசிரிய நிலையில் இருந்து நீலகேசிக்கு அறம் போதித்துள்ளார்.

**அத்திகாயம்**

அத்திகாயம் ஐவகைப்படும். அவை, ‘‘சீவாகத்திகாயம், ஆசீவாத்திகாயம், தர்மாத்திகாயம், அதர்மாத்திகாயம், ஆகாசாத்திகாயம்’’[28] என்பன. இதில் சீவாத்திகாயம் என்பது உடலில் உயிர் இருக்கும் நிலையையும், ஆசீவாத்திகாயம் என்பது உடலில் உயிரற்றிருக்கும் நிலையையும் தர்மாத்திகாயம் என்பது உடலால் செய்யப்படும் அறச்செயல்களையும் அதர்மாத்திகாயம் என்பது உடலால் செய்யப்படும் அறமற்ற செயல்களையும், ஆகாசாத்திகாயம் என்பது உடல் நிலைத்து உயிர் வான்மண்டலத்தில் கலத்தலையும் குறிக்கும்.

**குத்தி : (குற்றங்கள்)**

குத்தி என்பது சமணர்களால் குப்தி எனச் சொல்லப்பட்டது. குப்தி என்பது குற்றங்களைக் குறித்து நின்றது. இஃது மூன்று வகைப்படும். அவை,

மனோகுப்தி – மனதால் நிகழும் குற்றங்கள்

வாக்குப்தி – சொல்லால் நிகழும் குற்றங்கள்

காயகுப்தி – உடலால் நிகழும் குற்றங்கள்

**சமிதி : (அடக்கம்)**

சமிதி எனப்படும் அடக்கம் ஐந்து வகைப்படும். அவை ஈரியா சமிதி, பாடணா சமிதி, ஏடணாசமிதி, ஆதான நிக்கேப சமிதி, உச்சற்க சமிதி என்பனவாகும்.

| | | |
|---|---|---|
| ஈரியா சமிதி | – | பயணத்தின் போது உயிர் கொல்லாமை |
| பாடணாசமிதி | – | நாவடக்கம் (பேசும்முறை) |
| ஏடணாசமிதி | – | உணவேற்கும் முறை (உணவடக்கம்) |
| ஆதான நிக்கேபசமிதி | – | பயன்பாட்டுப் பொருட்கள் பயன்படுத்தும் முறை |
| உச்சற்கசமிதி | – | கழிவு வெளியேற்று முறை (கழிவடக்கம்) |

ஏடணாசமிதியில் நாற்பத்தாறு குற்றங்கள் நீங்கிய உணவைச் சமணமுனிவர்கள் ஏற்பர். அக்குற்றங்கள் முதல் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

**பன்னிரு தவங்கள்**

அகத்தவம் ஆறும், புறத்தவம் ஆறுமாகப் பன்னிரு தவங்கள் உத்தம தவத்தின் கூறுகளாகக் கூறப்பட்டுள்ளன. அனசனம், ஆவமோதரியம், விருத்தி பரிசங்யானம், சுவைபரித்தியாகம், விவிக்த சய்யா, காயக்லேசம் ஆகியவை புறத்தவமாகவும் ; பிராயச்சித்தம், விநயம், வையாவிருத்தியம், ஸ்வாத்யாயம், வியுத்ஸர்க்கம், தியானம் ஆகியவை அகத்தவமாகவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**புறத்தவங்கள்**

| | | |
|---|---|---|
| அனசனம் | – | உணவைத்துறத்தல் |
| ஆவமோதரியம் | – | உணவைக் குறைத்தல் |
| விருத்தி பரிசங்யானம் | – | உணவு ஏற்பதில், கொள்வதில் வரைமுறை |
| சுவைபரித்தியாகம் | – | சுவையைத் தியாகம் செய்தல் |
| விவக்த சய்யா | – | காட்டில் தங்குதல் |
| காயக்லேசம் | – | எல்லாக்காலங்களிலும் தவமிருத்தல். |

**அகத்தவங்கள்**

| | | |
|---|---|---|
| பிராயச்சித்தம் | – | கழுவாய் |
| விநயம் | – | மும்மணியிடத்து பணிவு (நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம்) |
| வையாவிருந்தியம் | – | பிறர் துன்பம் களைதல் |
| ஸ்வாத்யாம் | – | சாத்திரம் படித்தலும், கற்பித்தலும் |
| வியுத்ஸர்க்கம் | – | உயிர்மீது பற்றின்மை |
| தியானம் | – | தியானம் செய்தல் |

“நால்வகைத் தியானங்களில் ஆர்த்த தியானம், ரௌத்திர தியானம் நீக்கி தர்மத்தியானம், சுக்கிலதியானம் மேற்கொள்ளல் வேண்டும்”[29] என ஶ்ரீசந்திரன் கூறுவார். மேற்கூறப்பட்ட செயல் குணங்கள் உடையவராக முனிச்சந்திரன் படைக்கப்பட்டுள்ளார். இச்செயல் குணங்களால் பவத்தொடரறுக்கும் பேறு வாய்ந்தவராக உள்ளார். பவம் என்பது பிறவியைக் குறித்தது. பிறவியை அறுப்போர் வீடுபேற்றை அடைவர். முனிச்சந்திரன் எனும் ஆசிரியர் (உபாத்தியாயர்) வீடுபேற்றை அடையும் நிலையில் படைக்கப்பட்டுள்ளார்.

**கொல்லாமையறம்**

முனிச்சந்திரன் உறைந்த, பாலாலையம் சுடுகாட்டில் வாழ்ந்த பிடாரிக்கு ஆடு ஒன்றினை பலியிட மக்கள் சிலர் வந்தனர். அதனைத் தடுத்த முனிவர், காரணம் வினவ, குழந்தைப் பேறு கொடுத்த நன்றிக்காக நேர்த்திக்கடன் செலுத்த வந்தமையை அம்மக்கள் விளக்கினர். அதனை செவிமடுத்த முனிவர், ‘குழந்தையின் உடலும் உயிரும் கடவுள் கொடுத்தன்று. அக்கடவுள் உருவே உடலும் உயிரும் அற்ற மண் உருதான். இவ்வுயிர்கள் நல்வினைத் தீவினைப் பயனால் தோன்றியது. எனவே உயிர்ப்பலியிடாதீர்’(நீல.தரு:37) என்று வற்புறுத்துக்கின்றார்.“சமண சமயத் தத்துவ நூல்களில் கடவுளைப் பற்றிக் கூறவில்லை.”[30] எனவே தான் முனிச்சந்திரன் உடலும் உயிரும் அற்றது கடவுள் என்கிறார். இங்கு அருகர் கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்டாலும் அவரும் மனிதனின் மேம்பட்ட நிலையாகக் கருதத்தக்கவர். மனிதம், கடவுள் நிலைக்கு உயர்வது சமணத் தத்துவமாகும்.

உயிர்ப்பலியைத் தடுக்க முனைந்த முனிச்சந்திரன் கொல்லாமையறத்தை வலியுறுத்துகின்றார். உயிர்பலிக்கு மாற்றாக மண்ணுரு செய்து நேர்ச்சை செய்யும்படி கூறுகின்றார்.

**‘மாறுகோ நிலைமண்ணான் மறியுருசெய் தீர்ந்தக்காற்**

**பாறீனீர்க் கும்மவர்க்கும் பழிபாவ மென்றிலையே’ (நீல . தரும் : 38)**

என்ற அடிக்கு பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள் மண்ணுரு செய்து அவற்றை அறுத்து பலியிட்டால் பாவமில்லை என்று உரை எழுதுகின்றார். சமணம் உயிர்ப்பலியிடுதலை முழுமையாகத் களைய முனைகிறது. அதன் பொருட்டு யசோதர காவியத்தில் மாக்கோழியை பலியிட்ட போது கோழி உயிர்பெற்று துடிதுடித்ததாய் எழுதப்பட்டது. ஆங்கு மாக்கோழிப்பலி என்பது மனமாசினைக் குறித்தது. மனதால் மாசுபடாதிருத்தலையே சமணம் வலியுறுத்துகிறது. இவ்விடத்தும் அக்கொள்கையைப் பொருத்திப் பார்த்தல் வேண்டும். அவ்வாறெனின் மண்ணுரு ஆட்டினை பலியிடுவதாகக் கருதக் கூடாது.

மண்ணுரு ஆடு நேர்ச்சை செய்யப்பட்டதாகக் கருதவேண்டும். ஈர்ந்த → நேர்ந்த → நேர்ச்சை → நேர்த்திகடன் (பராவுக்கடன்) எனப் பொருள் கொள்ள வேண்டும். எனவே முனிச்சந்திரன், ஆட்டினை பலியிடாது யானை, யாடு போன்றே மண்ணுருக்களை கடவுளுக்குப் படைக்கும்படி கூறியதாகக் கொள்ள இடமேற்படுகிறது. இதனால் கொல்லாமையறம் முனிச்சந்திர முனிவரால் கூறப்பட்டமையை அறியமுடிகிறது. மேலும் அவர்களுக்கு கொல்லாமை, பொய்யாமை, பிறர்மனை நயவாமை, அவாவின்மை போன்ற அறங்களையும் ஓதுவித்து வீடுபேறடைய வழிகாட்டுகின்றார்.

**அறமுரைத்தல்**

முனிச்சந்திரர், நீலகேசி என்ற பேய்ப்பெண்ணிற்கு அறமுரைக்கும் முகத்தான் சமணத்தத்துவங்கள் கூறப்படுகின்றன. நீலகேசி கூறும் இச்சமணத் தத்துவங்களைச் சீவகசிந்தாமணி, சூளாமணி ஆகியவற்றிலும் காண இயலுகிறது. சமணம் பிறப்பை நரககதி, விலங்குகதி, மக்கள் கதி, தேவகதி எனப் பகுத்துக் கூறுகிறது. இதனை விளக்கும் முகமாக முனிச்சந்திரன் நீலகேசிக்கு அறமுரைக்கின்றார். இந்நால்வகைப் பிரிவின் உட்பிரிவுகள் வரைபடம் மூலம் விளக்கப்படுகின்றன.




**நரககதி (நரகப்பிறப்பு)**

நரககதியின் ஏழ்வகைப் பிரிவு இருளிருளில் தொடங்கி மணியில் முடிவடைகிறது. இப்பகுப்பு பூமியின் அடியிலிருந்து மேற்பரப்பு வரையில் உள்ள பொருட்களை அடிப்படையாகக் கொண்டது. இப்பகுப்பு அறிவியல் அடிப்படையானது. பூமியின் மேற்பரப்பில் மணி கிடைக்கும். மணியை அடுத்து பூமியில் பரற்கற்களே நிறைந்து

உள்ளன. பரற்கற்களை அடுத்து பூமியின் கீழே சென்றால் மணலும், அதனையடுத்து சேறும், சேற்றினையடுத்து புகைமண்டலமும் (வாயு), புகையையடுத்து இருளும், இருளையடுத்து அடர்ந்த இருளுமாக பூமியின் கீழ்ப்பகுதி அமைகிறது. இதனையே நரககதி என்பது கீழ்மேலாக இருளிருள் → இருள் → புகை (வாயு) → சேறு → மணல் → பரல் → மணி என்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**நரககதி துன்பங்கள்**

நெருப்பிலிடுதல், புகையிலிடுதல், கூறிடுதல், அடித்தல், இருளில் தள்ளல், எண்ணெயிலிடல், கழுவேற்றுதல் போன்ற நரக துன்பங்கள் யாசோதர காவியத்தில் அமிர்தமதிக்கு கூறப்பட்டது போலே முனிச்சந்திரரும் நீலகேசிக்கு அறமுரைத்தலின் போது எடுத்துக்காட்டுகின்றார்.

**விலங்குகதி (விலங்குப் பிறப்பு)**

நரககதியை அடுத்த விலங்கு கதி ஓரறிவுயிர் முதலா ஐயறிவுயிர் ஈறாக ஐந்து பகுப்புடையது. இஃது தொல்காப்பிய நூற்பாவோடு ஒப்பு நோக்கத்தக்கது. இதனாலேயே தொல்காப்பியரைச் சமணர் என்று குறிப்பிடுகின்றனர். சமணம் விலங்குகதியை நிற்பன இயங்குவன என இருவகையாகப் பகுகின்றது. இந்தப் பகுப்பின் அடிப்படையில் நோக்க நிற்பனவற்றில் ஓரறிவுயிரும், இயங்குவனவற்றில் மற்றையவையும் அடங்கும் என்பதை அறியமுடிகிறது.

| பகுப்புமுறை | தொல்காப்பியம் | நீலகேசி |
|---|---|---|
| உயிர்பகுப்பு | அறுவகை | ஐவகை |
| மனிதகதி | தனிப்பகுப்பு இல்லை | தனிப்பகுப்பு உண்டு |
| ஓரறிவுயிர் | புல், மரம் | மரம், புல், செடி, கொடி, புதல் |
| ஈறறிவுயிர் | நந்து, முரள் | நந்து, முரள் |
| மூவறிவுயிர் | சிதல், எறும்பு | உண்ணி, மூட்டைப்பூச்சி, எறும்பு, தேள் |
| நாலறிவுயிர் | நண்டு, தும்பி | வண்டு, தேனீ |
| ஐயறிவுயிர் | மா, புள் | பறப்பன, நடப்பன, தவழ்வன, ஊர்வன, |
| நிற்பன | பகுப்பு கூறப்படவில்லை | ஓரறிவுடையன |
| இயங்குவன | பகுப்பு கூறப்படவில்லை | இரண்டு முதலா ஐயறிவுடையன |

**விலங்குகதித் துன்பங்கள்**

விலங்குகள், மற்றைய வலிய விலங்குகளைக் கண்டு அஞ்சி நடுங்குதலும், மழையாலும், நெருப்பாலும் அழிந்து படுதலும், படைகலன்களால் புண்படுதலும், ஊனின் காரணமாக வேட்டையாடப்படுதலும், வலைகளில் சிக்கி மடிதலும், வைதீக சமயத்தாரின் யாகங்களில் பலியிடப்படலும், பூதங்கட்கு பலியிடப்படலும், மருந்துக்காகக் கொல்லப்படுதலும் ஆகிய துன்பங்களை விலங்குகதியில் அடைதல் வேண்டும்.

**மக்கள் கதி: (மக்கட் பிறப்பு)**

மக்கள் கதி ஐவகையாகச் சுட்டப்பட்டள்ளது. நல்லவர் – சுமனுடர், தீயவர் – துர்மனுடர், திப்பியர் – திவ்யமனுடர், ஒப்பில்மானுடர் – குமனுடர், மனிதர் – பிரகிருதி மனுடர் என்று சமணம் பிரித்துக் காட்டுகிறது. இதில் நல்லவர் என்போர் போகபூமியில் வாழ்வோராவர். ‘‘போகபூமி என்பது சம்புத் தீவும் தாதகீடண்டத் தீவும் புட்கரத்தீவிற்பாதியும்’’[31] என்று உரையாசிரியர் பொ.வே.சோமசுந்தரனார் அவர்கள் சூளாமணி, நீலகேசி உரைகளில் குறிப்பிட்டுள்ளார். எல்லா வளமும் நிறைந்த பகுதியே போகபூமி என்று குறிப்பிடப்படுகிறது. போகபூமியில் பிறப்போர் 49 நாள் அகவையில் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கி இளமைப் பருவம் எய்தி மூன்று பல்லகாலம் இளமைபருவமே நிலைக்கப் பெற்று இன்பம் நுகர்வர். தொல்காப்பியம் கூறும், ஒன்றே வேறே பாலது ஆணையின் கிழவனும் கிழத்தியும் காண்பதும், இயற்கைப் புணர்ச்சி நிகழ்வதும் இப்போக பூமியில் அதிகமாக நிகழ்கின்றது. போகபூமியினர் தம் நெடிய வாழ்நாள் முடிவில் ஒரேமுறை ஆணும் பெண்ணுமாகிய இரட்டை மகவுகளை ஈனுவர் என்றும், இறக்கும்போது இவர் உடல்கள் முகில்போலக் கரைந்து மறையும் (சூளா.செய்: 2026,2033, 2035) என்றும் கூறுவர்.

தலைபோகபூமியினர் மூன்று நாளிடையிட்டு கடலை அளவு உணவும், இடைபோக பூமியினர் இரண்டு நாளிடையிட்டு நெல்லிக்கனி அளவு உணவும், கடைபோக பூமியினர் ஒரு நாளிடையிட்டு விளாங்கனி அளவு உணவும் உண்ணுவர். போகபூமியினரின் உடல் வண்ணம் பவளத்தையும், உடல் நாற்றம் சண்பக மலரையும் ஒக்கும். இப்போக பூமி பறவைகள் இவ்வுலகத்தை விட்டால் இதனினும் மேலான நிலங்களிலேயே (சூளா.2036,2037,2038) பிறக்கும்.தீயவர் என்போர் சிறுசிறு தீவுகளில் வாழ்வோரைக் குறிக்கிறது. இதில் அரசர்களும் அடங்குவர். அரசர்கள் மக்கட் பண்பிலிருந்து திரிந்து அதிகாரம் செலுத்தியமையின் அவர்கள் தவமே மேற்கொண்டாலும் அதன் பயனையடையாது தீயவர்களாகவே பிறப்பர்.

திப்பியர் என்போர் பரமாகமங்களை செவியறிவுறுத்துபவரும், செறிந்த புண்ணியமுடையவரும், பரதன் முதலிய சக்கரவர்த்திகளும், பரதனை ஒத்த மன்னரும், கந்தர்வர்களும், வெள்ளிமலையில் வாழ்வோரும் ஆவர். ‘‘பரதன் முதலிய சக்கரவர்த்திகள் என்றது பரதன், சகரன், மகவான், சனக்குமாரன், சாந்திநாதன், குந்துநாதன், அரநாதன், சுபௌமன், பதுமன், அரிசேனன், செயசேனன், பிரமதத்தன், அரையர், அரையவர்’’ [32] ஆகியோரைக் குறித்தது என்பர். குமானுடர் என்போர் வாலும் கொம்பும் வளைந்த பல்லும் கொண்ட ஒழுக்கமும் அறிவும் இல்லாதோர் ஆவார். இவர்கள் கடலிடையே உள்ள சிறு, தனித்த தீவுகளில் வாழ்வோர்.

மனிதர் என்போர் காடும், பொழிலும் உள்ள நிலப்பகுதியில் வாழ்வோரைக் குறித்தது. இவர்கள் தன்வினை களைந்து தவமேற்கொண்டு வீடுபேறு அடைய முயல்வோர் ஆவர். இவ்ஐவகைப் பிரிவும் நிலத்தின் அடிப்படையில் பகுக்கப்பட்டமையை அறியமுடிகிறது. தமிழிலக்கணங்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பிரித்து மக்கள் ஒழுக்கத்தைக் கூறியது போன்று சமணமும் உலக நிலப்பரப்பின் அடிப்படையில் மக்களை ஐவகை நிலத்திற்குரியோராகப் பிரித்துக்காட்டுகிறது.

| | | |
|---|---|---|
| நல்லவர் | - | போகபூமி |
| தீயவர் | - | சிறுசிறுதீவு |
| திப்பியர் | - | மலைபூமி |
| குமானுடர் | - | தனித்தசிறுதீவு |
| மனிதர் | - | காடு, பொழில் பூமி |

என்ற பகுப்பினைச் சமணம் உட்கொண்டுள்ளது.

**மக்கட் பிறப்பின் துன்பம்**

மக்கட் துன்பம்

அடக்கமற்றோர் அடையும் துன்பம்

1. சினம்
2. பொய்
3. மானம்
4. பற்று
5. அவலம்
6. அச்சம்

காரணமாக வரும் துன்பம்

பொதுமக்கள் அடையும் துன்பம்

இடையூறு

உயிரல்பொருள் இடையூறு

1. மிக்க மழை
2. வெள்ளம்
3. புயல்காற்று
4. கரியமலை
5. கற்கள்
6. நஞ்சு
7. படைக்கலன்கள்
8. நெருப்பு
9. இடிமின்னல்

உயிர்ப்பொருள் இடையூறு

1. அணங்கு,பேய் வருத்துதல்
2. அலைச்சல்
3. கொலை
4. விலங்குகள்

நோய்

மனப்பிணி

மெய்ப்பிணி

1. தாமே தீர்வன
2. மருந்தால் தீர்வன
3. மருந்தால் தீராதன
4. மருத்துவர் கலந்த மருந்தால் தீர்வன
5. மருத்துவர் மருந்தால் தீராதன

**தேவகதி (தேவபிறப்பு)**

தேவர்கள் ஐந்து வகைப்படுவர். அதில் பவண தேவர், அக்கினி குமாரர் முதலா சுவணதேவர் இறுவாய் ஒருபஃது வகைப்படுவர். வியந்திரர் எட்டு வகைப்படுவர். சோதிடர் ஐவகைப்படுவர்.



கற்பர், சௌதர்மகற்பம் முதலாக ஆராணகற்பமும் அச்சுத கற்பமும் ஈறாகப் பதினாறு கற்பகவுலகங்கள் உள்ளன. அதில் வாழ்வோர் கற்பர். கற்பக உலகத்திற்கு மேல் வைமானிகர் உலகம் உள்ளது. ''எட்டி மத்திரயம், மத்தியமத்திரயம், உபரிமத்திரயம் என்ற மூன்று பிரிவினையுடைய நவக்கிரைவே யகங்களினும் அவற்றின் மேலுள்ள நவாணு திசைகளிலும் அவற்றின் மேலுள்ள பஞ்சாநுத்தரங்களினும் வாழும் தேவர்கள் வைமானிகதேவர் எனப்படுவர்.''[33] தேவருலகம், பூமியிலிருந்து முதலாவதாக பவண தேவர் உலகமும் அதற்குமேல் வியந்தரர் உலகமும் அதனினும் மேல் சோதிடருலகமும் அதற்குமேல் கற்பருலகமும் அதற்கு மேல் வைமானிகர் உலகமும் அமைந்திருப்பதாகக் கொள்ள வேண்டும். பவணதேவர் உலகத்தில் அக்கினி குமாரர், அஃதாவது பெரும் நெருப்பே முதலாவதாக போற்றுதலுக்குரியது. அடுத்து வருபவை சிறிது சிறிதாக சிறப்பு குன்றுகின்றன. வியந்திரர் உலகத்தில் கின்னரர் முதல் அடுக்கிலும் கிம்புருடர் அதற்குக் கீழ் உள்ள அடுக்கிலும் மற்றவர்கள் அதற்குக் கீழ் உள்ள அடுக்குகளிலும் அமைகின்றனர்.

**தேவகதியின் துன்பம்**

சாக்காடு நெருங்கும் காலத்திலன்றி தேவருக்குத் துன்பமில்லை. சாக்காடு நெருங்கும் போது தேவர்கள் மனதளவில் துன்பப்பட்டு, கண்ணீர் வடித்து, பிறதேவர்களின் கால்களைப் பணிந்து கிடப்பர். இஃது தேவர் பெறும் துன்பமாகும். இதனை ''மரண பயத்தால் மனம் கரையும் ; உடல் மெலியும் ; சூடிய மாலை வாடும் ; தாங்களும் தேவராக இருந்தும் பிற தேவர்களால் சபிக்கப்படுகின்றனர். அவர்தம் ஏவல் கேட்டுத் தாழ்ந்து பணி செய்கின்றனர் ; அவர்களுக்கு அணி மணிகள் செய்து தந்து வருந்துகின்றனர்.''[34] என்ற ஸ்ரீசந்திரன் கூற்றால் அறியமுடிகிறது. சாக்காடு நேரும் காலத்தில் மற்றைய காலங்களில் காம இன்பத்தில் நிலைத்திருப்பர் மனித கதியில் காமம் தீதென்றால் தேவகதியில் மட்டும் சரியா? என்ற வினா எழுகிறது. முறையான காமவின்பம் சரியென்று சமணம் கூறுவது ஈங்கு கருதத்தக்கது.

**பிறப்பறுக்கும் மருந்து**

நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் இம்மூன்றினையும் கடைபிடித்தால் பிறப்பினை அறுக்க முடியும். இஃது **முக்கூட்டு மருந்து** எனவும் **மும்மணி** எனவும் **இரத்தின திரயம்** எனவும்(செய் .116) கூறப்படுகிறது.

**நன்ஞானம்**

ஐயந்திரிவுகளாகிய பிழைகளின்றி உயிர் முதலிய உள்பொருள்களின் இயல்புகளை நன்றாக (செய்.117) உணர்ந்து கோடலே நன்ஞானத்தின் இயல்பாகும். நன்ஞானம், அளவைகளால் கூறப்படுகிறது. அளவையானது காட்சி, காட்சியில்லாதது எனப்பகுக்கப்படுகிறது. இதில் காட்சியளவையானது ஐவகையாகப் பகுக்கப்படுகிறது. “அவையாவன,

1. பொறிக்காட்சி
2. மானதக் காட்சி
3. அவதிஞானக் காட்சி
4. மனப்பரியாய ஞானக்காட்சி
5. கேவல ஞானக் காட்சி

என்பனவாகும்.”[35] பொறிக்காட்சி என்பது ஐம்பொறிகளின் காட்சி வழியே பிறக்கும் ஞானம் ஆகும். மானதக்காட்சி என்பது இன்பதுன்ப இயல்புகள் பொருளாகவும் நினைவு முதலிய அறிவுகள் பொருளாகவும் பிறக்கும் ஞானமாம். அவதிஞானக்காட்சி என்பது முற்பிறப்பை அறியும் ஞானம் ஆகும். மனப்பரியாய ஞானக்காட்சி என்பது பிறருடைய மனதில் உள்ளவற்றை அறியும் ஞானம். கேவலஞானக் காட்சி என்பது உலகில் உள்ள எல்லாவற்றையும், மூன்று கால ஞானத்தையும் உடையதாகும்.




“காட்சியில்லாத அளவைகள் ஐந்து வகைப்படும். அவை, நினைவு, மீட்டுணர்வு, ஊகம் (அனுமானம்), பொய்கூறாமை, முனிவர்களின் ஆகமமொழி ஆகியனவாகும்.”[36] இவற்றிற்கு உருவம் இன்மையினும் ஞானத்தை தரவல்லமையின் காட்சியில் அளவையானது.

❖ நினைவு – இறந்தது தோற்றுவிக்கும்

❖ மீட்டுணர்வு – ஆபோலும் ஆமா என்று ஒற்றுமை, சமம் பற்றி எழுகின்ற பழைய நினைவுகளை மீண்டும் உணர்தலுக்கேதுவான ஞானம்.

❖ ஊகம் – தருக்கம்

**நற்காட்சி**

சிறப்பமைந்த பொருட்கள் மீது அன்பு செலுத்துதல் நற்காட்சியாகும். இஃது எட்டுவகைப்படும். கடவுள், ஆகமம், பொருள், அளவை, நிகழ்ச்சி, இலிங்கம், சாரித்திரம், பலம் ஆகியவை. உலகமூடம், பாசாண்டி மூடம், தேவமூடம் மூன்றும் நற்காட்சியை மறைக்கக் கூடியவை.

**“மூவகை மூடமும் எட்டு மயங்களும்**

**தேர்வகையிற் காட்சிக்க ணில்”**[37]

என்று அருங்கலச் செப்பு கூறுகின்றது. ஐயுறாமையும் வேட்கையுறாமையும் உவர்ப்புறாமையும் மயங்காமையும் செய்குற்றம் நீக்கலும் திரிந்தாரை நிறுத்தலும் காதலுடைமையும் அறங்காட்டலும் என்னும் எட்டுக்கொள்கைகளும் கடைபிடிக்கப்பட்டால் **நற்காட்சி** சிறப்பெய்தும்.

**நல்லொழுக்கம்**

நன்ஞானம், நற்காட்சி இவற்றோடு இணைந்து ஒழுகுதலே நல்லொழுக்கம் ஆகும். “இதனை மேருமந்திர புராணம்,

**‘முன்னுகத் தளவு நோக்கி முன்புபின் பிரியச் செல்லார்**

**இன்சொலும் பிறர்த மக்கும் இதத்தன வன்றிச் சொல்லார்**

**அன்புநீத் துயிரை ஓம்பி அளவமைந் துண்பார் யார்க்கும்**

**துன்புறக் கோடல் வைத்தல் மலங்களைத் துறத்தல் செல்லார்.’**

என்று கூறுகிறது.”[38] இதனையே ஈர்யாசமிதி, பாடணாசமிதி, ஆதானசமிதி, நித்கேப சமிதி, உத்ஸர்க்க சமிதி என்றும் கூறுவர். இத்தகைய அறவுரைகள் முனிச்சந்திர முனிவரால் நீலகேசிக்கும் போதிக்கப்பட்டு நீலகேசி நற்கதியடைய வழிகாட்டப்பட்டது. முனிச்சந்திரர் பஞ்சபரமேட்டிகளில் உபாத்தியாயர் எனும் பிரிவைச் சேர்ந்தவராகக் கருதப்படுகின்றார். நீலகேசிக்கு பாடம் சொன்னமையின் உபாத்தியாயர் எனக் கொள்ளத்தக்கார். பஞ்சபரமேட்டிகளாவர், அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியார், சாதுக்கள் ஆகியோர் ஆவர்.

**கழுவாய்**

நீலகேசி முனிவரைத் வெருட்டியமைக்காக மனம் நொந்தனள். அப்போது முனிவர் அருகக்கடவுள் நெறியான சமணத்தை உலக முழுதும் பரப்புவது நீ செய்த பாவத்திற்கான கழுவாய் என்று கூறினார். கழுவாய் கூறுதலும் உபாத்தியாயர் கடமையாகும். இவ்வாறு சமண அறங்கள் பலவற்றையும் எடுத்தோதியமையின் முனிச்சந்திரர் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.

**குண்டலகேசி**

குண்டலகேசி, நீலகேசி காப்பியத்தில் இடம் பெறும் ஓர் அறமுரைக்கும் மாந்தர் ஆவாள். நீலகேசியோடு வாதிட்டவள். இங்கு குண்டலகேசி உரையில் காணப்பட்ட செய்யுள்களைக் கொண்டே குண்டலகேசி காப்பியம் வடிவமைக்கப்பட்டது. குண்டலகேசியும் நீலகேசியும் வாதிட்டமை கூற்று முறையில் அமைந்தது. இவ்வாதில் குண்டலகேசி தோற்றுப்போயினள். புத்தர், நூல், பொருள் இவற்றைக்கூறி வெல்ல இயலாமையின் புத்தரின் வள்ளன்மையை, புத்த சாதகக் கதைகள் கூறும் பொய்மொழிகளைக் கூறி குண்டலகேசி வாதில் தோற்றனள். எனினும் புத்த அறங்களை உரைப்பதால் அறமுரைக்கும் மாந்தராகின்றாள். குண்டகேசியின் கூற்று வினாவாகவும் நீலகேசியின் கூற்று விடையாகவும் அமைகிறது.

| நீலகேசி கூற்று | குண்டலகேசி கூற்று |
|---|---|
| ஆதிமுதல் பெரியவன் என்பது தவறு. முதலில் இல்லறத்தில் இருந்து பின்னர் துறவறத்திற்கு வந்தவனாகையால் இடையில் பெரியவன் ஆயினான். | புத்தன் ஆதி முதல் பெரியோன். பின்னர் துறவு மேற்கொண்டு அறமுரைத்தான். |
| பிறருக்கு உழைப்பதுபோல புத்த தன்மை பெற உழைத்தான். யாதனையும் வேண்டாதவன் எனின் புத்ததன்மை பெறவும் வேண்டியிருத்தல் கூடாது. | பிறருக்கு உழைப்பவன். யாதனையும் வேண்டான். |
| அவ்வாறெனின் புத்த தன்மையை எல்லா மக்கட்கும் வழங்கியிருக்க வேண்டும். இது அவனின் சுயநலம். | புத்ததன்மைக்காக அல்ல ; அருளுக்காகவே பிறருக்கு உழைத்தான். |
| ஊன் உண்ணுதலை ஆதரிப்பது தவறு. ஆராயாது செல்லாக்காசு என்று பணமுடிப்பை காணாது நோக்கியதைப் போன்றது. | காசுக்கு ஊன் வாங்கி உண்ணல் சரி. வீடுபேறு இல்லை. |
| தீவினை காரணமாகவே பல பிறவிகள் தோன்றும். | புத்தருக்கு பல பிறவிகள் உண்டு. |

| | |
|---|---|
| கொலை, களவு, காமம் எந்நிலையிலும் பாவமெனல். | ஐம்புலனும் ஒன்றாதது கொலை அல்ல ; காலில் பட்டபொன் களவாகாது ; எட்காயளவு நீளம் அழுந்த வையாவிடின் அது காமமல்ல என்று கொலை, களவு, காமத்திற்கு விலக்கு அளித்தல் . |
| அடிமை, பாவத்தின் காரணமாகவே பிறருக்கு உழைத்து, தனக்கென பயன் கொள்ளாதவர் ஆகின்றான். | புத்தன் பிறருக்கு உழைத்து தனக்கென பயன்கொளாப் பெருமையோன். |
| பிறருக்காக முழுவதும் உழைக்காது இடையிலேயே தான் மட்டும் வீடுபேறு அடைதல் நியாயம் இல்லை. | ஒழியாமல் உய்யக் கொண்டோன். |
| ஆசானைப் போலவே மாணக்கரும் பாதியில் ஓடுவர். அவர்கள் வந்து அறமுரைக்கும் அளவும் நாம் விரும்பிய சமயத்தைக் கடைபிடிப்போம். | புத்த சீடர்கள் பிறருக்கு வழிகாட்டுவர். |
| தாயைக் கொன்று பிறந்தவனுக்கு பெருமையில்லை. நீயும் கணவனைக் கொன்றவள் தானே. | புத்தர் தாயின் மருங்குல் வழிவந்த பெருமையுடையோய். |
| இதற்கு பொது அறிவே போதும், நுண்ணறிவு புத்தனுக்கு இல்லையெனல். | புத்தர் கண் முதலா மனமீறா கருவிகள் ஆறென நூல் படைத்தார். |
| கந்தம் மூன்றே. பொருட்பகுப்பில் குற்றம் காண். | கந்தங்கள் ஐவகை என்ற உயரிய பொருள்பகுப்பு. |
| முதற்கணம் என்பது இறந்த காலம். இறந்த காலத்தில் இறந்தவர் பதில் கூறார். | முதற்கணத்தே முழுதும் கெட்டேன். |
| பலவகையுண்டெனினும் முடிவு கூறப்படவில்லை. | முதற்கணத்தே பலவகையுண்டு. |
| வாசனை என்றது உயிரையே குறிக்கின்றது. எனவே உயிருண்டு என்ற சமண கொள்கையை நீயும் ஏற்கின்றாயா? | முதற்கணத்து அறிவை பிற்கணம் வாசனையால் அறியும். |
| உயிர் உண்டு. உடல் அழிந்தாலும் உயிர் விரவி நிற்கும். | உயிர்க்கொள்கை இல்லை. |
| வாதிட இயலாமையே புத்தசாதகக் கதைகளைக் கூறுகின்றாய். | புத்தர் வள்ளன்மை உடையவர். |

இவ்வாறு இருபெண்களும் வாதிட்டு குண்டலகேசி, நீலகேசியால் வெல்லப்பட்டாள். எனினும் பௌத்த அறங்களை எடுத்தோதியமையின் அறமுரைக்கும் மாந்தராகின்றாள்.

**புத்தன்**

நீலகேசி, இப்புத்தனோடும் வாதிட்டு வென்றனள். இப்புத்தன் எனும் மாந்தர்படைப்பு ஓர் ஆசிரியனைக் குறித்தது. ஆத்தன் என்பது தலைவனைக் குறிக்கும் சொல்லாகும். புத்த வாதச் சருக்கத்தில் ஆத்தன் என்பது புத்தனைக் குறித்தது. இவர் அறமுரைக்கும் மாந்தர் ஆவார்.

**ஐங்கந்தங்கள்**

கந்தம் என்பது பொருளைக் குறிக்கும். ஒரு கணப் பொழுதில் தோன்றி மறையும் பொருட்கள் கந்தமாகும். இக்கந்தங்கள் ஐந்து வகைப்படும் எனக் கூறி அதனைப் புத்தன் விளக்கவும் செய்கின்றார். இதன் மூலம் பௌத்தத் தத்துவம் கூறப்படுகிறது. ஐங்கந்தங்களாவன,

1. உருவக்கந்தம்
2. நுகர்ச்சிக் கந்தம்
3. அறிவுக் கந்தம்
4. குறிக்கந்தம்
5. செயற்கந்தம்

**உருவக்கந்தம்**

உருவக் கந்தம் **அட்டகம்** என அழைக்கப்படுகிறது. நீர், நிலம், தீ, காற்று, ஒளி, சுவை, நாற்றம், ஊறு என்ற எட்டும் அட்டகம் எனக் கூறப்படுகின்றன. இவ்வெட்டும் நிலைபெற்றவையாகும்.

| உருவக்கந்தம் | செயல்கள் | இயல்பு |
|---|---|---|
| நிலம் | பொறை | வலிது |
| நீர் | அயர்த்தல் | ஐயது |
| தீ | புலர்த்தல் | வெய்யது |
| காற்று | உளர்த்தல் | இயங்குவது |

**நுகர்ச்சிக் கந்தம்**

1. இன்ப நுகர்ச்சி – நல்வினையால் உண்டாவது (குயலம்)

2. துன்பநுகர்ச்சி – தீவினையால் உண்டாவது (அகுயலம்)

3.சமநிலை நுகர்ச்சி – நல்-தீ வினைகளின் கலப்பால் உண்டாவது (விரவியசமவினை). இவ்வினைகள் மனதால் தோன்றுவன, மொழியால் தோன்றுவன, உடம்பால் தோன்றுவன என மூவகையாகப் பகுக்கப்படுகின்றன.

**அறிவுக்கந்தம்**

ஐம்பொறிகளினாலும் மனத்தினாலும் பிறக்கும் அறிவினையே அறிவுக்கந்தம் என்பர்.

**குறிக்கந்தம்**

குறிக்கந்தமும் மேற்கூறப்பட்ட அறிவுக்கந்தம் போன்றே அறுவகையாகப் பகுக்கப்படுகிறது.

**உயிர்**

ஐவிரல்களும் இணைந்தது கை என்பது போல ஐங்கந்தங்களும் கூடிய கூட்டம் உயிர் என்று கூறப்படுகிறது. உயிரானது இல்பொருள் என்பது புத்த கொள்கையாகும். இவ்வுயிர் மீது பற்றருப்பவர் வீடுபேறு அடைவர். புத்தவாதச்சருக்கத்தில் பல இடங்கள் மணிமேகலையில் கூறப்பட்ட புத்த கொள்கைகளை மறுப்பதாக அமைகிறது. ஆனால் உயிர்க்கொள்கை மட்டும் முரண்படுகிறது. மணிமேகலையில் உயிர் உண்டு என்பதாகக் கூறப்பட்டள்ளது. சாதுவன், நாகர்களுக்கு உயிர் உண்டு என்று அறமுரைக்கின்றார். ஆனால் புத்த வாதச் சருக்கத்தில் புத்தன் உயிர் என்ற ஒன்று தனித்தில்லை என்று கூறுவதைக் காணமுடிகிறது. இஃது முரண்பட்ட இடமாகக் கருதத்தக்கது. புத்தரின் உயிர் கொள்கையாவது உயிர் இல்லை ; மறுபிறப்பு உண்டு என்பதாகும். இக்கூற்று சற்று முரண்பட்டதாக உள்ளது. “ஒரு மனிதன் ஒரு விளக்கை ஏற்றும் போது ஒளியானது ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு கூடுவிட்டு கூடுபாய்வதில்லை. அதேபோல ஓர் ஆசிரியரிடமிருந்து மாணவர் பாடம் கற்கும்போது ஆசிரியரிடமிருந்து அப்பாடம் முழுமையாக மாணவருக்கு இடம் பெயர்ந்து விடுவதில்லை. மிக உயர்ந்த உணர்வில் உயிரென்றவொன்று இல்லவே இல்லை.”[39] இஃதே புத்தரின் உயிர்த்தத்துவமாகும். பௌத்தம் உயிரை அறிவு, சித்தம், விஞ்ஞானம் (நீல. 513) என்ற வேறு சொற்களால் குறிக்கிறது.

**சொற்குற்றம்**

பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் ஆகியவை சொற்களால் ஏற்படும் குற்றங்களாகக் கூறப்படுகிறது. நிலம், நீர், நகர், கலம், தீ, காற்று, காடு, குலம் ஆகிய அனைத்தும் பொய் என்பதாகக் கூறப்படுகிறது.

**கொலை**

பௌத்த கொள்கைப்படி ஐம்புலனும் ஈடுபாட்டுடன் செய்யும் கொலையே குற்றமாகக்கருதப்படுகிறது. ''மரமென்னும் குறிக்கோளால் மகனை வெட்டினானுக்குக் கொலையில்லையாம். காய்தல் என்பது வேண்டவே, கறிதின்னற் பொருட்டாகவும், விளையாட்டு வகையானும் வந்த கொலை கொலையல்லவாம்.''[40] இதனால் கொலை பற்றிய பௌத்த கொள்கை ஏற்கத்தக்கதாக அமையவில்லை. இவ்வாறு புத்தர் பௌத்த அறங்களை எடுத்துரைப்பதால் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.

**அறவழி வாழ்ந்த மாந்தர்கள்**

நீலகேசி காப்பியத்தில் நீலகேசி சமயத்தைப் பரப்புதல் எனும் அறநிலையில் வாழ்ந்ததால் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள்.

**நீலகேசி**

நீலகேசி காப்பியத்தின் தலைவியாக, நீலகேசி என்ற பேய்ப்பெண் இடம்பெறுகின்றாள். இந்நூல் தலைவியாக ஒரு பேய்மகளைப் படைக்கக் காரணம், எம்மதத்தினரும் எச்சாதியினரும் சமணத்தைக் தழுவ இயலும் என்பதை பறைசாற்றுவதற்காகும். ஒரு பேய்ப் பெண்ணுக்கு அருளிய சமயம் பல பாவங்களைச் செய்த தனிமனிதனையும் சமுதாயத்தையும் கூட மன்னித்து ஏற்கும் என்ற பார்வையை உருவாக்க நீலகேசி படைக்கப்பட்டுள்ளாள். நீலகேசி, அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள். முனிச்சந்திர முனிவரை அழிக்க முனைந்து, தோற்று, அவரிடமே மாணவியாகி சமணத்தைப் பரப்பும் தொழிலை சிரமேற்கொண்டொழுகினாள். பத்துச் சருக்கங்களிலும் நீலகேசி இடம்பெறுகின்றாள். பௌத்த மதம், ஆசீவக மதம், சாங்கியமதம், வைசேடிக மதம், வேதமதம், பூதமதம் ஆகியவற்றை எதிர்த்து வாதிட்டு சமணத்தை இவ்வுலகில் நிலை பெறச் செய்கின்றாள். அவ்வாறு வாதிடும் காலத்து சமண அறங்கள் குறிப்பாகக்கொல்லாமை, நிலையாமை பற்றிப் பேசுகின்றாள். குண்டலகேசி, அருக்கசந்திரன், மொக்கலன், புத்தன், பிசாசகன் போன்றோரை வாதிட்டு வெல்கின்றாள்.

பெரும்பான்மை பௌத்தமத எதிர்ப்பாகவே உள்ளது. ஏனெனில் அக்காலக்கட்ட சூழ்நிலையில் சமணத்துக்கு இணையாக பௌத்தமதம் தழைத்தோங்கியிருந்தது.

**நீலகேசி அறம் கேட்டல்**

நீலகேசிபேய், அரசன் மகள் காமலேகையின் வடிவெடுத்து வந்து முனிச்சந்திர முனிவர் கூறிய நால் வகை கதிகள், அவற்றால் விளையும் துன்பங்கள், மும்மணிகள், துறவு, வீடுபேறு போன்றவற்றை அறிந்து சமண சமயத்தைத் தழுவியது. பின்னர் அருகனைப் பணிந்து, புகழ்ந்தேத்தி சமணசமயத்தை உலகிற்குப் பரப்ப விளைந்தது.

**பௌத்தமத எதிர்ப்பு**

கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் பௌத்த மதமே மேலோங்கியிருந்தமையின் அதனைச் சமணம் முழுமுதலாக எதிர்த்தது. குண்டலகேசி, அருக்கசந்திரன், மொக்கலன், புத்தன் போன்ற புத்த துறவிகளைச் சொற்போரில் நீலகேசி எதிர்த்தமைக்கு இதுவே காரணமாகும்.

**குண்டலகேசியை எதிர்த்தல்**

குண்டலகேசி, வாதப்போட்டிக்காக நட்டு வைத்த நாவல் கிளையை முறித்து, நீலகேசி, காம்பிலிமன்னன் அவையில் குண்டலகேசியை வென்றனள். இங்கு நீலகேசி வென்றதாக அரசன் கூறியதற்கு இவன் இருந்த காலச் சூழ்நிலையும் காரணமாகிறது. குண்டலகேசி, காம்பிலிமன்னனின் கோட்டையை முற்றுகையிட்டு, ஆங்கு அரசியல் செயலற்றுப் போகச் செய்தனள். இதனை, நீலகேசி, வாயிற் காவலனிடம் அரசனைக் காண அனுமதிகேட்கும்போது, அவன் கூறிய,

**‘கருங்களிறுங் களிமாவுங் கந்தோடு பந்தியவே**
**நெருங்குபோய் நீருண்ணா தேர்பண்ணா நெடுங்கடைக்குப்**
**பெரும்படையுஞ் சாரதிப் பெண்பாவி மரநட்டிங்**
**கிருந்ததன் றிறத்தினா லெனக்கரிது புகலென்றான்.’(நீல. குண்டல : 167)**

என்ற சொற்களின் மூலம் அறியமுடிகிறது. எனவே தான் நீலகேசியை மன்னன் ஆதரித்து, குண்டலகேசியின் செருக்கு ஒழித்து தன் ஆட்சியைத் தக்கவைத்துக்கொண்டான். குண்டலகேசியின் செயலானது திருவிளையாடல் புராணத்தில் ஏகநாதன், தன் இசைத்திறமையின் காரணமாக பாண்டியன் அவையில் தருக்கித்திரிந்ததைப் போன்றது.

**அருக்கச் சந்திரனை உடன்படுத்தல்**

அருக்கசந்திரன் என்ற பௌத்த துறவி மூலம் அக்காலக் கட்டத்தில் புத்த துறவிகள் மேற்கொண்ட தீய ஒழுக்கங்கள் நீலகேசியால் கடியப்படுகின்றன. தீய ஒழுக்கங்களாக ஊன் உண்ணுதல், சிற்றின்பம் துய்த்தல், களவு போன்றவை குறிப்பிடப்படுகின்றன.

**மொக்கலனை உடன்படுத்தல்**

அக்காலப் பௌத்த துறவிகள் கடல்கடந்து சென்று மதத்தைப் பரப்பினர். அங்ஙனம் பரப்பிய காலத்து மிகுபொருள் ஈட்டி வந்து ஆரவாரமிக்க பள்ளிகள் கட்டி வாழ்ந்தனர். ஆடைகள் அளவில் பெரியதாகவும், அதனையும் நறுமணப்பொடி சேர்த்துப் பயன்படுத்தினர். காலம், கோள், உயிர்க்கொள்கைகளைப் பௌத்தர் மறுதலித்தனர். ஓம்பல் வேட்கை, போக வேட்கை உடையவர் பௌத்தர்கள். இது போன்ற கருத்துக்கள் மொக்கலன் எனும் பௌத்த துறவி மூலம் நீலகேசியால் எடுத்துக்காட்டப்பட்டன. சமணர்கள், நீராடாமைக்குக் காரணம் ‘இயல்பான மனித யாக்கை இயல்பே அதுவாதல்’ என்று நீலகேசி குறிப்பிடுகின்றாள். துறவிகள், கந்தியரை நெருங்க மாட்டார் என்றும் கூறுகின்றாள். சமுதாயத்தில் இழையோடிய குற்றங்களைய “துறவோர் பிச்சைபுகும் இல்லத்து ஆரியாங்கனையைக் காணின் முட்டுப்பாடு கொண்டு மீள்க வென்றும், ஆரியாங்கனைகளும் துறவோரைக் கண்ட வில்லத்தில் பிச்சை கொள்ளாது மீள்கவென்றும், துறவோர் இருக்கும் பள்ளியுள் ஆரியாங்கனை இருக்கப் பெறாரென்றும், ஆரியாங்கனைகளிருக்கும் பள்ளியுள் துறவோர் இருக்கப் பெறாரென்றும் துறவோர் துறவோர் பாற்றுறக்க; ஆரியாங்கனைகள் ஆரியாங்கனைகள்பாற் றுறக்கவென்றும், ஓதுதலும் இங்ஙனமே ஓதுகவென்று விதிக்கின்ற மேலான மெய்ந்நூலுடையார் ஆருகதர்”[41] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஊனுண்டு உயிர்கட்கு அருளுடையோம் எனும் பௌத்த முரண்பாடுகள் கடியப்பட்டுள்ளன. புல், மரம் போன்றவற்றிற்கு உயிரில்லை என்ற புத்த கொள்கையும் நீலகேசியால் மறுக்கப்பட்டு ஆறறிவுயிர் பற்றிய சமணக்கோட்பாடு வலியுறுத்தப்படுகிறது. இதன் மூலம் மொக்கலனையும் சமணத்தைத் தழுவச் செய்கின்றாள்.

**புத்தனை உடன்படுத்தல்**

புத்த வாதச் சருக்கத்தில் விலை கொடுத்து வாங்கி உண்ணப்படும் மீன், ஊன் போன்றவை தீமையல்ல என்ற புத்த தத்துவம் கடியப்படுகிறது. இதனை,

**‘தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்**

**விலைப்பொருட்டா லூன்றருவா ரில்’ (குறள் : 256)**

என வள்ளுவரும் சுட்டிக்காட்டுகின்றார். புத்தமதம் ஊன் உணவு உண்ணுதலை ஆதரிக்கிறது என்பதற்கு மணிமேகலையில் வரும்,

**'மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்**

**தீத்திறம் ஒழிகென' (மணி . ஆதிரை : 116 – 117)**

என்ற அடிகள் சான்றாகும். முதுமையுற்று இறக்கும் விலங்குகளை மட்டும் உண்ணுக என்று புத்தமதம் ஊன் உணவு உண்ணுதலை ஏற்கிறது. மேலும் செத்தவற்றை உண்ணல், என்பதற்கு விளக்கமும் தரப்படுகிறது. ''கொல்லுதல், வெட்டுதல், துண்டித்தல், அடிமைப்படுத்துதல், திருடுதல், பொய் கூறுதல், வஞ்சித்தல், ஏமாற்றுதல், காமத்தவறிழைத்தல், அற்ப சந்தோஷம் தேடல், காமக்களஞ்சியமாயிருத்தல், மாசுடை வாழ்க்கை, கருத்து வேறுபாடுற்று சச்சரவிடுதல், புறங்கூறல், துன்புறுத்தல், ஆள்காட்டல், இரக்கமற்றத் தற்பெருமை, இழிந்தக் கருமித்தனம், சினம், அகந்தை, கிளர்தல், வஞ்சனை, பொறாமை, வீம்புரை, தற்புகழ்ச்சி, சிற்றினஞ்சேரல், இழிவாழ்வு, இகழ்ச்சியுண்டாக்கல், வஞ்சகம், ஏமாற்றுதல், தந்திர உபாயங்கள், தவறான தற்புகழ்ச்சி, சினம்,திருடுதல்–இவைகளே செத்தமிருகங்களை உண்ணுதல் என்றாகும்.'' [42]உண்ணும் உணவு எதுவும் உடலைத் தூய்மையாக்காது எனக் கூறும் புத்தர் பன்றியின் இறைச்சியை உண்டதாகக் கூறப்படுகிறது. ''மீனையும் இறைச்சியையும் உண்ணுவதை புத்தர் தடை செய்யவில்லை''[43] என்று புத்தரும் அவர் தம்மமும் எனும் நூல் குறிப்பிடுகிறது.

இதனை நீலகேசி எதிர்த்து புத்தனோடு வாதிடுகின்றாள். புத்தன் கூறும் ஐங்கந்தங்களுக்கும் குற்றம் கூறுகின்றாள். மேலும் பௌத்தர்கள் குடை, செருப்பு, மண்டை, படுக்கை, இருக்கை, வெள்ளடை மெல்லல் போன்றவற்றில் அவாவுற்றிருத்தலையும் கடிகின்றாள். பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல்லோடு ஏதிலாட்டியோடு பேசுதல், பிறர் மனையாளோடு பேசுதல், காமப்பேச்சு போன்றவையும் சொற்களால் வரும் குற்றங்களாகக் கூறப்படுகிறது. ஐம்புலனால் செய்யப்படுவது மட்டுமே கொலை என்று கூறும் பௌத்தக் கொள்கையை எதிர்த்து, மனதால் நினைத்துச் செய்யாமல் மீளினும் அஃதும் கொலை என்று சமணம் கூறுகிறது. சிற்றின்பம் துய்த்தலுக்கும் பௌத்தம் பல விலக்குகளை அளிக்கிறது. அவற்றையெல்லாம் ஒதுக்கி சிற்றின்பம் தீயது என நீலகேசி சமணத்தின் வழி நின்று வாதிட்டு, புத்தனைச் சமணசமயத்திற்கு உடன்படச் செய்தாள்.

**பிறசமய எதிர்ப்பு**

நீலகேசி, ஆசீவக சமயவாதியான பூரணனையும், சாங்கிய சமயவாதியான பராசரனையும், வைசேடிக சமயவாதியான உலோகசித்துவையும் வேதவாதியான

பூதிகனையும், பூதவாதியான பிசாசகனையும் வாதிட்டு வென்றாள். பிற சமயங்களை முழுமையாக எதிர்த்தாள். கவுந்தியடிகளைப் போலவே அருகனின் புகழ்மொழிகளின்றி வேறு மொழிகளைக் கேளாதவளாக இருந்தாள். இவள் சமணசமயத்தை பரப்பியமையின் அறவழிவாழ்ந்த மாந்தராகின்றாள். சமணம், பௌத்தத்தினும் மேலோங்கியிருந்த சமுதாயப் பின்புலத்தைக் காட்டுவது நீலகேசி ஆகும். பௌத்த பிக்குகள், பிக்குணிகளிடம் காணப்பட்ட ஒழுக்கக் குறைபாடுகளான காமம் மிகல், பொருள் மேல் அவா, ஊன் உண்ணல் போன்றவற்றை உலகிற்கு எடுத்துக்காட்டுவதாய் அமைந்தது. ஒழுக்கநிலையில் இருந்து எவ்விடத்தும் எந்நிலையிலும் மாறாத தன்மை சமணத்துக்குரியதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இவ்வளைந்து கொடுக்கா தன்மையே சமணம் உலகில் நிலைபெறாமல் போனதற்கும் காரணமாகிறது. அரசனுக்கு விலக்குகள் அளித்த சமணம், குடிமக்களிடம் நெகிழ்வுத்தன்மையுடன் இல்லாது போனது அதன் நீதித்தராசின் ஓட்டையைக் காட்டுகிறது. நீலகேசியில் சமணத்தின் முழுமையான ஆதிக்கத்தைக் காண முடிவதால் இஃது ஆதிக்க நிலை ஆகும். இவ்வாறு ஐஞ்சிறுங் காப்பியங்கள் அனைத்தும் சமண சமய வழிநின்று அறத்தை உலகிற்கு எடுத்துக்காட்டியுள்ளன.

## தொகுப்புரை

- யசோதர காவியம், உதயண குமார காவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி ஆகியவை ஐஞ்சிறு காப்பியங்கள் ஆகும். இவை அனைத்தும் சமண சமயம் சார்ந்தவை.
- யசோதர காவியம் ஒரு தழுவல் நூலாகும். இதில் இடம்பெறும் அபயமதி – அபயருசி, சுதத்த முனிவர், அகம்பன முனிவர் ஆகியோர் அறத்தை எடுத்துரைக்கும் மாந்தர்கள் ஆவர்.
- மாரிதத்தன், யசோதரன் ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.
- அபயமதி – அபயருசி ஆகியோர் சமணக் கொள்கையைக் கடைபிடித்தல், யாக்கை நிலையாமை உயர்ந்த உள்ளமுடையவராய் இருத்தல் என்ற நிலைகளில் அறமுரைக்கும் மாந்தராகின்றனர்.
- சுதத்த முனிவர், அருள்ளம் கொண்டவராக அறவுரைகள் கூறுபவராக இடம் பெறுகின்றார்.
- அகம்பன முனிவர், நல்லொழுக்கத்தின் இயல்புகளையும் பயன்களையும் கூறுவதாலும் கொல்லாமை அறத்தைக் கூறுவதாலும் அறமுரைக்கும் மாந்தராகின்றார்.
- மாரிதத்தன், கொல்லாமை, துறவறம் என்ற நிலைகளில் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றார்.
- யாசோதரன் காமத்தை வெறுத்தல், அரச போகத்தை வெறுத்தல், உயிர்ப்பலியிட எண்ணாமை ஆகிய காரணங்களால் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றார்.
- உதயண குமார காவியத்தில் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் மட்டுமே இடம் பெறுகின்றனர். அறத்தை உரைக்கும் நிலையில் மாந்தர் படைப்பு இடம்பெறவில்லை. உதயணன், சதானிகன், பிரச்சோதண், நரவாகனன், யூகி ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்
- உதயணன், செய்நன்றி மறவாமையின் காரணமாகவும் சாதனிகன் கொடைத்திறன் காரணமாகவும் பிரச்சோதனன் பழிக்கு நாணுதல் காரணமாகவும் நரவாகனன் துறவுநிலை காரணமாகவும் யூசி அமைச்சறம் கடைப்பிடித்ததன் காரணமாகவும் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றனர்.
- நாககுமார காவியத்தில் நாககுமாரன், சிரேணிகராசன், சயந்திரன் ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர்.

- நாககுமாரன் பிறருக்குத் தீமை செய்யாது நன்மை புரிந்து நண்பர்களைப் பெருக்கிக் கொண்டமையாலும், உதவும் மனப்பான்மையிலும் நாகபஞ்சமி நோன்பு நோற்றதாலும் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றான். சிரேணிகராசன் அருகனைத் துதித்தமையால் அறமாந்தர் ஆகின்றார். சயந்திரன் நேர்மைத்திறம், கொலை எதிர்ப்பால் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றார்.
- சூளாமணியில் பயாபதி, சாரணர், சுச்சுதன் ஆகியோர் அறமுரைக்கும் மாந்தரகளாகவும் திவிட்டன், சுயம்பிரபை ஆகியோர் அறவழி வாழ்ந்த மாந்தர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.
- பயாபதி, அடக்கமுடைமை, நிலையாமை உணர்த்தல், செவியறிவுறுத்தல், துறவுநிலை ஆகியவற்றில் அறமுரைக்கும் மாந்தர் ஆகின்றார். சாரணர், நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் பற்றிக் கூறுவதால் அறமாந்தர்கள் ஆகின்றனர். சுச்சுதன், அரசறம் – அமைச்சறம் பற்றி எடுத்துரைக்கும் அறமாந்தர் ஆவார்.
- திவிட்டன், யாக்கையைப் பயனுள்ளதாக்கியமையின் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றான். சுயம்பிரபை நோன்பு நோற்றலால் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள்.
- நீலகேசி காப்பியம் முனிச்சந்திரன், குண்டலகேசி, புத்தன் ஆகியோரை அறமுறைக்கும் நிலையிலும் நீலகேசியை அறவழி வாழ்ந்த நிலையிலும் படைத்துள்ளது.
- முனிச்சந்திரன் ஆசிரியர் (உபாத்தியாயர்) என்ற நிலையிலிருந்து அறம் எடுத்துரைத்துள்ளார். தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி இவர் மூலம் விளக்கப்படுகிறது. குண்டலகேசியும் புத்தனும் பௌத்த கருத்துக்களை எடுத்துரைக்கும் நிலையில் அறமுரைக்கும் மாந்தராகின்றனர். நீலகேசி சமண சமயத்தைப் பரப்பும் நிலையில் அறவழி வாழ்ந்த மாந்தராகின்றாள்.

## சான்றெண் விளக்கம்

1. பாக்யமேரி, சமூகவியல் நோக்கில் இலக்கிய வரலாறு, ப. 228.
2. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக்.155 -156
3. ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ), யசோதர காவியம், ப.29.
4. மேலது, ப. 32
5. உண்மை - இதழ், மார்ச் - 2013, ப. 31.
6. ஔவை.சு. துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ), யசோதர காவியம், ப.21
7. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக்.22-30
8. உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு, கோவை - சிறப்புமலர், ப.197
9. ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ), யசோதர காவியம், ப.113
10. மேலது, ப.114
11. பாக்யமேரி, சமூகவியல் நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 229
12. வங்காரம். ஜெ. அப்பண்டைராசன் (உ.ஆ), உதயணகுமார காவியம், ப.101
13. பாக்யமேரி, சமூகவியல் நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 229
14. மேலது, ப. 226
15. பொ.வே.சரோமசுந்தரனார் (உ.ஆ), சூளாமணி, ப. 49
16. பொ. வே. சோமசுந்தரனார் (உ.ஆ), சூளாமணி, ப. 1154
17. ப. கிருஷ்ணமூர்த்தி, உரைசொற் களஞ்சியம், ப. 132
18. தெ.பொ.மீனாட்சிசுந்தரம், சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, ப. 114
19. ஜெ. ஸ்ரீசந்திரன், பஞ்ச பரமேஷ்டிகளும் ஜைன தத்துவமும், ப. 33
20. மேலது, ப. 119
21. மேலது, ப.106
22. வேலாயுத உடையார் முத்துலக்குமி, பண்டைத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், பக்.252 - 254
23. பொ.வே.சோமசுந்தரனார், சூளாமணி, ப.167
24. டி.எஸ். ஸ்ரீபால், தமிழகத்தில் ஜைனம், ப. 22
25. தெ. பொ. மீனாட்சிசுந்தரம், சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, ப. 91
26. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), நீலகேசி, ப. 28
27. ஸ்ரீசந்திரன், பஞ்ச பரமேஷ்டிகளும் ஜைன தத்துவங்களும், ப. 69
28. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), நீலகேசி, ப.35
29. ஸ்ரீசந்திரன், பஞ்சபரமேஷ்டிகளும் ஜைன தத்துவங்களும், ப.115
30. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.20

31. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), சூளாமணி, ப.1227

32. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), நீலகேசி, ப. 68

33. மேலது, ப. 72

34. ஸ்ரீசந்திரன், பஞ்சபரமேஷ்களும் ஜைன தத்துவங்களும், ப.128

35. பொ.வே.சோமசுந்தரனார் (உ.ஆ), நீலகேசி, ப.85

36. மேலது, ப.87

37. மேலது, ப. 93

38. மேலது, ப.95

39. வீ.சித்தார்த்த பெரியார்தாசன், புத்தரும் அவர் தம்மமும், பக். 307 - 308

40. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), நீலகேசி, ப.463

41. மேலது, ப.276

42. வீ.சித்தார்த்த பெரியார்தாசன், புத்தரும் அவர் தம்மமும், ப. 356

43. மேலது, ப.358

காப்பியங்கள் காலந்தோறும் வளர்ச்சி பெற்றுள்ளன. அதில் ஐம்பெருங் காப்பியகளான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவையும், ஐஞ்சிறு காப்பியங்களான யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமார காவியம், சூளாமணி, நீலகேசி ஆகியவையும் குறிப்பிடத்தகுந்தவையாகும். இவற்றில் மணிமேகலை, குண்டலகேசி ஆகியவை பௌத்த காப்பியங்களாகும். ஏனைய அனைத்தும் சமண காப்பியங்களாகும். இச்சமயத்தை அடிப்படையாகக் கொண்டு அறத்தை எடுத்துரைக்கும் மாந்தர்கள் பற்றியும் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் பற்றியும் இவ்வாய்வு எடுத்துரைத்துள்ளது.

வளையாபதி, குண்டலகேசி தவிர்ந்த மற்றைய எட்டுக் காப்பியங்களில் கவுந்தியடிகள், சாரணர், மாடலமறையோன், அறவணவடிகள், மணிமேகலை, சுதமதி, சாதுவன், சுதன்மர் (அ) கணதரர், சாரணர், அபயமதி – அபயருசி, சுதத்த முனிவர், அகம்பன முனிவர், பயாபதி, சாரணர், சுச்சுதன், முனிச்சந்திரன், புத்தன், குண்டலகேசி ஆகிய பத்தொன்பது மாந்தர்கள் அறமுரைக்கும் மாந்தர்கள் ஆவர். கண்ணகி, கோவலன், மாதரி, சாயலன், அவன் மனைவி, ஆபுத்திரன், கோதமை, மாதவி, சீவகன், விசயை, சச்சந்தன், சுரமஞ்சரி, மாரிதத்தன், யசோதரன், உதயணன், சதானிகன், பிரச்சோத மன்னன், நரவாகனன், யூகி, நாககுமாரன், சிரேணிகராசன், சயந்திரன், திவிட்டன், சுயம்பிரபை, நீலகேசி ஆகிய இருபத்தைந்து மாந்தர்களும் அறவழி வாழ்ந்த மாந்தர்கள் ஆவர். இம்மாந்தர்கள் வழி சமண, பௌத்த சமயங்கள் அறத்தை வலியுறுத்தியுள்ளன.

சிலப்பதிகாரம் சமயப்பொதுமையுடைய காப்பியம் என்று கூறப்பட்டாலும் சமண அறங்கள் பெரும்பான்மையும் இடம்பெறுகின்றன. மாடலமறையோன் சமண சமயத்தைச் சார்ந்தவரல்லர் என்றாலும் அறங்களையே எடுத்தோதியுள்ளார். கவுந்தியடிகள் சமண அறங்களைக் கடைபிடித்து வாழ்பவர் என்றாலும் கொல்லாமை போன்ற அறங்களைக் கூறியமையின் அறமுரைக்கும் மாந்தராகின்றார். கண்ணகியின் கற்பைத் தெய்வக் கற்பு என்பவர். எனினும் அதற்கும் மேலான அறக்கற்பு கண்ணகியுடையது என்பது இவ்வாய்வில் விளக்கப்பட்டுள்ளது. மணிமேகலை காப்பியம் பௌத்த அறக்கருத்துக்களை எடுத்துரைக்கின்றது. மணிமேகலை, பெரும்பான்மை அறவழி வாழ்ந்த மாந்தராக இருப்பினும் சிலவிடங்களில் அறத்தை எடுத்துரைப்பதனால் அறமுரைக்கும் மாந்தராகின்றாள். மற்றைய காப்பியங்கள் அனைத்தும் சமண அறங்களையே எடுத்துரைக்கின்றன.

சமணம் அரசறத்தை மட்டும் போற்றியமையை மற்றைய காப்பியங்களில் காணமுடிகிறது. சிலப்பதிகாரம் அதிலிருந்து வேறுபட்டு குடிமக்கள் கடைபிடிக்க வேண்டிய அறங்களைச் சுட்டுகிறது. பெண்ணைப் போற்றாத சமணம், ஒரு பெண்ணைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது. எனினும் இக்காப்பியத்திலும் பெண்ணுக்கு வீடுபேறு இல்லை. பெண்துறவி (கவுந்தியடிகள்) என்ற நிலையில் ஒரோவழி வீடுபேறு உண்டு என்று கொண்டாலும், குலமகளிர் கற்புடைமையின் (கண்ணகி) காரணமாக தேவருலகை அடையமுடிந்ததேயன்றி வீடுபேறு அடைய வழிஇல்லை. பெண், தேவநிலையினின்று மனிதகதிக்கு மீண்டும் ஆணாகத் தோன்றி தன் பாவங்களைப் (மதுரையை எரியூட்டல்) போக்கிய பின்பே வீடுபேறு கிட்டும். இதுவே சமணம் வலியுறுத்தும் அறமாகும். சமணம் ஒரு ஆணியச்சமயமாக காலந்தோறும் காட்சியளித்துள்ளது. சமணத்தை ஏற்கும் காலக்கட்டத்தை சிலப்பதிகாரம் விளக்குகிறது. எனவே இதனை, ஏற்பு நிலை என்று கூறயியலும்.

பௌத்த காப்பியங்களில் முழுமையாகக் கிடைப்பது மணிமேகலை ஒன்றேயாகும். இஃது முழுமையாக பௌத்த சமயத்தையும் அதன் தத்துவத்தையும் எடுத்துக் கூறுகிறது. பெண்ணுக்கு ஒரளவு உரிமை அளித்த சமயம் பௌத்தம் ஆகும். ஆனாலும் ஆண் வேடம் பூண்டு பெண், சமயத்தைப் பரப்புவதாகப் படைத்து, பெண்ணுக்குரிய எல்லைக்கோட்டை பௌத்தமும் காட்டவே செய்கிறது. மணிமேகலை பல சமுதாயப் புரட்சிகளைச் செய்துள்ளது. சிறையொழிப்பு, சாதியொழிப்பு மட்டுமின்றி பசிப்பிணியொழிப்பு பேசப்பட்டுள்ளது. ‘தனிஒருவனுக்கு உணவின்றேல் இச்சகத்தினை அளித்திடுவோம்’ என்ற பாரதியின் முழக்கத்தை முன்னதாகவே மணிமேகலையில் காணமுடிகிறது. அறங்களுக்கெல்லாம் தலையாயதாக பசிப்பிணி போக்கல் எனும் அறம் வலியுறுத்தப்படுகிறது.

தொல்காப்பியர் காலத்திலிருந்து போற்றப்பட்ட இந்திர வழிபாடு பக்தி இலக்கிய காலத்தில், தடைசெய்யப்பட்டது என்பர். அதற்கு உதாரணமாக திருமால் கோவர்த்தன கிரியை குடையாகப் பிடித்து இந்திர வழிபாட்டைத்தடுத்தமையைக் குறிப்பிடஇயலும். இந்திரன் – அகலிகை கதை மூலமும் இந்திரன் தவறுடையவனாகச் சித்தரிக்கப்பட்டு இந்திர விழா தடை செய்யப்பட்டது. அதேபோல பழமைமிக்க இந்திர வழிபாடு மணிமேகலை காப்பியத்தினாலும் மறைக்கப்பட்டது. இந்திரன் பசிப்பிணி தீர்க்கும் அறச்செயல் செய்பவனை (ஆபுத்திரன்) தடுக்கும் தெய்வமாகவும், வழிபட மறந்தமையின்

ஊரையே கடல் கொள்ளச்செய்த அழிவு தெய்வமாகவும் படைக்கப்பட்டுள்ளான். இஃது பௌத்தம் வைதீக சமயங்களை எதிர்த்தமையைக் காட்டுகிறது. சமணத்திலும் வைதீக சமயங்கள் அதிக காழ்புணர்வுக்குரியதாக பௌத்தத்தால் கருதப்பட்டன. பௌத்தத்தை பரப்புதல் என்ற நோக்கம் மணிமேகலையின் பின்புலமாக அமைகிறது. இஃது சமணத்தினை எதிர்க்கும் காலகட்டமாகையால், இதனை எதிர்நிலை என்று குறிப்பிட இயலும்.

திருத்தக்கத்தேவர் சமணர் என்பதும் அவர் இயற்றிய சீவகசிந்தாமணி சமண நூல் என்பதும் யாவரும் அறிந்த உண்மையாகும். சமண சமயக் கருத்துக்கள் இங்கும் பேசப்படுகின்றன. சமணம் ஒழுக்கத்தை தலையாய அறமாகக் கருதுகின்றது. ஆயினும் அரசனுக்கென்று தனிப்பட்ட ஒழுக்க அறங்களை வலியுறுத்துகிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்பது அறமென்றாலும் அரசனுக்கு பலதாரமணத்தை அனுமதிக்கிறது. ஒரு பெண்ணிடம் அன்பு கொண்டு அரசை இழப்பதை விட, பல பெண்களிடம் உண்மையான அன்பு கொள்ளாவிட்டாலும் அரசைக் காப்பது அறம் என்பதாக வலியுறுத்தப்பட்டுள்ளது. பெண் என்பவள் வெறும் போகப் பொருள் என்பதும் அரசை கட்டிக்காக்க பயன்படக்கூடிய படைபல ஆளுமையைத் தரும் பொருள் என்பதுமாகவே சமணம் கருதுகிறது. இக்கருத்தே சீவகசிந்தாமணியிலும் எதிரொளிக்கிறது. அறிவுள்ளவன் அமைச்சன் என்பதால் அவனினும் உயர்ந்த அறிவும் வீரமும் கொண்ட அரசன் ஆளுமைக்குரியவன் என்று அரசறம் போதிப்பது சீவகசிந்தாமணியாகும்.

வளையாபதி, குண்டலகேசி ஆகியவை முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. குண்டலகேசியை, நீலகேசி காப்பியவழி அறிய முடிகின்றது. ஆனால் வளையாபதி முழுமையாக வைதீக சமயங்களால் மாற்றம் பெற்றுள்ளது. இவ்விரு காப்பியங்களிலும் அறம் பேசப்பட்டுள்ளது. அவை பொதுவான சமுதாய அறங்களேயாகும்.

யசோதர காவியம் மறுபிறவிக்கு, கொள்கைகளை வலியுறுத்தும் காப்பியமாகப் படைக்கப்பட்டுள்ளது. தேவகதி, மனிதகதி, விலங்குகதி, நரககதி பற்றி விரிவாகப் பேசுகிறது. உயிர்ப்பலியிடுதலைக் கடுமையாக எதிர்க்கின்றது. மனதால் குற்றமின்மை உயரிய அறமாகக் கருதப்படுகிறது. மாவினால் உருவம் செய்து பலியிடும் முறையை அறிமுகப்படுத்தியது இக்காப்பியம் ஆகும். இதன் தொடர்ச்சியாக இன்றைய நேர்த்திக்கடன்களில் மாவிளக்கு போடுதல் எனும் சடங்குமுறை உருவாக்கம் பெற்றது. மக்களின் மனங்களில் மறுபிறவி பற்றிப் பயத்தை ஏற்படுத்தி அதன் மூலம் அறத்தைப் பரப்புவது இக்காப்பியத்தின் பின்புலமாக அமைகிறது. சமணம் செல்வாக்குப் பெற்றிருந்த

காலத்தை யசோதர காவியம் எடுத்துக்காட்டுவதால், இதனை செல்வாக்கு நிலை எனக் குறிப்பிட இயலும்.

இக்காப்பியம் வடமொழியினின்று மொழிப்பெயர்க்கப்பட்டாலும் உதயணன் ஒரு தமிழன் எனப்பேராசிரியர் மதிவாணன் அவர்கள் கருதுகின்றார். ஏனெனில் அவன் பைசாச பிராகிருதம் என்ற மொழியைப் பேசினான். இஃது ஆரியப்படுத்தப்பட்ட தமிழேயாம். அவன் கி.மு.500 இல் ஆட்சிசெய்தான். அத்தமிழன் வழி தமிழ் கூறும் நல்லுலகத்தில் சமணத்தைப் பரப்ப வேண்டும் என்பது ஆசிரியரின் உள்ளக் கிடக்கையாக இருத்தல் கூடும். சமணம் அரசனை உயர்வுபடுத்தி அதன்வழி சமண அறத்தைப் பரப்ப விழைந்தது. அரசறத்தை முன்னிலைப்படுத்துகிறது. அடுத்தபடியாகவே கொல்லாமை, ஊன் உண்ணாமை, பொய்யாமை, அகிம்சை, கள்ளாமை போன்ற சமண அறங்கள் கூறப்படுகின்றன.

நாககுமார காவியம், சீவகசிந்தாமணியை விட அதிகமான மணங்களைச் சுட்டியுள்ளது. நாககுமாரனுக்கு 520 மனைவியர் என்று படைக்கப்பட்டுள்ளது. அறத்தைக் கூறுவதற்கான மாந்தர் படைப்புகளே இல்லை எனும்படியாக காப்பியம் அமைந்துள்ளது. சமணம் கூறும் ‘நோன்பு நோற்றல்’ பற்றி இக்காப்பியம் பேசுகின்றது. கதைத்தொடர்ச்சியோ நல்லறச் சிந்தனைகளோ இதில் காணமுடியவில்லை. சமண சமயம் நன்கு வளர்ச்சி பெற்றதன் காரணமாகவே மக்களிடத்தும் பரவியிருந்தன. எனவே இதனை ‘வளர்ச்சிநிலை’ என்று கூற இயலும்.

சூளாமணி பெருங்காப்பியத் தகுதி பெற்றது என்று கூறப்படுகிறது. தேவநிலையையும் மனித நிலையையும் இணைத்து இக்காப்பியம் படைக்கப்பட்டுள்ளது. சமண சமயத்தில் வாசுதேவன், பலராமன் போன்ற தெய்வ நிலைகள் சுட்டப்பட்டமையை இக்காப்பியம் எடுத்துரைக்கிறது. சமணத்தின் பல சிந்தனைகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. மனிதர்களும் தேவர்களுக்கு நிகராய் மேலோங்கிய காலத்தைச் சுட்டுகிறது. எனவே இதனை, ‘மேலோங்கிய நிலை’ என்று கூற இயலும்.

சமணம், பௌத்தத்தினும் மேலோங்கியிருந்த சமுதாயப் பின்புலத்தைக் காட்டுவது நீலகேசி ஆகும். பௌத்த பிக்குகள், பிக்குணிகளிடம் காணப்பட்ட ஒழுக்கக் குறைபாடுகளான காமம் மிகல், பொருள் மேல் அவா, ஊன் உண்ணல் போன்றவற்றை உலகிற்கு எடுத்துக்காட்டுவதாய் அமைந்தது. ஒழுக்கநிலையில் இருந்து எவ்விடத்தும்

